KALKI 14.6.98 ரூ. 4.50

# கல்கி

லவச இணைப்பைக்
கட்டு வாங்குங்கள்!



"ஜெ. என் மகள்
மாதிரிதான்–
இப்போதும்கூட!"

ஹெக்டே
சிறப்புப் பேட்டி!

# ஆசையா இருக்கு ஆனா...



"மத்தவங்களைப் போல மடமடன்னு இங்கிலீஷ்ல பேசணும்னு ஆசையாத் தான் இருக்கு. ஆனா... ஏதாவது தப்பா பேசிடுவோமோங்கற பயத்துனால வாயிலேருந்து வார்த்தை வெளியே வர மாட்டேங்குது"

நீண்ட நாட்களாக உங்களிடமுள்ள இப்பிரச்சினைக்கு இன்றே, இப்பொழுதே முற்றுப்புள்ளி வைத்து விடுங்கள். உளவியல் அடிப்படையில் உருவாக்கப் பட்டுள்ள விவேகானந்தாவின் ஹைபவர் இங்லிலீஷ் கோர்ஸில் சேர்ந்து தயக்க மின்றி, தைரியமாகப் பேசப் பயிற்சி பெறுங்கள்.

**மூன்றே மாதங்களில் உங்களிடம் ஏற்படும் மகத்தான மாற்றத்தைக் கண்டு நீங்களே வியப்படைவீர்கள் !**

**விவேகானந்தாவின் ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸ்**

LEVEL - 1 (அடிப்படை ஆங்கிலம்) ABCD யிலிருந்து தொடங்கி ஆங்கில வார்த்தைகளை எழுத, படிக்க எளிய முறையில் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ. 175/- மட்டுமே.

LEVEL - 2 (இலக்கணப் பயிற்சி) ஆங்கில இலக்கணத்தை முழுமையாகக் கற்றுக் கொண்டு பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத முறையாகப் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ.225/- மட்டுமே.

LEVEL - 3 (ஸ்போக்கன் இங்கிலீஷ்) தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் சரளமாகப் பேச நவீன முறையில் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ. 250/- மட்டுமே.

LEVEL - 2&3 இரண்டு பிரிவுகளிலும் சேர்ந்து பயிற்சி பெற ரூ. 375/- மட்டும் செலுத்தினால் போதும்.

LEVEL - 1,2&3 மூன்று பிரிவுகளிலும் சேர்ந்து பயிற்சி பெற ரூ. 525/- மட்டும் செலுத்தினால் போதும்.

முன் பணம் அனுப்ப வேண்டியதில்லை. அருகிலுள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள். பாடங்களை V.P.P.யில் அனுப்புகிறோம்.

நான் விவேகானந்தாவின் ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸில் சேரவிரும்புகிறேன். எனக்குப் பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். தபால்காரரிடம் பணத்தைச் செலுத்திப் பாடங்களைப் பெற்றுக் கொள்கிறேன். (தேவையான கட்டத்திற்குள் ✔ குறியிடவும்)

LEVEL-1 ☐ பெயர் : ..............................

LEVEL-2 ☐ முகவரி : ..............................

LEVEL-3 ☐ ..............................

LEVEL-2&3 ☐ ..............................

LEVEL-1,2&3 ☐ .................... பின்கோடு ....................



177

**VIVEKANANDA INSTITUTE**

KLK

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை - 600 017.

**நேரடியாகப்பயிற்சி பெற விரும்புவோர் கீழ்க்காணும் பயிற்சி மையத்துடன் தொடர்பு கொள்ளவும்.** சென்னை 9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை - 17 ★ 18, ராமசாமி தெரு, சண்முகம் ரோடு, மேற்கு தாம்பரம், சென்னை - 45 ★ 30, மேடவாக்கம் டாங்க் ரோடு, (E.S.I. ஆஸ்பத்திரி அருகில்) கீழ்ப்பாக்கம், சென்னை - 10 திருச்சி சேஷாடவர்ஸ், 23c/5, கீழசிந்தாமணி, (E.R. ஸ்கூல் எதிரில்) திருச்சி - 2 சேலம் சென்ட்ரல் கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ் (மேம்பாலம் அருகில்) 77, முள்ளுவாடி மெயின் ரோடு, சேலம்- 1 வேலூர் 9, நீலிகிடங்கு தெரு, மம்மி ஆஸ்பத்திரி அருகில், வேலூர்-1 தஞ்சாவூர் 1263/1, தெற்கு வீதி, (பாரதமாதா புக்டெப்போ மாடியில்) தஞ்சாவூர்-9 ஈரோடு 611, பிரப் ரோடு (டெலிபோன் பவன் அருகில்) ஈரோடு - 1 கோயம்புத்தூர் ஸ்ரீ கிருஷ்ணா டவர்ஸ், 515, டாக்டர் நஞ்சப்பா ரோடு, காந்திபுரம், கோயம்புத்தூர் - 18. பாண்டிச்சேரி 326, அம்பலத்தாடையார் மடத்து வீதி (அண்ணா சாலை அருகில்) பாண்டிச்சேரி - 1 மதுரை 26 A, கன்னாரப்புக்காரத் தெரு, (கூடலழகர் பெருமாள் கோவில் அருகில்) மதுரை-1 திருப்பூர் K.P.N. காலனி முதல் தெரு, சங்கீதா தியேட்டர் மெயின் ரோடு, திருப்பூர்-1. ஹைதராபாத் 5A லெனைன் எஸ்டேட், அபிட்ஸ், ஹைதராபாத்-2. திண்டுக்கல் 7, E.V.R. சாலை, 80 அடி ரோடு, மேற்கு அசோக் நகர், திண்டுக்கல் - 1.

• ரஜினியின் அடுத்த படம் பற்றி அவ்வப்போது சேதிகள் சில வந்தாலும் அவை எதுவும் நிஜம் இல்லை என்பதுதான் செய்தி. இன்றைய அரசியல் சூழப்பத்தில் சினிமாவே வேண்டாமென்று கம்மென்றிருக்கிறார். ஆனால், பலரிடம் கதைகள் மட்டுமே கேட்டுக் கொண்டிருக்கிறார். நிச்சயமாய் இந்த வருடம் ரஜினி படம் பற்றிய அறிவிப்பு வரவே வராது. அதுவும் இந்த வருட இறுதிக்குள் இன்றைய அரசியல் குழப்பம் நீங்கி ஒரு தெளிவு தெரிந்தால் மட்டுமே அடுத்த வருடம் அறிவிப்பு வரும். அரசியலில் தமக்குச் சாதகமான சூழலை எதிர்நோக்கிக் காத்திருக்கிறார் ரஜினி. அதற்கப்புறம்தான் சினிமா.

• 'அன்புள்ள காதலுக்கு' என்று படமெடுத்துக் கொண்டிருக்கும் மாஜி மோகன் 'அன்புள்ள சண்டைக்கு' என்று பெயர் வைக்காத குறையாய் சண்டைக்காரராக மாறி விட்டார். படத்தின் ஒளிப்பதிவாளர் தரனின் உதவியாளரோடு 'குஸ்தியில்' இறங்கி, இனி ஷூட்டிங் ஸ்பாட் பக்கமே எட்டிப் பார்க்கக் கூடாது என்று அன்புக் கட்டளையிட்டு விட்டார். அந்த உதவியாளர் இல்லாமல், தாம் பணிபுரிய முடியாது என்று ஒளிப்பதிவாளர் போர்க் கொடி பிடிக்க, அவரோடும் 'குஸ்தி'. தமது மாமியாரின் ஊரான ஆஸ்திரேலியாவில் பாடல் காட்சிகளைப் படமாக்கலாம் என்று திட்டம் போட்டிருந்தார். ஒளிப்பதிவாளரோடு ஏற்பட்ட மோதலில் காலதாமதமாக, தம் ஊரான பெங்களூரிலேயே பாடல் காட்சிகளை சுட்டுத் தள்ளி விட்டார். இதை சுட்டுத் தள்ளியவர் வேறொரு ஒளிப்பதிவாளர்.

• இனி சினிமா கைகொடுக்கப் போவதில்லை என்று முடிவு செய்து விட்டார் சுவாதி. அதனால் வேறு பிஸினஸ் ஏதாவது பண்ணப் போகிறாரா என்ன என்கிறீர்களா? அதுதான்

# ரஜினியின் அடுத்த படம் எப்போது?

கல்கி இண்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com
ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in

இல்லை. கல்யாணம் செய்து கொள்ளப் போகிறார். கணவராக வரப் போகிறவர் எப்படிப்பட்டவராக இருக்க வேண்டும் என்பதற்கு சுவாதியின் ஐந்து கட்டளைகள். ஒன்று : அவர் வெளிநாட்டில் வசிப்பவராக இருக்கக் கூடாது. இரண்டு : தொழிலதிபராக இருக்க வேண்டும். மூன்று : தொழிலதிபராக இருந்தாலும் சினிமா சம்பந்தமில்லாத நபராக இருக்க வேண்டும். நான்கு : ஏற்கெனவே திருமணமானவராக இருக்கக் கூடாது. ஐந்து : மதுவை முகர்ந்து பார்க்கவும் தெரியாதவராக இருக்க வேண்டும். இந்த ஐந்து கட்டளைகளோடு சுவாதிக்கு மாப்பிள்ளை தேடி அலையும் தோழிகள் இருவர். முதலாமவர், விசித்ரா. இரண்டாமவர் வினோதினி. தோழிகளின் தயவில் சுவாதிக்கு நல்ல வரன் கிடைத்தால் சரி தான்.

● 'சின்னத் தம்பி'யின் வெற்றியை வைத்து மட்டுமே பத்துப் படங்களுக்கு மேல் தயாரித்து விட்டார் கே.பி. பிலிம்ஸ் திருப்பூர் பாலு. வருடத்திற்கு இரண்டு படங்களாவது கொடுத்துக் கொண்டிருந்தார். போறாத காலம். 'கல்யாண கலாட்டா' படம் முடிந்து வியாபாரம் ஆகாமல் பெட்டியில் கிடக்கிறது. பாரதிராஜா இயக்கத்தில் 'வாக்கப் பட்ட பூமி'யை இன்னும் தொட்டுக் கூடப் பார்க்க முடியவில்லை. இருந்தாலும் 'பெண் ஒன்று கண்டேன்' என்ற படத்தை சத்யராஜை கதாநாயகனாகப் போட்டு, ஆரம்பித்தார். பத்து நாட்கள் படப்பிடிப்பும் நடந்தது. சத்யராஜுக்கு ஜோடியாக கன்னடத்து கதாநாயகி 'பிரேமா' நடித்தார். இதிலும் என்ன பிரச்னையோ பிரேமா நடித்ததை தூக்கிக் குப்பையில் போடச் சொல்லி விட்டார். பிரேமாவுக்குப் பதில் தேவயானியை ஒப்பந்தம் செய்ய அலைந்து கொண்டிருக்கிறார். சோதனை மேல் சோதனை போதுமடா சாமி என்று பாடாத பாக்கிதான். இன்னும் கொஞ்ச நாட்களில் அப்படிப் பாட வேண்டி வந்தாலும் வரும் என்று அவரே சொல்லிக் கொண்டு திரிவதுதான் வேதனை மேல் வேதனை.



• தேவயானி

• சுவாதி

● மென்மையான காதல் புருஷனாக நடிப்பது மலையேறிப் போய், ஆக்ஷன் ஹீரோவாக அவதாரமெடுத்துக் கொண்டிருக்கிறார் அரவிந்த்சாமி. இப்போது நடித்துக் கொண்டிருக்கும் 'என்ஜினியர்', 'முதல் முதலாக', 'என் சுவாசக் காற்றே' – மூன்று படங்களிலும் கோபம் முறுக்கேறிய பார்வைதான் அரவிந்த்சாமிக்கு. மூன்றில் முதலில் வெளியாகப் போகும் 'என் சுவாசக் காற்றே' படத்தில் ஒரு ஹை-டெக் திருடன் வேடம். கம்ப்யூட்டர் புரோக்ராம்களை திருடி கோல்மால் பண்ணி கோடி கோடியாய் சம்பாதிக்கும் கேரக்டர். ஒரு படத்தில் சேர்ந்து நடித்த நாயகியோடு அடுத்த படத்தில் ஜோடி சேர்ந்ததில்லை இந்த சாமி! படத்துக்குப் படம் புதுப்புது நாயகிகள்தான்!

● சில முக்கிய நடிகர்கள் தவிர 'மருதநாயக'த்திற்காக ஒப்பந்தமாகும் புது நடிகர்கள் 'மருதநாயகம்' வெளிவரும் வரை வேறு எந்தப் படத்திலும் நடிக்கக் கூடாது. இது கமல்ஹாசனின் முக்கிய கண்டிஷன். ஷூட்டிங் ஆரம்பித்ததிலிருந்து முடியும் வரை நடிக்கும் நடிகர்களுக்கு மாதச் சம்பளம்தான். நடிகர்களுக்கு மட்டுமல்ல – யூனிட்டைச் சேர்ந்த மற்றவர்களுக்கும்தான். படத்தின் படப்பிடிப்பு வருடக்கணக்கில். அதனால்தான் இப்படியொரு முடிவு. ●

— மஹேந்த்

**பா.ஜ.க. அரசின் முதல் பட்ஜெட் எப்படி? கருத்துக் கூறுகிறார் சி.ஏ. மாணவியான வித்யா.**

இந்த பட்ஜெட் பணவீக்கத்தை ஏற்படுத்தாது என்று கூறப்படுகிறது. ஆனால் அது சாத்தியம் என்று தோன்ற வில்லை. சமீப காலத்தில், பண வீக்க விகிதம் அதிகரித்துக் கொண்டே வரு கிறது. இது இன்னும் உயர்ந்து ஏழு சதவீதத்தைத் தொடுவதும் சாத்தியம்தான். இதனால் விலைவாசி மேலும் உயரும் என்பதில் சந்தேகமே இல்லை.

சாலைகள் மேம்பாடு என்ற நோக்கத் துக்காக பெட்ரோல் விலையில் ஒரு ரூபாய் உயர்த்தப்பட்டுள்ளது. விட்டருக்கு ஒரு ரூபாய் என்பது இன்றைய நிலையில் அதிகமில்லை என்று வாதிடலாம். ஆனால் பெட்ரோல் விலை உயர்வு, ஒட்டு மொத்த விலைவாசி உயர்வுக்கு வழிகோலும் என்பதை மறுக்க முடியுமா?

வருமானவரி செலுத்துபவர்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டும் என்கிற நோக்கத்துடன், ஏற்கெனவே உள்ள நாலு கிரைடீரியாக்களுடன் (சொந்த வீடு, டெலிபோன், அயல்நாட்டுப் பயணம், சொந்தமாகக் கார்) இன்னும் இரண்டைச் சேர்த்திருக்கிறார் நிதி யமைச்சர் (கிரடிட் கார்டு, மேல் தட்டு மக்களுக்கான கிளப் உறுப்பினர்) புதிய இரண்டில், கிரடிட் கார்டு வைத்திருப்ப வர்களையும், இன்கம்டாக்ஸ் ரிடர்ன் சமர்ப்பிக்க வேண்டும் என்று கொண்டு வந்திருப்பது, புத்திசாலித்தனமான முடிவு. ஆனால், பெரிய கிளப் உறுப்பினர்கள், ஏற்கெனவே உள்ள நாலு கிரைடீரியாக் களில் அடங்கிவிடுவார்கள். அதனால் பெரிய அளவில் பலன் இருக்கும் என்று தோன்றவில்லை. இந்த ஆறு பிரிவுகளில் ஏதாவது ஒன்றில் வந்தாலும், வருமான வரி ரிடர்ன் செலுத்த வேண்டும் என்று அறிவித்திருப்பது வரவேற்கத்தக்கது.

மிக எளிதான இன்கம் டாக்ஸ் ரிடர்ன் அறிமுகப்படுத்தப்படும் என்று சொன் னாலும் வருமானவரி என்றாலே, எதற்கும் ஒரு சார்ட்டர்டு அக்வுண்டென்ட்டை கலந்தாலோசிப்பது பெட்டர் என்ற மனப்பான்மையே இன்று நிலவுவதால், எங்கள் பிசினஸ் பெருகும் வாய்ப்பு ஏற்பட்டுள்ளது!

தனியார் துறை இன்சூரன்ஸ் பற்றி பட்ஜெட்டில் குறிப்பிடப்படு கிறது. பல்லாண்டுகளாக ஏக போக ஆட்சி செலுத்தி வரும் எல்.ஐ.சி. போன்ற இன்சூரன்ஸ் கம்பெனிகளுடன், எப்படி தனியார் கம்பெனிகள் போட்டி போட முடியும் என்பதைப் பொருத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

வருமானவரி வரம்பு + ஸ்டாண்டர்டு டிடக்ஷன் இரண்டு மாய்ச் சேர்த்து எழுபத்தி ஐயா யிரம் வருகிறது. இன்றைய விலை வாசி, சம்பள விகிதம் இவற்றைக் கணக்கில் கொண்டு, இன்னும்

# பட்ஜெட்!



# மாணவ விமர்சனம்

கொஞ்சம் நிவாரணம் கொடுத்திருக்கலாம் என்று நான் நினைக்கிறேன்.

சீஸ், வெண்ணெய், டீ முதலியவை மீது வரி உயர்த்தப்பட்டுள்ளது. சீஸ், வெண் ணெய் போன்றவை மீது ஓ.கே. டீ என் பது சமானியன் சம்பந்தப்பட்ட விஷயம். கொஞ்சம் கனிவு காட்டியிருக்கலாம்.

மொத்தத்தில், சாமானிய மக்களுக்கு சிரமங்களை அதிகரிக்கச் செய்கிற பட்ஜெட் இது என்பதே என் அபிப்ராயம்.

தொகுப்பு : **மானஸா**

கென்யா அணிதான் கிரிக்கெட் அணிகளிலேயே ஜூனியர் அணி. காரணம், எல்லா நாடுகளாலும் அங்கீகரிக்கப்பட்டு, 'எங்களுடன் விளையாடலாம்' என்று இணைத்துக் கொள்ளப்பட்ட கடைசி அணி கென்யா அணி என்பதுதான்! 96-ல் இந்தியாவில் நடந்த உலகக் கோப்பையின் போது 'லாரா' உட்பட பல ஜாம்பவான்கள் விளையாடிய வெஸ்ட் இண்டிஸ் அணியை வெற்றிக் கொண்ட போதுதான் வெளிச்சத்துக்கு வந்தது இந்த அணி. தற்போது கோகோ கோலா கப்பில் இந்தியாவையே குவாலியரில் தோற்கடித்த போது, கென்யாவின் விளையாட்டுத்திறன் சந்தேகத்துக்கிடமின்றி நிரூபிக்கப்பட்டு விட்டது. கென்யாவின் கேப்டன் அசிப் கரீமை கல்கத்தாவில் கோகோ கோலா கப் இறுதி ஆட்டம் தொடங்குவதற்கு முன்பாகச் சந்தித்துப் பேசினோம்...

**"அசிப் கரீம் என்கிற பெயர் இந்தியர் – பாகிஸ்தானியர் பெயர் போலத் தெரிகிறதே?"**

"யெஸ். நான் ஒரு வகையில் இந்தியாவைச் சேர்ந்தவன்தான். எனது மூதாதையர் இந்தியாவைச் சேர்ந்தவர்கள். நாலு தலைமுறையாகக் கென்யாவில் செட்டில் ஆகியிருக்கிறோம். இங்கே ஐதராபாத் நகரில்தான் எங்களது மூதாதையர்கள் வசித்து வந்திருக்கிறார்கள். ஐதராபாதிலுள்ள அமீர்பேட்டைதான் அவர்கள் வசித்த இடம். இந்த முறை ஐதராபாத்தில் பங்களா தேசத்துடன் விளையாடிய போது அந்த 'அமீர் பேட்டை'க்கு ஒரு விசிட் அடித்துப் பார்த்துவிட்டு வந்தேன். முன்னோர் வாழ்ந்த இடமல்லவா! உடம்பெல்லாம் ஒரு மாதிரி இருந்தது. இங்கேயே அவர்கள் வாழ்ந்திருந்தால் இந்தியாவிற்கே நான் விளையாடியிருப்பேனோ என்னவோ!"

**"குவாலியரில் இந்திய அணியைத் தோற்கடிக்க முடியும் என நினைத்தீர்களா?"**

"ஏன்? உங்கள் இந்தியாவைத் தோற்கடிக்கவே முடியாதா? எங்கள் கென்யா கொஞ்சம் பலம் இல்லாத நாடுதான். அதற்காக ஒரேயடியாக எங்களை மட்டமாக எண்ணக் கூடாது. இப்படி எங்களை under estimate செய்த காரணத்தால்தான் இந்தியா குவாலியரில் தோற்றது. இருப்பினும் இந்த வெற்றியைக் கொண்டு நாங்கள் தலைக்கனம் கொள்ள மாட்டோம். எங்கள் அணியை இன்னும் பலமுள்ள அணியாக மாற்ற வேண்டும். கல்கத்தாவில் இன்று நடைபெறும் பைனலில் நாங்கள் தோற்கலாம். வங்காள தேசத்தைத் தோற்கடித்து இந்த கோகோ கோலா பைனலில் ஆட வேண்டும் என்றுதான் நாங்கள் இங்கே விளையாட வந்தோம். அதே மாதிரி சென்னையில் நடந்த ஆட்டத்தில் வங்காள தேசத்தைத் தோற்கடித்தோம். எங்கள் நோக்கம் நிறைவேறி விட்டது. குவாலியரில் சச்சின், அசார் விளையாடிய இந்திய அணியைத் தோற்கடித்தது எங்களின் இமாலய சாதனை. இதை யாரும் என்றும் ஒன்றும் செய்ய முடியாது. ரெகார்டு ரெகார்டுதானே!"

# எங்களை மட்டமாக எண்ண வேண்டாம்!

**"சரி இனி என்ன செய்வதாக உத்தேசம்?"**

"வெஸ்டு இண்டிசை தோற்கடித்த காரணத்தால் 'கென்யா' என்ற பெயர் கிரிக்கெட்டில் அனைவருக்கும் தெரிந்தது. தற்போது 'இந்தியா'வையும் தோற்கடித்த காரணத்தால் இனி எங்களுக்கு நல்ல அங்கீகாரம் கிடைக்கும். அதை நாங்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். செப்டம்பரில் மலேசியாவில் நடைபெறும் காமன் வெல்த் ஆட்டங்களில் கென்யாவின் பலம் என்ன என்பதை உலக கிரிக்கெட் அரங்கிற்கு நிச்சயம்

நிரூபிப்போம். எப்படியும் இன்னும் இரண்டு வருடத்திற்குள் நாங்கள் டெஸ்டு போட்டிகளிலும் விளையாட வேண்டும். அதுவே எங்களின் இலட்சியம். அதற்கு ஒரே வழி காமன் வெல்த் ஆட்டங்களில் நிறைய சாதனை செய்வதுதான். எங்களின் புதிய கோச் ஆன ஆல்வின் காளிசரன் நிச்சயம் ஏதாவது திட்டம் வைத்து இருப்பார்."

**"கென்யாவின் பலம் எது? பலவீனம் என்ன?"**

"பீல்டிங் எங்கள் மிகப் பெரிய பலம். அணியில் உள்ள அனைவருமே நன்றாக பீல்டிங் செய்கிறோம். பேட்டிங்கிலும் சரி, பௌலிங்கிலும் சரி சராசரியாகத்தான் இருக்கிறோம். அனுபவமின்மை காரணமாக வெற்றி பெற வேண்டிய மேட்சுகளில் கோட்டை விட்டு விடுகிறோம். நன்றாக விளையாடக்கூடிய பேட்ஸ்மேன் நின்று விளையாடாமல் திடீரென அவுட் ஆகி விடுகிறோம். அதே போல பௌலிங்கிலும் நன்றாகப் பந்து வீசினாலும் குறிப்பிட்ட சில ஓவர்களை ஆட்டத்தின் இறுதியில் மோசமாக வீசி விடுகிறோம். இதனால் ஆட்டத்தின் போக்கே மாறி விடுகிறது. ஆட்டமே எங்கள் கையை விட்டுப் போய் விடுகிறது. இதையெல்லாம் சரி செய்யத்தான் நல்ல 'கோச்' வேண்டும். எங்களின் புதிய கோச் காளிசரன் மூலம் இது சரி செய்யப் படும் என நினைக்கிறேன்."

**"உங்கள் அணியில் யார் நன்றாக விளையாடுகிறார்கள் என்று சொல்ல முடியுமா?"**

"அனைவருமே நன்றாகத்தான் விளையாடுகிறோம். யாரையும் தனிப்பட்ட முறையில் சொல்ல முடியாது. ஆனாலும் ரவிந்து ஷா, ஒடும்பே, ஹிதேஷ் மோடி ஆகியோரைக் குறிப்பிட்டுச் சொல்லத்தான் வேண்டும். அதே போல மார்டின் சூஜி அருமையான பௌலர். ஸ்டிவ் டிக்லோவும் மற்றொரு திறமை வாய்ந்த பௌலர்."

**"இந்தியாவைப் பற்றி உங்கள் கருத்து என்ன?"**

"எத்தனை பேர் அருமையாக விளையாடுகிறார்கள். நிச்சயம் உங்களால் இரண்டு நல்ல டீம்களைக் கொடுக்க முடியும். மேற்படி இந்தியா பலவித கலாசாரங்கள் நிறைந்த நாடு. எல்லா மக்களும் இத்தனை ஒற்றுமையாக இருப்பதைப் பார்க்கும் போது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. இதுதான் இந்தியாவின் வெற்றிக்கும் வளர்ச்சிக்கும் காரணம் என நினைக்கிறேன். அத்தனை அறிமுகம் இல்லாத – புகழ் இல்லாத எங்கள் அணிக்கு பெங்களூர், சென்னை, குவாலியர், ஐதராபாத், கல்கத்தா என எல்லா இடங்களிலும் கைதட்டி ஆரவாரம் செய்து ஆதரித்தார்களே. இதைத்தான் நான் பாராட்ட விரும்புகிறேன். ரசிகர்கள் இவ்வளவு உற்சாகமாக இருக்கும் நாடு என்னைக்கும் சோடை போகாது." ●

– கென்யா அணி கேப்டன் பேட்டி

• உடற்பயிற்சியளிக்கும் கேப்டன்

சந்திப்பு : **நந்தினி**
படம் : **உமா மணி**

## மௌனம் கலைகிறது!

சந்நியாசம் போரடித்து விட்டது! மீண்டும் சிவசேனைக் குடும்பஸ்தனாகப் பார்க்கிறார் தாக்கரே; இரண்டுக்கும் அப்படி என்ன பெரிய வித்தியாசம்? அங்கேயும் காவியுடை உருத்திராட்சம்; இங்கேயும் அப்படியே! அதில் ஜடாமுடி; இதில் குடுமிப்பிடி! அங்கே ஊரை மாற்ற உபதேசம்; இங்கே ஊரை ஏமாற்ற உபதேசம்! ஆனால் இரண்டுக்குமே மக்களை வசீகரிக்கும் சக்தியுடைய ஒரு குரு அவசியம். என்ன செய்வது? பத்து இடங்களில் இடைத் தேர்தல்கள் முளைக்க, கூட்டத்தை ஈர்த்து அதை வோட்டுக்களாக மாற்ற சிவசேனைக்கு உடனடியாக ஒரு முகம் தேவைப்படுகிறதே! அதற்கு இந்தப் பழைய- பழகிய முகத்தை விட்டால் வேறு கதி?

# மும்பை மசாலா:



### சிவ சிவா!

அண்மைக் காலத்தில், தாக்கரேயிடம் பத்திரிகையாளர்கள் கேட்டுக் கேட்டு அலுத்துப் போன ஒரு கேள்வி - "கணேஷ் நாயக் இன்னும் சிவசேனையில் இருக்கிறாரா?" அலுக்காமல் அவர் கூறும் பதில் - "அவரிடமே கேளுங்களேன்." நாயக்கிடம் கேட்டால், அவரும் தாக்கரேவைக் கேளுங்களேன் என்கிறார். சந்தடி சாக்கில் "சிவசக்தி" என்றொரு சமூகசேவை இயக்கத்தை ஆரம்பித்துள்ளார். (மராத்திய ஹெக்டே?) இதற்கு 'தாக்கரேயிடம் பர்மிஷன் வாங்கினீர்களா?' என்றால், "மரத்தை வெட்டுவதற்கல்லவா அனுமதி வாங்க வேண்டும்? செடியை நடுவதற்குக் கூடவா?" என சாமர்த்தியமாக பதிலளிக்கிறார். நட்டிருப்பது பூஞ்செடியா கள்ளிச் செடியா என்பதுதானே பிரச்னை?

### 'பாக்'கின் போக்கு

'நீ ஐந்து குண்டை வெடித்தாயா? நான் ஆறு குண்டு வெடிக்கிறேன் பார்' என்று போக்ரனுக்குப் போக்குக் காட்டியது போலவே, "குலாம் அலி நிகழ்ச்சியையா தடை செய்தீர்கள்? இதோ, ஷபானா ஆஸ்மி, ஃபாரூக் ஷேக் நடித்த 'தும்ஹாரி அம்ரிதா' நிகழ்ச்சியை கான்சல் செய்து காட்டுகிறோம் பார்' என்று பதிலடி கொடுத்திருக்கிறது பாகிஸ்தான். இத்தனைக்கும், மூன்று தியேட்டர்களில் ஐந்து 'ஷோ'க்களுக்கு ஹவுஸ் ஃபுல்லாயிருந்த இந்த பிரசித்தி பெற்ற நாடகத்தின் வசூல் அனைத்தும், கராச்சியிலுள்ள கிட்னி ட்ரான்ஸ்ப்ளாண்ட் சென்டருக்குப் போக இருந்தது. இப்போது, மும்பையில், 'பாக்' கஜல் பாடகர்களின் காசட்டுகளை உடைத்து, ரப்பர் பாம்புகளைக் கொளுத்தியதற்குப் பதிலாக அங்கே என்ன எரியப் போகிறதோ? ஒரு கன்னத்திலடித்தால் மறு கன்னத்தைக் காட்டும் பாலிசியை எல்லோருமே கைகழுவி விட்டார்கள்தாம்! ஆனால் அறைந்தவன் கையை வெட்டுகிறேன் பேர்வழி என்று தன் கையையே உடைத்துக் கொள்ளும் பரிதாபத்தை என்னென்பது?

## பிறக்குமா விமோசனம்?

தினமும் எலெக்ட்ரிக் ட்ரெயினில் பயணிக்கும் ஒரு கோடி இந்தியர்களில் பாதிக்கு மேல் மும்பைக்காரர்களாயிருக்க, இவர்களின் நீண்டகால கஷ்டங்களைப் போக்க, 'மும்பை ரயில் விகாஸ் கார்ப்பொரேஷன்' என்ற அமைப்பை நிறுவ, மாநில அரசு, மத்திய அரசுடன் ஒரு MOU (மெமோரண்டம் ஆஃப் அண்டர்ஸ்டாண்டிங்) தயாரித்திருக்கிறது. இன்னும் ஐந்து வருடங்களுக்குள் நிறைய ரயில்வே லைன்கள், எல்லா ரேக்குகளும் 12 கோச்களாக மாற்றப்படுதல், ரயிலோரக் குடிசைக் குடியிருப்புகளுக்கு மறு வாழ்வு என்று பெரிய பெரிய கனவுகளைக் கடைவிரித்திருக்கிறது. உலக வங்கியிடம் லோன் வாங்கி, இதை எல்லாம் நனவாக்குவது நடக்கிற காரியமோ இல்லையோ, யோகேஷ் பண்டேகர் என்ற ஐ.ஐ.டி. மாணவர், தற்போது போல 112 பேருக்கல்லாமல், 172 பேர் சுகமாய்ச் சாய்ந்தவாறே கஷ்டமில்லாமல் நின்று பயணிக்குமாறு ரயில்வே கம்பார்ட்மெண்டுகளை ரீடிசைன் செய்திருப்பதை, ஸீரியஸாக எடுத்துக் கொண்டு ரயில் விகாஸ்காரர்கள் செயல்பட்டால், 55 லட்சம் மும்பைக்காரர்களுக்கு நிச்சயமாக விமோசனம் பிறக்கும்!

# இடம் மாறும் தாக்கரே!

## யாருக்காக? இது யாருக்காக?

ஹுசைன் மன்னிப்புக் கோரிவிட்டார். சிவசேனை ஷாகா பிரமுக் கஜானன் ஷிர்க்கேயிடம் "சீதையை நிர்வாணப்படுத்தி இந்துக்களின் மனதைப் புண்படுத்தியது தவறு" என எழுதிக் கொடுத்து விட்டார்! இருபது வருடங்கள் முன்னால் துகிலுரித்தமைக்கு, இவ்வளவு காலதாமதமாக வருந்துவது ஏனாம்? எல்லாம் மாதுரி கடாட்சத்துக்குதான்! ஹுசைன் தயாரிக்கும் 'கஜ காமினியில்' மாதுரி நடிப்பதற்கு சிவசேனைக்காரர்கள் தடை விதிக்க, வேறு வழியில்லாது இவர் மண்டியிட்டிருக்கிறார். நேற்றுவரை ஹுசைனை நடுத்தெருவில் வைத்து துகிலுரிக்கப் போவதாக கறுவிய ஷிர்க்கே, இப்போது சாந்தமாகிவிட்டார். படம் முடிவடைந்த பிறகு இன்னும் என்னவெல்லாம் பாக்கி இருக்கிறதோ?

## மிருக நேயம்

முதியோர் இல்லம், அனாதை ஆசிரம வாசிகளின் "எண்டர்டெயின்மெண்டு"க்கென்று 'Pet Pal' இயக்கத்தினர், வளர்ப்புப் பிராணிகளை உபயோகிக்கும் வழியைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். உதாரணமாக, மும்பையிலுள்ள ஒரு பார்ஸி முதியோர் இல்லத்தில், ரெகுலராக ஒரு நாய் வந்து, பாட்டிகளை மோந்து, நக்கி, வாலாட்டி, அவர்கள் மடியில் அமர்ந்து கொஞ்சி, அவர்களை குஷிப்படுத்துகிறது. சூனியத்தை வெறித்துக் கொண்டோ, தூர்தர்ஷனைப் பார்த்துக் கொண்டோ காலத்தைப் பிடித்துத் தள்ளுபவர்களுக்கு இது இனிய மாறுதல்! எங்கேயாவது மேலே விழுந்து குதறி, அல்லது 'இன்ஃபெக்ஷனை' பரப்பினால்...? என்கிறீர்களா? சூச்! எல்லாம் நோய் தடுப்பூசி போட்டுக் கொண்ட நாய்கள்! அப்படியே இல்லை என்றாலும், தூர்தர்ஷனைப் பார்க்கும் கொடுமைக்கு இது எவ்வளவோ மேல் அல்லவா?

## முதியோர் ஸ்பெஷல்

மராத்திய அரசு, வேலையிலிருந்து ஓய்வு பெறும் வயதை அறுபதாக்கிவிட்டது! அப்படியே எல்லா அரசு மருத்துவ மனைகளிலும் "சீனியர் சிடிஸன்"ஸுக்கென்று பிரத்யேக கவுண்டர் திறக்கப்பட்டு வாரம் ஒருமுறை அவர்களுக்கு இலவச மருத்துவ வசதியும் அளிக்க உத்தரவிட்டுள்ளது. எல்லாம் வயசுக்கு மரியாதைதான்!

மும்பையிலிருந்து : **ஜெயஸ்ரீ ராஜ்**

# பருவகாலங்களுக்கு பைத்தியம் பிடித்து விட்டது!

**அக்னி நட்சத்திரத்தின் மிதமிஞ்சிய உக்கிரமும், இந்நேரத்தில் இடம் பெற சாத்தியமேயில்லாத — ஆனால் இடம் பெறுகின்ற — புயல் காற்றுத் தாழிகளும், வீரியம் மிக்க கோடை மழையும் — இயற்கையின் சீற்றங்களே! உலகளாவிய பருவகால தடுமாற்றத்தை ஏற்படுத்தியிருக்கும் 'எல்னினோ' எனும் இச்சீற்றம், மேலும் என்னென்ன கொடிய விளைவுகளை உண்டு பண்ணக் காத்திருக்கின்றது?**



• பூமியின் மேல் மேகக் கூட்டத்தில் வெப்பத்தைச் சமன் செய்ய ஓயாமல் ஊர்ந்து கொண்டேயிருக்கும் மேக நீரோடை (சாட்டிலைட் எடுத்த படம்)

பசிபிக் மகா சமுத்திரத்தின் தென்மேற்குக் கடற்கரைப் பகுதியே 'எல்னினோ' சீற்றத்தின் பிறப்பிடம். இது ஒரு வெப்ப நீரோடைப் பகுதி. வருடம் முழுவதும் வெப்ப ஆறு இங்கே தவழ்ந்து கொண்டேயிருந்தாலும், டிசம்பர் - ஜனவரி மாதங்களில், இவ் வெப்ப ஓடையின் உஷ்ணம் உச்சத்திலிருக்கும். சில சமயங்களில், இந்த உச்சத்தையும் தாண்டி வெப்பம் அதிகரிப்பதுண்டு. அப்போது எல்னினோ பிறக்கிறது! விளைவு? இப்பகுதி வாழ்

கோடானு கோடி பறவைகளும் மீன்களும் சூடு தாங்காமல் இறக்கின்றன; வெதுவெதுப்பான நீரை உறிஞ்சி வாழப் பழக்கப்பட்ட அத்தனை தாவரங்களும் மடிகின்றன.

இவ்வாறு கூடும் வெப்பம், தொடர்ந்து வரும் கோடை காலத்தின் வெப்ப நிலையை நெத்தியடியாக அதிகரித்து விடுகிறது. இதுவே, எல்னினோவால் உருவாகும் பருவ கால மாற்றங்களின் துவக்கம். அனல் காற்றும் 45-50 டிகிரி என எகிறும் உயர் வெப்பமும் அள்ளித் தரும் உபாதைகளைச் சொல்லி மாளாது! இது மட்டுமில்லை... கோடை முடிந்து குளிர் காலம் துவங்கும்போது, உச்சாணிக் கொம்பில் ஏறி நின்று ஆடிக் கொண்டிருந்த வெப்பம் முழுவதும் திடுமென காணாமல் போய் விட ஜாம் ஜாமென குளிர் தன் கை வரிசையைக் காட்டத் தொடங்கும். இவ்வாறு, கோடையும் குளிர் காலமும், தறி கெட்டு நடப்பதோடல்லாமல், எதிர்பாராத நிகழ்வுகளும் வீரியமாய் நிகழ்வதுண்டு.

இந் நூற்றாண்டின் கொடிய 82-83 ஆம் வருட எல்னினோ, ஆஸ்திரேலியாவில், தொடர்ச்சியாய் இரு நாட்கள் கடும் புழுதிப் புயலை ஏற்படுத்தி, அதனால் எழுந்த புழுதி, காற்று வெளியில் கலந்து, சூரியனை மறைத்து, பகலை இரவாக்கிய கொடுமையை விவரிப்பது கடினம்! இதில் இறப்பு 3000 பேர்; இழப்பு 13 பில்லியன் டாலர்! இவ்விரு வருடங்களில் தென்னிந்திய பருவ மழை பொய்த்து நாடு கண்ட வறட்சி ஒரு சரித்திரம்! புயல் உருவாகவே சாத்தியமற்ற ஹவாயில் சூறாவளியையே உருவாக்கிய பெருமையும், அந்த எல்னினோவுக்கு உண்டு.

இட்டத்தட்ட பத்து வருடங்களுக்கு ஒரு முறை தோன்றி, ஓரிரு வருடங்கள் வரை நீடிக்கும் எல்னினோ, 98-ல் மீண்டும் பிறந்துள்ளது - முன்னெப்போதும் இருந்திராத தீவிர பலத்தோடு...!

பசிபிக் சமுத்திரத்தில் என்ன மாற்றம் நடக்கிறதோ, அது அப்படியே, இந்தியப் பெருங்கடலுக்கும் பார்சல் செய்யப் படுகிறது. ஆசியாவில் - குறிப்பாக - ஆஸ்திரேலிய, தென்னிந்தியப் பகுதிகள் - மிக அதிக அளவு பாதிக்கப்படுகின்றன.

கடந்த டிசம்பரில் மழை பொய்த்திருந்தால் எல்னினோ இந்தியாவை ஒரு கை பார்த்திருக்கும். ஆனால் மழை பொய்க்கவில்லை; அதனால் எல்னினோ பொய்த்து விட்டது என்று எண்ணுவது தவறு. இக் கோடையில் நிகழ்ந்து கொண்டிருக்கும் - புயல், பலமான கோடை மழை, கடும் அனல் காற்று - ஆகிய குழம்பிய பருவ கால நடத்தைகளே, எல்னினோ ஒளிந்து கொண்டிருப்பதற்குச் சீரிய உதாரணங்கள்.

வறட்சி, வெள்ளம், காட்டுத் தீ, ஆயிரக் கணக்கான உயிரிழப்பு அனைத்திற்கும் ஒரே பிறப்பிடமாய் விளங்கும் 'எல்னினோவின்' பிறப்பும் சுவாரஸ்யம் நிறைந்ததே!

யேசு பிறந்த டிசம்பர் மாதம், அமெரிக்கர்களுக்குள், அக் கடுங்குளிரிலும் வெதுவெதுப்பான ஆனந்த உணர்வை உண்டாக்கியிருக்கிறது; எனவே இவ்வுணர்வினை எல்னினோ ('யேசு பாலகன்') என்றனர்!

கலிபோர்னியாவில் நூற்றாண்டு காணாத அளவு அடை மழையை உண்டு பண்ணியிருக்கும் எல்னினோ, இந்தியாவிலும் அழுந்தக் கால் பதித்திருக்கிறது. எல்னினோ பற்றிய படிப்பு இன்னும் அதன் குழந்தைப் பிராயத்திலேயே இருப்பதால், அது என்னென்ன விளைவை உண்டு பண்ணும் என்று சொல்ல முடியாது. எப்படியிருந்தாலும் வருவதை நாம் அனுபவித்துத்தான் தீர வேண்டும்.

வேறு வழியில்லை!

— கொரட்டூர் ஸ்ரீனிவாஸ்

"சொன்னால் நம்புங்க. நான் போலி டாக்டர் இல்லை. 'எம்.பி.பி.எஸ்' ங்குறது என்னோட இன்சியல்தான்; அதை என் பெயருக்குப் பின்னாடி போட்டுக்கிட்டேன். அவ்வளவுதான்!"

— தே. கண்ணன்





❖ இதுவரை மொத்தம் 15 தடவை பிரேசில் இறுதியாட்டத்தில் ஆடியிருக்கிறது. இந்தத் தடவை அது 'கப்' அடித்தால், 4வது முறையாக வென்று, சாதனை படைக்கும்.

❖ 18 காரட் தங்கத்தில், செய்யப்பட்ட இந்தக் கோப்பையின் உயரம். 36 செ.மீ. எடை 4.97 கிலோ.

❖ 1966-ம் வருடம் இந்தக் கோப்பை இங்கிலாந்தில் நடந்த போட்டியின் போது, காணாமல் போய்விட்டது! மரத்தடியில் புதைத்து வைக்கப்பட்டிருந்த அதை, கண்டுபிடித்த, நாயின் பெயர் Pickles!

# உலகக் கோப்பை -98

**இன்று முதல் நடக்கத் தொடங்கியுள்ள உலகக் கோப்பை கால்பந்தாட்டம் பற்றி சில செய்திகள்...**

❖ 172 நாடுகள் பங்கேற்ற இதில், இறுதி ஆட்டத்தில் ஆடத் தகுதி பெற்ற நாடுகள் 32.

❖ 25000 பத்திரிகையாளர்கள் இதை 'ரிப்போர்ட்' செய்கிறார்கள்.

❖ 10 நகரங்களில் மொத்தம் 64 மாட்சுகள் நடக்கின்றன.

❖ 1930-ல் உருகுவேயில் தொடங்கிய இப்போட்டியில், இதுவரை மொத்தம் 1584 கோல்கள் போடப்பட்டுள்ளன.

❖ மறுபடியும் 1983-ல் அர்ஜன்டைனாவில் இது காணாமல் போய், கிடைக்கவே இல்லை. திருடர்கள் அதை உருக்கி விட்டார்களாம்!

❖ 'கால் பந்தாட்டத்தின் மன்னர்' என்று புகழப்படும், Pele-ன் இயற் பெயர் என்ன தெரியுமா? Edson Arantes Do Nascimento!

❖ சரி, இம்மாபெரும் போட்டியில் நம் இந்தியா ஏன் ஆடுவதில்லை!

நமக்கு அந்த அளவுக்குத் திறமை இல்லை என்ற போதிலும், ஒரே ஒரு தடவை, 1950-ல் இப்போட்டியில் பங்கு பெறும் வாய்ப்பு வந்தது. 1948-ல் நடந்த, ஒலிம்பிக்கில் இந்தியா நன்கு விளையாடியதன் காரணமாகவும், மற்ற சில நாடுகள் ஒதுங்கியதாலும், நம்மைக் கலந்து கொள்ள அழைத்தார்கள். ஆடுவதற்கான, குழு தேர்ந்தெடுக்கப்பட்டு பயிற்சி அளிக்கப்பட்டு பிரேசிலுக்குப் போக 'பிளேன்' டிக்கெட்டுகள் 'புக்' செய்யப்பட்டபின், நம்மை அனுமதிக்க மறுத்தனர். காரணம் தெரியுமா! 1948 ஒலிம்பிக்கில், நாம் ஆடும் போது, 'ஷூ' இல்லாமல் வெறும் காலோடு ஆடினோமாம்!

நன்றி: **'வீக்'**

தகவல்: **'மாலி'**

**கல்கி** : 'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணம் உண்டு' என்பதால் இந்தக் கேள்வி... அரசியல்வாதி ஜெயலலிதாவிடம் உங்களுக்குப் பிடித்த அம்சம் என்ன?

**கலைஞர்**: மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கு மணம் உண்டு என்பதை நான் மறுக்கவில்லை. ஆனால் போயஸ் தோட்டத்து மல்லிகைக்கு மணம் உண்டா என்பது எனக்குத் தெரியாது. (அறையில் வெடிச் சிரிப்புக் கிளம்பி அதிர வைக்கிறது!)

**கல்கி** : உங்களுடைய முதல் சம்பாத்தியத்தை எப்படிச் செலவழித்தீர்கள்?

**கலைஞர்** : ஈரோட்டிலிருந்த பெரியாரின் குடியரசு அலுவலகத்தில் நான் பெற்ற சம்பளம்தான் எனது முதல் சம்பாத்தியம். மாதம் நாற்பது ரூபாய் சம்பளம். அதில் சாப்பாட்டுச் செலவுக்கும் சினிமா மாதிரியான பொழுது போக்குச் செலவுக்கும் போக, மீதியுள்ள ஐந்து அல்லது பத்து ரூபாய் அளவுக்கு திருவாரூரிலிருந்த எனது



கலைஞர் பேட்டியின் சென்ற வாரத் தொடர்ச்சி...



# “பலகாரங்களிலேயே எனக்குப் பிடித்தது...”

பெற்றோருக்கு அனுப்பி வைத்து விடுவேன்.

**கல்கி :** அண்ணாவிடமிருந்து பாராட்டுதல்களைப் பெற்றது போல் எப்போதாவது அவருடைய கோபத்துக்கும் ஆளாகியிருக்கிறீர்களா?

**கலைஞர் :** அண்ணாவின் கோபத்துக்கும் ஆளாகியிருக்கிறேன். ஆனாலும் அது செல்லக் கோபமாக இருக்குமே தவிர, சீற்றமாக இருந்ததில்லை. அண்ணா சொல்லியும் கேட்காமல் 1959-ம் ஆண்டு சென்னை மாநகராட்சித் தேர்தலில் அதிகமான வேட்பாளர்களை நான் நிறுத்தி விட்டேன். அப்போது அண்ணா 'இத்தனை பேரை நிறுத்தியிருக்கியே, ஜெயிக்க முடியுமாய்யா?' என்று கேட்டார். நான், 'ஜெயிக்க

முடியும்!' என்றேன். 'முடியாது!' என்றார் அவர். 'நிச்சயமாக ஜெயிப்போம். கார்ப்பரேஷனை நாம் பிடிப்போம்' என்றேன். 'என்ன பந்தயம் கட்றே?' என்றார். நான் 'எந்தப் பந்தயத்துக்கும் தயாராயிருக்கிறேன்' என்றேன். பட்டியலையே தூக்கிப் போட்டு விட்டு, 'ஜெயித்தால் நான் உனக்கு ஒரு மோதிரம் பண்ணிப் போடறேன்!' என்றார். அந்தப் பந்தயத்தில் பண்ணிப் போட்டது தான் இந்த மோதிரம். (விரலை உயர்த்திக் காட்டுகிறார்).

**கல்கி:** அண்ணா கொடுத்த இந்த மோதிரத்தை நீங்கள் எப்போதும் அணிந்திருக்கிறீர்களே, இது ஒரு சென்டிமெண்ட்டா?

**கலைஞர்:** சென்டிமென்ட் என்று சொல்ல முடியாது. அன்பின் அடையாளம். இது எனது கடைசிப் பயணம் வரையில் என் கை விரலில்தான் இருக்கும்.

**கல்கி:** உங்கள் குடும்பத்தில் உள்ளவர்கள் கூட உங்களைத் 'தலைவர்' என்றுதான் குறிப்பிடுகிறார்கள். அப்போது உங்கள் மனோநிலை எப்படியிருக்கும்?

**கலைஞர்:** என்னுடைய சிஸ்டரெல்லாம் 'தம்பி' என்று தானே அழைக்கிறார்கள்.

**கல்கி:** ஸ்டாலினெல்லாம் உங்களைத் தலைவர் என்றுதான் குறிப்பிடுகிறார்...

**கலைஞர்:** பையன்கள் அப்படிக் குறிப்பிடலாம். குடும்பத்தில் வேறு சிலர் அப்படிக் குறிப்பிட்டாலும் கழகம் என்கிற குடும்பத்தில் அவர்களும் தொண்டர்கள் தானே! அதனால்தான் அப்படிக் குறிப்பிடுகிறார்கள் என்று நினைத்துக் கொள்வேன்.

**கல்கி:** 'மனைவி சொல்லே மந்திரம்'– சரிதானா?

**கலைஞர்:** என் அளவில் இதில் ஒரு திருத்தம் இருக்கிறது. 'மனைவிகள்' என்று சொல்லணும்! (சிரிப்பு). வீணாகச் சண்டையை மூட்டி விடாதீர்கள்! (சிரிப்பு). 'மனைவி சொல்லே மந்திரம்' என்பது மனைவியை ஏமாற்றும் ஒரு தந்திரம். அவ்வளவுதான்! (மீண்டும் சிரிப்பு.)

**கல்கி:** குடும்பத்தை நடத்தும் பொறுப்பில் உங்களுக்கு ஏதேனும் பங்கு இருக்கிறதா?

**கலைஞர்:** எந்த விதமான பொறுப்பான பங்கும் என்றைக்குமே இருந்ததில்லை. வீட்டிலுள்ளவர்கள்தான் குடும்பத்தை நடத்துகிற பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

**கல்கி :** முக்கியமான விஷயங்களில் யார் முடிவெடுப்பார்கள்?

**கலைஞர்:** திருமணம் போன்ற முக்கியமான முடிவுகளை எடுப்பதுதான் என்னுடைய பொறுப்பாக இருக்கும். ஏனென்றால், என்னுடைய குடும்பத்தில் காதல் திருமணங்கள் நடந்திருக்கின்றன. அதற்கான முடிவுகளை நான்தான் எடுக்க வேண்டியிருந்திருக்கிறது.

**கல்கி:** நீங்கள் காதலுக்குச் சாதகமாகத்தான் இருப்பீர்கள், இல்லையா?

**கலைஞர்:** நிச்சயமாக.

**கல்கி:** உங்களுக்குச் சமைக்கத் தெரியுமா? எப்போதாவது சமைத்திருக்கிறீர்களா? என்ன சமைத்தீர்கள்?

**கலைஞர்:** சட்டசபையில் சொல்கிற மாதிரி சொல்கிறேன் : முதல் கேள்விக்குப் பதில்: தெரியாது; அதைத் தொடர்ந்து வரும் கேள்வி 'அ'வுக்கு: 'இல்லை'; 'ஆ'வுக்கு: 'இந்தக் கேள்வியே எழவில்லை.'

**கல்கி:** 'கொழுக்கட்டை சாப்பிடத் தயார்' என்று சொல்லியிருக்கிறீர்களே, நிஜமாகவே கொழுக்கட்டையின் சுவை உங்களுக்குப் பிடிக்குமா?

**கலைஞர்:** கொழுக்கட்டை என்றால் வெறும் கொழுக்கட்டை அல்ல; உள்ளே இனிப்பான பூரணம் உள்ள கொழுக்கட்டையின் சுவை உள்ளபடியே எனக்குப் பிடிக்கும். சொல்லப் போனால் பலகாரங்களிலேயே எனக்கு ரொம்பப் பிடித்தது, பூரணத்தோடு கூடிய மோதகம்-கொழுக்கட்டைதான்!

**கல்கி:** அளவுக்கு மீறி ஒரு சிலர் உங்களைப் புகழும்போது நீங்கள் எப்படி உணர்வீர்கள்?

**கலைஞர்:** நான் ரொம்பவும் வெட்கப்படுவேன். சில நேரங்களில் சந்தேகப்படுவேன், அவர்களைப் பற்றி!

**கல்கி:** மனம் சோர்வடையும் போது உங்களை நீங்களே எப்படி உற்சாகப்படுத்திக் கொள்வீர்கள்?

**கலைஞர்:** என்னை விட அதிக கஷ்டப்படுபவர்களை நினைத்து, அவர்களெல்லாம் எப்படித் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தார்கள் என்பதை எண்ணிப் பார்த்து, என்னை உற்சாகப்படுத்திக் கொள்வேன்.

**கல்கி :** நீங்கள் ரொம்பவும் சோர்ந்து போன ஒரு விஷயம் பற்றிச் சொல்லுங்களேன்!

**கலைஞர் :** எனது அறுபதாண்டு காலப் பொது வாழ்க்கையில் அடிக்கடி சோர்ந்து போகக்கூடிய நிகழ்ச்சிகள் நிறைய இருக்கின்

றன. எனவே, ஒன்றை மட்டும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது.

**கல்கி :** பெண்ணுரிமை பற்றி உங்கள் கருத்து என்ன? இன்றைய பெண்கள் எந்த அளவுக்கு உரிமை பெற்றவர்களாக இருக்கிறார்கள்?

**கலைஞர் :** ஓர் ஆணுக்கு என்னென்ன உரிமைகள் இருக்கின்றனவோ, அவை அத்தனையும் ஒரு பெண்ணுக்கும் இருக்க வேண்டும் என்பதில் எனக்கு இரு வேறு கருத்துக்கள் இல்லை. ஆனால், நம்முடைய பண்பாட்டுக்கு ஏற்ற வகையிலே ஓர் ஆணுக்கு இருக்கின்ற உரிமைகளின் அளவு, பெண்களுக்கு இருக்க வேண்டும். அது நமது பண்பாட்டை மீறியதாக ஆகிவிடக் கூடாது. பெண்ணுரிமை என்ற பெயரால் பண்பாடுகளைப் போட்டு மிதிக்கின்ற அளவுக்குத் தீவிர உரிமைகள் பேசுவது எனக்குப் பிடிக்காத ஒன்று.

**கல்கி :** உங்களுக்கு மிகவும் பிடித்த பாடகர் யார்?

**கலைஞர் :** ஆண் என்றால் சிதம்பரம் ஜெயராமன். பெண் என்றால் திருமதி எம். எஸ். சுப்புலட்சுமி.

**கல்கி :** நீங்கள் பாடுவீர்களா? மேடையில் இல்லாவிட்டாலும் தனிமையிலாவது பாடுவீர்களா?

**கலைஞர் :** எனக்குப் பாட்டுக் கேட்பதிலே மிகுந்த ஆர்வம் உண்டு. தனிமையில், யாரும் இல்லாத நேரத்தில் பாடல்களை முணுமுணுப்பேன். யார் காதிலும் விழும் படி பாடினால், ஒருவேளை அவர்கள் முணுமுணுப்பார்கள்! (சிரிப்பு)

**கல்கி :** என்ன பாடலை முணுமுணுப்பீர்கள்?

**கலைஞர் :** இந்தப் பாடல் என்று கிடையாது. எந்தப் பாடலை வேண்டுமானாலும் முணுமுணுப்பேன்.

**கல்கி :** உங்களுடைய மேடைப் பேச்சு எல்லோரையும் கவர்கிறது. உங்களைக் கவர்ந்த மேடைப் பேச்சாளர் யார்?

**கலைஞர் :** அறிஞர் அண்ணா. மூதறிஞர் ராஜாஜி. இருவருமே என்னைக் கவர்ந்தவர்கள்.

**கல்கி :** ராஜாஜிக்கும் உங்களுக்குமான உறவு பற்றிச் சொல்லுங்களேன்!

**கலைஞர் :** அண்ணாவுக்கும் ராஜாஜிக்கும் தேர்தல் உறவு ஏற்படுவதற்கு நான் பாலமாக இருந்திருக்கிறேன். சுதந்திர வெள்ளி விழாவின் போது அவருக்குத் தாமிரப் பத்திரம் வந்திருந்தது. அப்போது ராஜாஜி, 'எனக்

## ‘‘பொக்ரான்’’



- மணல் வெளிக்குள்
  மரண தேவன்
  தும்மல்

- மானுடத்தின்
  சவப்பெட்டிக்கு
  காந்திய நாட்டிலிருந்தும்
  கடைசியாய்
  ஒரு ஆணி.

- புகை மண்டலத்தில்
  ஒரு 'காளான்' குடை.
  இவர்களது 'கோவர்த்தன கிரி'.
  ஆனால்
  கீழே கபாலங்கள்.

- அடுத்த வீட்டுக்காரன்
  எச்சில் துப்பினான் என்று
  நம் முகத்தின் மீதே
  'நம் ஆசிட்–வீச்சு'.

- உன் கோவணம்
  கந்தலாயிருந்தாலும்
  கவலையில்லை.
  42 கிலோ டன் அழிவு சக்தி
  இப்போது உன் கையில்.

- இரதத்திலிருந்து
  அந்த இராமன் சிலையை
  இறக்கி வையுங்கள்.
  இந்த 'அணுகுண்டை'
  ஏற்றி வையுங்கள்.

– ருத்ரா



குத் தாமிரப் பத்திரம் வந்திருப்பதாகப் பத்திரிகைகளில் பார்த்தேன். என்னால் வர முடியவில்லை. யாரிடமாவது கொடுத்து அனுப்பி விடுங்கள்!' என்று எனக்கு எழுதினார். அதை நானே எடுத்துக் கொண்டு போய் அவரிடம் தட்டில் வைத்துக் கொடுத்தேன். அவர் எனக்கு மாலை போட்டு வாங்கிக் கொண்டார். 62-ல் திமுகவுக்கும் சுதந்திரா கட்சிக்கும் தேர்தல் உடன்பாடு வரவில்லை. அப்போது தஞ்சாவூருக்கு வந்து ராஜாஜி தேர்தல் கூட்டத்தில் பேசும்போது, அங்கே என்னை எதிர்த்துச் சுயேச்சையாகப் போட்டியிட்ட சுரந்தை சண்முக வடிவேலு, மேடையிலிருந்த ராஜாஜிக்கு ஒரு மாலையைப் போட்டு ஆசீர்வாதம் கேட்டிருக்கிறார். அப்போது ராஜாஜி, 'என் ஆசீர்வாதம் உமக்கு; ஆதரவு கருணாநிதிக்கு!' என்று சொன்னார். அதெல்லாம் மறக்க முடியாத வாசகங்கள்.

**கல்கி** : உங்களைப் பற்றி உங்களிடமே வெளிப்படையாக விமர்சனம் செய்பவர்கள் இருக்கிறார்களா?

**கலைஞர்** : இருக்கிறார்கள்.

**கல்கி** : கட்சியில் இருப்பவர்களா, கட்சிக்கு அப்பாற்பட்டவர்களா?

**கலைஞர்** : என்னுடைய அமைச்சர்களாக இருப்பவர்கள் கூட ஒருசிலர் வெளிப்படையாக விமர்சனம் செய்வார்கள். அதற்காக அவர்களிடத்திலே நான் கோபம் கொள்வதில்லை. முரசொலி மாறனும் செய்வார். எல்லோருடைய விமர்சனங்களையும் சிந்தித்து முடிவெடுப்பதற்கு ஏற்ற வகையில் வரவேற்பேனேயல்லாமல், புறக்கணிக்க மாட்டேன்.

**கல்கி** : ஓய்வு கிடைத்தால் நீங்கள் செல்ல விரும்பும் இடம் எது?

**கலைஞர்** : ஓய்வு கிடைக்கும்போது சொல்லுகிறேன்.

**கல்கி** : தமிழ் தவிர உங்களுக்கு வேறு எந்த மொழி பிடிக்கும்? இந்திய மொழிகளில் கேட்கிறோம்!

**கலைஞர்** : சுந்தரத் தெலுங்கு.

**கல்கி** : உங்கள் நினைவாற்றலின் ரகசியம் என்ன?

**கலைஞர்** : ஒவ்வொரு நிகழ்ச்சியும் என் மனத்தில் பதிந்து போகிற அளவுக்கு அதில் ஆழ்ந்து போய் விடுவேன். அதனால்தான் பல காலத்துக்குப் பிறகும் நினைவுக்கு வருகிறது. பொதுவாக நினைவாற்றல் என்பது உடற்கூறு சம்பந்தப்பட்ட விஷயமும்தான்.

கூடவே நாம் காட்டுகின்ற ஈடுபாடு.

**கல்கி :** தலைவன், தொண்டன் - உங்கள் விளக்கம் என்ன?

**கலைஞர் :** தலைவன் தொண்டனாகத் தன்னைக் கருதிக் கொண்டு பணியாற்றினால், தலைவனுக்குரிய சிறப்பைப் பெறுகிறான். தொண்டன் இல்லாமல் தலைவன் இல்லை.

**கல்கி :** இன்றைய சினிமாக்கள், பத்திரிகைகள் எல்லாமே பெரும்பாலும் அரசியல்வாதிகளை மக்கள் விரோதிகளாகத்தான் சித்திரிக்கின்றன. இதில் எந்த அளவுக்கு உண்மையிருப்பதாக நீங்கள் கருதுகிறீர்கள்?

**கலைஞர் :** தவறானது. எல்லா அரசியல்வாதிகளுமே மக்கள் விரோதிகளாக இருக்க முடியாது. அப்படிச் சித்திரிக்கின்ற சினிமாக்களில் உள்ள கலைஞர்களே கூட எல்லோரும் நல்லவர்கள் என்று ஏற்றுக் கொண்டுவிட முடியாது. எல்லாவற்றிலும் சில களைகள் இருக்கும். களைகளையே பயிர்களாகச் சித்திரிக்கக் கூடாது என்பது தான் எனது கருத்து.

**கல்கி :** அக்கால சினிமாக்களில் பாடல்களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டது. உங்களைப் போன்றவர்களின் பிரவேசத்தால் வசனங்களுக்கு முக்கியத்துவம் தரப்பட்டது. அண்மைக் காலத்தில் நீங்கள் எழுதிய போது கூட வசனங்களுக்கு முக்கியத்துவம் தந்ததாகத் தெரியவில்லையே, ஏன்?

**கலைஞர் :** வசனங்களுக்கு முக்கியத்துவம் என்பது அந்தந்தக் கதைகளைப் பொறுத்தது. வரலாற்றுக் கதை, மன்னர் காலக் கதை, வரலாற்றை அடிப்படையாகக் கொண்ட கதை, சமூகக் கதை, சமூக நிலைகளை விளக்குகின்ற கதை இப்படிப் பல கதைகள் இருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் ஏற்றவாறுதான் வசனங்கள் எழுதப்பட வேண்டும் என்பது எனது கொள்கை. ஒருமுறை வசனங்களைப் பற்றி கலைவாணர் ஒரு பட்டிமன்றத்துக்கு ஏற்பாடு செய்திருந்தார். அதில் நான், எஸ்.டி. சுந்தரம், டி.கே. சண்முகம், எஸ். வி. சகஸ்ரநாமம் இன்னும் சில எழுத்தாளர்களுமாகக் கலந்து கொண்டோம். அதில், இலக்கண சுத்தமான வசனங்கள் கூடாது என்று ஒரு தரப்பு. நான் பேசும் போது, 'ஒரு சமூகக் கதையில், காலையில் உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருக்கிற கணவனிடம் மனைவி, காப்பி கொண்டு வந்து கொடுக்கும்போது, 'இந்தாங்க, காப்பி சாப்பிடுங்க' என்றுதான் சொல்லுவாள். அதை விட்டு விட்டு, 'அத்தான்! காப்பி சாப்பிடுங்கள்!'; 'சரி கண்ணே! கொண்டு வா!' என்று அவர்களுக்கு உரையாடல் எழுதினால் அது பொருத்தமில்லாதது என்று பேசினேன். அதே நேரத்தில் அதுவொரு வரலாற்றுப் படமாக இருக்கிற போது... எதிரி கோட்டையை நோக்கி வருகிறான். மன்னன் அந்தப்புரத்தில் மகாராணியோடு உல்லாசமாக இருக்கிறான். அங்கே ஓடி வருகிற காவலன் கதவைத் தட்டி, 'மன்னா! மாற்றான் படையெடுத்து வருகிறான்; நமது கோட்டையை நோக்கி வந்து விட்டார்கள்!' என்றுதான் சொல்ல வேண்டும். அதற்கு மன்னன், சமூகக் கதையில் வருகிற மாதிரி, 'அப்படியாடா! தளபதியைக் கூப்பிடுடா' என்று சொல்ல மாட்டான். 'அப்படியா! கூப்பிடு தளபதியை! அணி வகுக்கச் சொல் நம் படைகளை!' என்று சொன்னால்தான் கம்பீரமாக இருக்க முடியும். என்னுடைய படங்களை எடுத்துக் கொண்டாலும் பராசக்தி ஒரு மாதிரி இருக்கும். மனோகரா வேறு மாதிரி இருக்கும். மலைக்கள்ளன் வசனம் ஒவ்வொரு வரியில்தான் இருக்கும். இருவர் உள்ளம் வசனமும் சின்னச் சின்ன வரிகளில்தான் இருக்கும். அப்போதுதான் கதைக்கும் கதாபாத்திரங்களுக்கும் பொருத்தமாக வசனங்கள் அமையும். அப்படித்தான் நான் அமைத்



***''நீங்க போலி டாக்டர் இல்லேன்னு எப்படி அவ்வளவு உறுதியா சொல்றீங்க. படிப்பு சான்றிதழ் ஏதாச்சும் வச்சிருக்கீங்களா?''***

***''என்கிட்ட நாலு எம்.பி.பி.எஸ் டாக்டர் அசிஸ்டெண்டா வேலை பார்க்குறாங்களே...! அவங்க டிகிரீ சர்ட்டிபிகேட் எல்லாம் என்கிட்ட தானே இருக்கு!''***

**- கோவை கே. அனிதா**

திருக்கிறேன்.

**கல்கி** : நீங்கள் விரும்பிப் படிப்பது எது! கவிதையா, சிறுகதையா, நாவலா?

**கலைஞர்** : அது எழுதிய எழுத்தாளர்களைப் பொறுத்து இருக்கிறது. பல்வேறு நாவல்களுக்கு மத்தியில் கல்கியின் பொன்னியின் செல்வன் இருந்தால் - இதை நான், ராஜேந்திரன் இங்கே இருக்கிறார் என்பதற்காகச் சொல்லவில்லை - நான் பொன்னியின் செல்வனைத்தான் எடுத்துப் படிப்பேன். அதே போல், பாரதி, பாரதிதாசன், கண்ணதாசன் கவிதைகளைத்தான் எனக்கு முதலில் எடுக்கத் தோன்றும்.

**கல்கி** : அரசியல் தலைவர் கலைஞருக்கு ஒரு வாக்காளர் மு. கருணாநிதி என்கிற முறையில் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

**கலைஞர்** : விட்டுக் கொடுக்க வேண்டியவற்றுக்கு விட்டுக் கொடுத்து, விடாப்பிடியாக இருக்க வேண்டிய விஷயங்களுக்கு விடாப்பிடியாக இருந்து, எந்தச் சூழலிலும் தன்னை இளக்கிக் கொண்டு மக்களுக்காகப் பணிபுரிவதுதான் மகேசனுக்கு ஆற்றுகின்ற தொண்டு என்கிற முறையில் பாடுபடுகின்ற அரசியல் தலைவர் கலைஞருக்கு, யாருமே வாக்களிக்காவிட்டாலும் என் ஒரு வாக்கு நிச்சயமாக உண்டு.

**கல்கி** : அரசியல், இலக்கியத் துறைகளில் பெற்ற நிறைவை ஒரு குடும்பத் தலைவர் என்கிற முறையிலும் பெற்றிருக்கிறீர்களா?

**கலைஞர்** : குடும்பத் தலைவர் என்கிற முறையில் நிறைவைப் பெற்றிருக்கிறேன். ஆனால், அரசியல், இலக்கியத் துறைகளில் கொண்ட ஈடுபாட்டை குடும்பத்தில் தருவதற்கு எனக்கு அவகாசம் இல்லை.

**கல்கி** : உங்களுக்குக் கோபம் வந்தால் அதை எப்படி வெளிப்படுத்துவீர்கள்?

**கலைஞர்** : 'கணமேயுங் காத்தல் அரிது' என்று வள்ளுவர் சொல்லியிருக்கிறாரே அத்தகைய கோபம்தான் என்னுடைய கோபம். 'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காத்தல் அரிது' என்கிற குறளுக்குப் பலரும் பலவாறு பொருள் சொல்கிறார்கள். அப்படிப்பட்டவர்களின் கோபத்தைத் தாங்க முடியாது என்றுதான் பொருள் சொல்கிறார்கள். ஆனால் நான் எனது திருக்குறள் உரையில், குணக் குன்றுகளாக உயர்ந்து நிற்பவர்கள் தங்களுடைய கோபத்தைக் கணநேரம் கூட வைத்துக் கொள்ள முடியாது' என்று எழுதியிருக்கிறேன். அப்படிப்பட்ட கோபம்தான் என்னுடையது.

**கல்கி** : குறளோவியம், சங்கத் தமிழுக்கு அடுத்து, நீங்கள் தமிழன்னைக்குச் சூட்டப் போகும் ஆபரணம் என்ன?

**கலைஞர்** : தொல்காப்பியத்துக்கு ஓவியம் தீட்ட நீண்ட நாட்களாக முயற்சி மேற்கொண்டிருக்கிறேன். அதுதான் எனது அடுத்த படைப்பாக இருக்கும்.

**கல்கி** : உங்களுக்கு டிரைவிங் தெரியுமா? எப்போதாவது காரையோ அல்லது வேறு வாகனத்தையோ ஓட்டியிருக்கிறீர்களா?

**கலைஞர்** : நான் அந்த முயற்சியில் ஈடுபடாதது, மக்கள் மீது எனக்குள்ள அன்பைக் காட்டுகிறது.

**கல்கி** : சீப்பை உபயோகப்படுத்த முடியவில்லையே என்கிற வருத்தம் உங்களுக்கு உண்டா?

**கலைஞர்** : இதற்கொரு சிறு சம்பவம் சொல்கிறேன். எனக்கு முதன் முதலில் ஒரு காலணா அளவுக்கு - இப்போதைய ஒரு ரூபாய் அளவுக்கு - வழுக்கை விழுந்த போது, அண்ணா அந்த வழுக்கையைத் தொட்டு, 'வழுக்கை விழுது.. தொத்தாகிட்டச் சொல்லு. (தொத்தா என்பவர் அண்ணாவின் சின்னம்மா) பச்சிலை மருந்து கொடுப்பாங்க. அதைப் போட்டால் சரியாப் போயிடும்' என்று சொன்னார். 'இப்படியே இருக்கட்டும் அண்ணா!' என்றேன். ஏனென்று கேட்டார். 'வழுக்கை விழுந்து கொஞ்சம் முதிர்ச்சியடைந்தால்தான் என்னை மதிப்பீங்க. இப்போ என்னை சின்னப் பையனாத்தான் நினைச்சுக்கிட்டிருக்கீங்க!' என்றேன். ஆக, வழுக்கை பற்றி நான் கவலைப்பட்டதேயில்லை. அதை மாற்றிக் கொள்வதற்கான எந்த முயற்சியிலும் நான் ஈடுபட்டதில்லை. இருக்கிறபடி இருக்கட்டும் என்று விட்டு விட்டேன்.

**கல்கி** : மேடைகளில் கடுமையாகத் தாக்கிப் பேசுகிற அளவுக்கு மாற்றுக் கட்சிகளில் உள்ளவர்கள் யாரும் உங்களுக்குத் தனிப்பட்ட முறையில் நண்பர்களாக இருக்கிறார்களா?

**கலைஞர்** : நிறைய. ஜி. உமாபதி மேடைகளில் இடித்தான் பேசுவார். என்றாலும் தனிப்பட்ட முறையில் அளவு கடந்த அன்பு காட்டுவார். கண்ணதாசன் என்னைக் கடுமையாகத்தான் விமர்சிப்பார். இருந்தாலும் கடைசி வரை நண்பராகத்தான் இருந்தார். எந்தக் கட்சியிலும் இல்லாத ஒரு பழக்கம் அ.தி.மு.க.வில்தான் உண்டு. நேரில் பார்த்துக் கொள்ளும் போது அவர்கள் பேசக் கூட மாட்டார்கள்! ●

படங்கள் : **ரவிசங்கரன**









1998 ஜூன் 14
வெகுதான்ய வைகாசி 31
மலர் : 56
இதழ் : 46

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# பகல் கனவு பட்ஜெட்!

இரவோடிரவாக பெட்ரோல் விலை நான்கு ரூபாய் ஏறியது! இருபத்து நான்கு மணி நேரம் கழித்து, 'இல்லையில்லை; ஒரு ரூபாய்தான் விலை உயர்த்த வேண்டும்' என்று தெளிவு படுத்தினார் நிதியமைச்சர் யஷ்வந்த் சின்ஹா.

இரவு பகலாக பெரிய பெரிய அதிகாரிகளெல்லாம் முயன்று தயாரித்த திட்டத்தில்தான் இப்படியொரு குழப்பம்!

அந்த இருபத்துநாலு மணி நேரத்தில் நுகர்வோர் கொடுத்த கோடிக்கணக்கான ரூபாய் கூடுதல் தொகையை எப்படி அவர்களுக்குத் திருப்பித் தரப் போகிறது அரசு...? இக் கேள்விக்கு நிதியமைச்சரிடம் பதில் இல்லை!

இந்த வரலாறு காணாத குழப்பம் தவிர, யஷ்வந்த் சின்ஹாவின் பட்ஜெட்டில் ஏதேனும் உருப்படியாக இருக்கிறதா என்று பார்த்தால் ஏமாற்றம்தான்!

பெட்ரோல், பணக்காரர்களின் உபயோகத்துக்கான பொருள் என நிதியமைச்சர் வழக்கமான சமாதானத்தைச் சொல்கிறார். ஆனால், நாட்டில் பெரும்பாலான கார்கள் அரசுக்கும் தனியார் நிறுவனங்களுக்கும் சொந்தமானவை. அவற்றுக்கு ஆகக் கூடிய கூடுதல் பெட்ரோல் செலவு சராசரி சாமானிய இந்தியனின் தலையில்தான் விடியும்!

தனி நபர் வருமான வரிக்கான உச்ச வரம்பு, ஆண்டுக்கு நாற்பதிலிருந்து ஐம்பதாயிரமாக்கப்பட்டிருப்பதும் Standard deduction எனப்படும் வரிவிலக்கு பெறும் வருமானத் தொகை இருபதாயிரத்திலிருந்து இருபத்தைந்தாயிரமாக உயர்த்தப்பட்டிருப்பதும் மட்டுமே சின்ன ஆறுதல்கள்.




கிரெடிட் கார்ட் வைத்துள்ளவர்கள் எல்லோருமே வருமான வரிக் கணக்கு சமர்ப்பிக்க வேண்டும் என்பது போன்ற சில புதிய, நடைமுறைக்கொவ்வாத நிபந்தனைகள் புகுத்தப்பட்டுள்ளன. இன்று சராசரி இல்லத்தரசிகள்கூட கிரெடிட் கார்ட் வைத்திருக்கிறார்கள். இவர்கள் வருமான வரி எல்லைக்குள் வருவது அரிது.

வங்கியில் ஐம்பதாயிரம் ரூபாய்க்கும் அதிகமாக டெபாஸிட் செய்வோர் தங்கள் வருமான வரி நிரந்தர அகவுண்ட் எண்ணைச் சமர்ப்பித்தே ஆக வேண்டும் என்றும் பட்ஜெட் விதிக்கிறது!

சொத்தையோ ஷேர்களையோ விற்றுப் பெருந்தொகை பெறுகிறவர்கள், வருமான வரி செலுத்துவோராக இருக்க வேண்டும் என்பது அவசியமில்லை. அத்தகையோர் தாங்கள் பெறும் தொகையை வங்கியில் எப்படி டெபாஸிட் செய்வார்கள் என்பதும் புதிராகவே உள்ளது.

இது போன்ற சட்ட திட்டங்களால் வேலைப்பளுதான் அதிகரிக்குமேயொழிய அரசின் வருமானம் அதிகரிக்காது!

அரசு செலவினங்களைக் குறைக்க எந்த முயற்சியையும் நிதியமைச்சர் மேற்கொள்ளவில்லை! பட்ஜெட்டின் நிகர பற்றாக்குறை 91,025 கோடி ரூபாய்!

இந்தப் பற்றாக்குறையை ஈடு செய்வது ஒரு பக்கம் இருக்கட்டும். ஏற்கெனவே வாங்கியுள்ள கடன்களுக்காக அரசு செலுத்த வேண்டிய வட்டித் தொகை 75,000 கோடி! அரசின் வருவாயில் பெரும்பகுதி இப்படி வட்டி செலுத்தவே போய் விடுகிறதென்றால் அபிவிருத்தி திட்டங்களுக்குப் பணம் எப்படி கிடைக்கும்?

பொதுமக்களின் சேமிப்பை அதிகரிக்கச் செய்வதற்கான ஊக்கமளிக்கும் முயற்சிகளும் பட்ஜெட்டில் இல்லை; பங்கு மார்க்கெட்டுக்குள் புது ரத்தம் பாய்ச்சும் முயற்சியும் இல்லை.

மாறாக, முக்கியமான பொதுத்துறை நிறுவனங்களின் பங்குகளைச் சந்தையில் விற்பனைக்குக் கொண்டு வர முடிவெடுக்கப்பட்டுள்ளது. 76 சதவிகித பங்குகளைத் தனியார் வசமளிக்க அரசு தயார்...! கொள்கை ரீதியில் இது நல்ல திட்டம் என்றாலும் பங்குச் சந்தை தூங்கி வழிகிற கால கட்டத்தில் 'கடை விரித்தேன் கொள்வார் இல்லை' கதையாகத்தான் முடியும். கடந்த பட்ஜெட்டில் தனியார்மயமாக்கல் நடவடிக்கைகள் அறிவிக்கப்பட்டு அவை சுத்தமாக எடுபடாமல் போயின. அந்த நடவடிக்கைகள் மூலம் சென்ற நிதியாண்டில் அரசு பெற நினைத்த வருமானம் ஏராளம்;




கிடைத்ததோ அற்ப சொற்பம்!

அதனால், சென்ற ஆண்டின் வரவு - செலவுத் திட்டமே பலத்த அடி வாங்கியது. இது பி.ஜே.பி அரசுக்குத் தெரியாத விஷயமில்லை... தெரிந்தே மீண்டும் அதே தப்புக் கணக்குப் போடுகிறார்கள் என்பதுதான் வேதனை.

புதிய பொருளாதாரக் கொள்கையின் தொடர்ச்சியாக இந்த பட்ஜெட் என்ன வழங்கியிருக்கிறது என்று பார்த்தாலும் ஏமாற்றம்தான்! இன்ஷ்யூரன்ஸ் பிரிவு தனியார் மயமாகும் என்கிறார்கள். ஆனால் இப்பிரிவில் அயல்நாட்டு நிறுவனங்கள் நுழைய அனுமதி கிடையாது.

இப்படி, ஒரு பக்கம் 'சுதேசி' வீரம் பேசினாலும் இந்த நிதியாண்டில் அயல்நாட்டு நேரடி முதலீடு மூன்று பில்லியன் டாலர் இருக்கும் என்று 'கணக்கு' கொடுக்கிறார் யஷ்வந்த் சின்ஹா!

இந்தக் கணக்குக்கு என்ன ஆதாரம்? என்ன அடிப்படை என்பதெல்லாம் விவரிக்கப்படவில்லை.

போக்ரான் பயங்கரங்களுக்குப் பின் பயமுறுத்துகிற பொருளாதாரத் தடைகளை ஒரு பக்கம் அலட்சியப்படுத்துகிறது பி.ஜே.பி அரசு. இன்னொரு பக்கத்தில் அந்நிய முதலீடுகள் குறித்து இப்படிப் பகல் கனவு காண்கிறது!

விவசாயம் சார்ந்த தொழில்கள் பட்ஜெட்டில் கவனம் பெறும் என தேர்தல் அறிக்கையில் வாக்களித்திருந்தது பி.ஜே.பி. அந்த வாக்குறுதியும் நிறைவேற்றப்படவில்லை! ஏதேனும் ஒரு துறைக்கு முக்கியத்துவமும் புத்துயிரும் அளிக்கும் வகையில் வரவு செலவுத் திட்டத்தை அமைத்திருக்கலாம்.

ஆனால், பெட்ரோல் விலை தொடங்கி அந்நிய முதலீடு வரை முரண்பாடுகள் நிறைந்ததாகவே இருக்கிறது பட்ஜெட்.

தனி நபர்கள், சிறு/பெரு தொழிலதிபர்கள், பங்குச் சந்தை முதலீட்டாளர்கள், நடுத்தர வர்க்கம் என அனைத்துப் பிரிவினருமே அதிருப்திப்பட்டுக் கொள்ளும்படியான 'சாதனை' பட்ஜெட் தயாரித்திருக்கிறது பி.ஜே.பி!

ஒரே ஒரு விளைவைத்தான் இந்த பட்ஜெட் காரணமாக எதிர்பார்க்கலாம்:

விலைவாசி உயர்வு!

**கோவையிலிருந்து சுமார் 15 கி.மீ. தூரத்தில் உள்ளது சின்னத்தடாகம். அண்மையில் அங்கு நடந்த ஒரு தனி மனிதப் பிரச்னை ஜாதிப் பிரச்னையாக மூண்டு கலவரமாகி விட்டது. என்னதான் நடக்கிறது? நேரில் சென்று பார்த்தோம்.**

# ஜாதிப் பிரச்னையான ஒரு சம்பவம்

"என்ன ஏதுன்னு தெரியலை சார். ரெண்டு நா முன்னாடி கிழக்கு வளவு (தெரு) பசங்க நிறையப் பேர் திரண்டு வந்தாங்க. கதவ மூடுன்னு கத்தினாங்க. வடக்குப் பக்கம் ரெண்டு கடைய உடைச்சுட்டதா கூட சொல் றாங்க. அப்ப சாத்திட்டுப் போனவங்க நாங்க. இன்னைக்குத்தான் கடை திறந்திருக்கோம். உங்களுக்கு ஏதும் தெரியணும்னா கிழக்கு வீதி போங்க!"

– ஒரு பேக்கரிக் கடைக்காரரைத் துருவிய போது கிடைத்த தகவல் இது மட்டுமே.

பஸ் ஸ்டாப்பிலேயே 'கம்யூனிஸ்ட்' மன்றங்கள்.. எம்.ஜி.ஆர்., ரஜினி அமைப்புகள். அவர்களை அணுகிய போதோ 'தலைவர் இல்லை, செயலாளர் இல்லை. எங்களுக்கு எதுவும் தெரியாது' என்கிற மாதிரி அவரவர் 'செஸ் போர்டிலும்' 'கேரம் போர்டிலுமே' கவனம் செலுத்த, ஒரு கடை வாசலில் (படிக் கட்டில்) உட்கார்ந்திருந்த பெரியவரை அணுகி னோம்.

"வேறொன்னுமில்லை தம்பி. ஒரு தாழ்த் தப்பட்ட பையன், எங்க பொண்ணோட கையப் புடிச்சு (முத்திரையர் சமூகம்) இழுத் துட்டான். அதுதான் ஊர்ல எல்லாம் சேர்ந்து.. ஆமா... நீங்க யாரு உங்க ஊர்ல எப்படி...?" என ஏற இறங்க நம்மைப் பார்த்ததுதான் தாமதம். நாம் 'நைஸாக' நடையைக் கட்டி னோம்.

பிரச்னைக்குள்ளானதாகக் கூறப்படும் அம்பேத்கர் நகர், எம்.ஜி.ஆர் நகர் (தலித் காலனி) பக்கம் கொத்து கொத்தாய் இளை ஞர்கள். 'பத்திரிகை' எனச் சொன்னதும் நம் மைச் சூழ்ந்து கொண்டனர்.

"என்ன சார்... எத்தனை பத்திரிகைகளுக் குத் தகவல் கொடுத்தோம். ஒருத்தரும் வரலை.. வராமலே என்னென்னவோ எழுதி விட றாங்க. ஒன்னுமே புரியலை...!"

– என உரிமையாய்ச் சில குரல்கள்... என்ன பிரச்னை என வினவிய போது, "நீங் களே வந்து பாருங்க சார்...!" என அழைத்துச் சென்றனர்.

அவர்கள் அழைத்துச் சென்ற எம்.ஜி.ஆர் நகரிலுள்ள வீடுகள் முன்னால் நிறைய ஓட்டுச் சிதறல்கள். ட்யூப் லைட் உடைசல்கள்!

"எங்களுக்கு எதுவுமே தெரியாதுங்க சாமீ முந்தா நாள் ராத்திரி தலையில இடி விழுந்த மாதிரி சத்தம். என்னன்னு ஓடி வந்து பார்த்தா வெளியில அவுங்க ஜாதி ஆளுக. கல்லையும், தடியையும் தூக்கி அடிச்சு, உடைச்சு... இங்கே பாருங்க டேப்ரிக்கார்டு.. அவங்கதான் உடைச் சது....!"

"இங்கே வந்து பாருங்க சார். சாமி போட் டோவெல்லாம் கூட உடைச்சு.."

– இப்படிப் புகாரும், கண்ணீருமாய் நின்ற வர்கள் ஏராளம்.

"சரி... இதுக்கெல்லாம் என்ன காரணம்?" – எனக் கேட்ட போது நேசக் கரங்கள் நற் பணி மன்றத்தைச் சேர்ந்த ஒருவர் விளக்க முன் வந்தார்.

"18ந் தேதி இது நடந்தது சார். எங்க பையனுக்கும் முத்திரையர் ஜாதிப் பொண் ணுக்கும் ஏற் கெனவே பழக்கம் உண்டுன்னும்... அவளை இவன் கையப் புடிச்சு இழுத்தான்னும்... அவ இவனைச் செருப்பால அடிக்க வந்தான்னும்..."



• பாதிக்கப்பட்டவர்கள்...



என்று அவர் இழுக்க.

"டேய், உனக்குத் தெரியுமாடா? சொல்றதுன்னா சரியாச் சொல்லு. இல்லேன்ன உடு. சார்! அந்தப் பையனுக்கும் பொண்ணுக்கும் பக்கத்து பக்கத்து வீடு. ரொம்ப நாள் பழக்கம்ன்னு கேள்வி. அந்தப் பொண்ணுக்குக் கல்யாண ஏற்பாடு ஆயிடுச்சு போல. அது சம்பந்தமா அவளைப் போய் அவன் ஏதோ கேட்கப் போக, (ஜன நடமாட்டம் இல்லாத பகுதியில்) அந்தப் பொண்ணு செருப்பால அடிக்க வந்திருக்கா.. அடிக்க வந்தவளை இவன் தடுக்கப் போக... இதைத் திசை மாத்தி இவன் அவளைக் கெடுக்கப் போனதாச் சொல்லி, அவனை அடிச்சு உதைச்சு, புகார் கொடுத்து... நாங்க அவன் மேலே தப்பு இருந்தா நடவடிக்கை எடுக்கச் சொல்லி அவனை போலீஸ்லயும் ஹேண்ட் ஓவர் பண்ணீட்டோம்.

"அதுக்குப் பின்னாலேயும் ஆளாளுக்கு எங்களை மொத்தமா ஜாதியச் சொல்லி திட்டிட்டு ராவோட ராவா எங்க வீடுகளுக்குள் புகுந்து பாத்திரம் பண்டமெல்லாம் எடுத்தெறிஞ்சு... கூரையெல்லாம் பிடுங்கியெறிஞ்சு... கிட்டத்தட்ட நூறு குடும்பங்க தெருவுல சார்!" என்றார் ஒருவர்.

இது குறித்து தடிகம் பஞ்சாயத்துத் தலைவர் ரங்கநாயகி (த.மா.கா.)யிடம் விவரம் கேட்டபோது, அவர் தமது கணவரிடமே (சுப்புசாமி) கருத்துக் கேட்கச் சொன்னார். அவரும் த.மா.கா. பிரமுகர்தான். (மனைவி தலைவி என்றாலும் ஊர்ப் பிரச்னைகள் சுப்புசாமி தான் கவனிக்கிறார் எனப் பேச்சு.) அவர் இது பற்றிப் பேசினார்:

"அந்தப் பொண்ணுக்கும் பையனுக்கும் பழக்கம் எல்லாம் எதுவும் இல்லை. பிரச்னை கிளம்பின மறுபமே நாங்க சம்பந்தப்பட்டவங்களைக் கூப்பிட்டுப் பேசி சமாதானப்படுத்தியும் விட்டோம். அவனைக் கைது செய்யும் முன்னாலேயே இரு தரப்பும் என்னிடம் வந்திருந்தனர். பேசியும் அனுப்பினோம். இரண்டு தரப்பு அடிதடி கலாட்டாவிலும்தான் வீடுகள் சேதப்படுத்தப்பட்டதேயொழிய அது ஒரு தரப்பு மட்டும் செய்த காரியமல்ல!" என்றார்.

'சமத்துவபுரம்' உருவாக்கும் முயற்சியில் அரசு ஈடுபட்டு வரும் இந்தச் சமயத்தில் தனிப்பட்ட பிரச்னையைக் கூட ஜாதிப் பிரச்னையாக்குகிற போக்கு இப்போதெல்லாம் அடிக்கடி நிகழும் ஒன்றாகி விட்டது. இது வருந்தத்தக்கது.

கட்டுரை, படங்கள் : **கேயெஸ்வி**



மஹாராஷ்டிர மாநிலத்தின் கராட் **(Karad)** பகுதியிலிருந்து பாராளுமன்ற உறுப்பினராக இருக்கும், வயதில் முதிர்ந்த எமது உறவினர் பிரமிளாபாய் சவாண் என்பவர் சுவாமிஜியைத் தரிசனம் செய்ய விரும்பி, 24 ஆகஸ்ட் 1980 காலை 7.30 மணிக்கு என்னுடன் சங்கர மடத்திற்கு வந்தார். நாங்கள் சென்றவுடனேயே சுவாமிஜி எங்களைக் கூப்பிட்டு உள்ளே இருந்த அறையில் அமரவைத்தார். சுவாமிஜி என்னிடம், ஹாஸ்பெட்டிலிருக்கும்

**காஞ்சி முனிவர் ஜயந்தி 9.6.98**

# தவறு செய்பவர்கள் தண்டிக்கப்பட வேண்டும்!

பாடசாலைக்கு எடுத்துச் செல்வதற்காக ஒன்றிரண்டு புத்தகங்களும் ஆதி சங்கரரும் அவரது நான்கு சீடர்களும் அமர்ந்திருக்கும் காட்சியின் ஓவியத்தினுடைய ஒரு பழைய பிரதியும் கொடுத்தார். என் மூலமாக சுவாமிஜியிடம் சில கேள்விகளை பிரமீளாபாய் சவான் கேட்டார். தேசத்தின் இன்றைய நிலையைப் பற்றியும், சட்ட ஒழுங்கின்மைப் பற்றியும், சாதி மதக் கிளர்ச்சிகள் பற்றியும் தமது கவலையைத் தெரிவித்தார். இவற்றிலிருந்து நமது நாடு விடுபடுமா என்று கவலையுடன் கேட்டார்.

சுவாமிஜி சொல்லிய பதிலிலிருந்து நமது நாட்டின் அரசியல் நிலைமை பற்றி அவருக்கு நன்றாகத் தெரிந்திருக்கிறது என்பது தெளிவாகப் புலனாகியது. வோட்டுக்களைப் பெற வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் இயங்கும் இன்றைய அரசியல் கட்சிகள், சாதி மத இன வேறுபாடுகளில் ஈடுபடக் கூடாது என்கிற கொள்கையை அறவே மறந்து விட்டிருக்கின்றன. அரசியல் கட்சிகள் சமய வெறியைத் தூண்டும் கட்சிகளுடன் எவ்வித உறவும் வைத்துக் கொள்ளக்கூடாது என்ற தீர்மானத்துடன் இயங்க வேண்டும். இந்து, முஸ்லிம் என்றெல்லாம் வித்தியாசம் பாராட்டாமல் சுதந்தரம் பெற்ற புதிதில் இருந்த மாதிரி வாழ முயல வேண்டும். தவறு செய்பவரை பயமின்றி, சார்பு இன்றி, நடுநிலையோடு, அதே சமயம் வெறுப்பு அல்லது கோபம் கொள்ளாமல் தண்டிக்க வேண்டும். அறியாமல் நெருப்பில் கையை இடப் போகும் குழந்தையைக் கூட கையால் தட்டித்தான் விலக்க வேண்டும். அதே போல் தவறு செய்பவரையும் அவருடைய சொந்த நலனுக்காகவும், தேசத்தின் நலத்திற்காகவும் பலவந்தமாகத் தடுக்க வேண்டும். அவ்விதம் தடுக்காவிட்டால் ஒழுக்கம் இன்மை எங்கும் பரவி மற்றவர்களைப் பாதிக்கும். ஒரு நீதிபதி மரண தண்டனை விதிப்பது கோபத்தினாலோ அல்லது வெறுப்பினாலோ இல்லை. சட்டத்தை நிலைநிறுத்தவே அவ்விதம் தண்டனையை அளிக்கிறார். ஒரு மனிதனை அவனுடைய சூழ்நிலைதான் உருவாக்குகிறது என்று சுவாமிஜி சொன்னார்.

நன்றி: காஞ்சி பரமாச்சாரியார் (ஓர் ஆன்மீக, மானுட உறவு; என்னுடைய நாட்குறிப்பிலிருந்து சில பகுதிகள்),
ஆசிரியர்: எம்.ஓய். கோர்ப்படே,
வெளியீடு: வித்யாரண்ய வித்யா பீட அறக்கட்டளை,
ஹாஸ்பெட்-583 201, கர்நாடகா,
விலை: ரூ. 225/-

**அருள்வாக்கு**

போஜனம் என்பது உடம்பை வளர்ப்பதற்கு மட்டுமல்ல, உள்ளத்தை வளர்த்துக் கொள்வதற்கும் உதவும்படியாக அதைப் பண்ணிக் கொள்ள வேண்டும் என்பதாலேயே சாஸ்திரங்களில் ஆஹாரத்தைப் பற்றி அநேக நியமங்கள் சொல்லியிருக்கிறது.

— காஞ்சி முனிவர்

● "தமிழ்நாட்டில் சட்டம்-ஒழுங்கு நன்றாகத்தான் இருக்கிறது!" என்று டெல்லியில் நமது ஆளுனர் வெளியிட்ட அறிவிப்பு ஜெயை கலக்கியிருக்கிறது. "முன்பு வந்த ஐ.ஏ.எஸ். அதிகாரி அசோக்குமாரும் அப்படித்தான் சொன்னார். அவரை மாற்றி விட்டார்கள். இப்போது ஆளுனரும் சொல்லியிருக்கிறார். போகிற போக்கில் அவரையும் மாற்றி விடுவார்களா?" என்று கேட்கிறது தி.மு.க. வட்டாரம். ஆனால் உண்மை என்னவென்றால் ஏற்கெனவே இரண்டு வாரங்களுக்கு முன்பு நாம் சொன்னபடி, கவர்னரை மாற்ற ஜெ. தொடர்ந்து 'பிரஷர்' கொடுத்துக் கொண்டிருக்கிறார் என்பதுதான். "எதையுமே பட்ஜெட் கூட்டத் தொடர் முடிந்ததும் பார்த்துக் கொள்ளலாம்" என்பதுதான் பா.ஜ.க.வின் இப்போதைய சமாளிப்பு. "ஆட்சிக் கலைப்பு என்பது ஓர் அரசியல் முடிவு. கவர்னர், அரசைப் பற்றி ஆஹா, ஓஹோ வென்று பாராட்டி காலையில் அறிக்கை கொடுத்தாலும், மாலையில் அரசைக் கலைக்க முடியும். ராஜ்ய சபா தேர்தல், பட்ஜெட் தொடர் என்று பார்த்துக் கொண்டிருந்தால் அவ்வளவு தான். அரசியலில் தாமதிக்கும் ஒவ்வொரு நாளும் எதிராளி வலுப் பெற்று விடுவான். எனவே எங்கள் தலைவி, விடமாட்டார்" என்கிறார் அ.தி.மு.க. முன்னாள் அமைச்சர் ஒருவர்.

ஜெ. கவர்னரைச் சந்தித்த பின் அவர் தில்லிக்குச் சென்ற சமயத்தில், அ.தி.மு.க. தலைமை நிலையத்தில் ஒரே உற்சாகமயம்தான். "கொஞ்சம் பொறு மாமு. நெட்டையா, மீசை வைச்சு இருக்கானே அந்த இன்ஸ்பெக்டரைத்தானே சொல்லறே... கலாச்சிடலாம். கவலைப்படாதே" என்று சொல்லிக் கொண்டிருந்தார் ஒரு முன்னாள் எம்.எல்.ஏ. ரத்தத்தின் ரத்தத்திடம். அ.தி.மு.க தொண்டர்களிடம் "பொற்கால" நினைவுகள் பளிச்சிடுகின்றன.

● ஒரு முறைக்கு இரண்டு முறை காதைத் தீட்டிக் கேட்டுக் கொண்டோம். அந்த செங்கை வட்டார தி.மு.க. முக்கிய பிரமுகர்தான் அந்த கழக மாவட்டக் செயலாளரைப் பற்றிச் சொன்னார். மனிதனின் சொத்து மதிப்பு இப்போது கோடிக் கணக்கில்தானாம். அதில் கொஞ்சம் சில்லரையை எடுத்துத்தான் பவள விழாவுக்குச் செலவழித்திருக்கிறாராம். "இப்படி கொள்ளையடிப்பவர்களைத்தான் முதல்வர் அருகில் அனுமதிக்கிறார்" என்பது எங்களைப் போன்ற உண்மைத் தொண்டர்களுக்கு வேதனையாக இருக்கிறது" என்றார் அவர். முதல்வரை நெருங்கும் வாய்ப்பு கிட்டியிருப்பதால், அந்த மனிதரின் அதிகார துஷ்பிரயோகங்களுக்கு எல்லையே இல்லாமல் இருக்கிறதாம். "அந்தம்மா ஆட்சி வந்தாலும் எனக்குக் கவலையில்லை, சின்னம்மா, மூலம் எதையும் சமாளித்துக் கொள்வேன்" என்கிறாராம். சின்னம்மாவும் அவரும் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள். மனிதர் பிழைக்கத் தெரிந்தவர்தான்!

● பவள விழா முடிந்ததும் அமைச்சரவையில் கூட்டல் - கழித்தல் இருக்கும் என்ற பேச்சு தி.மு.க. வட்டாரத்தில் மீண்டும் வலுப்பெற்றிருக்கிறது. "இதற்கிடையில் சில பத்திரிகைகளில் அவருக்கு வாய்ப்பிருக்கிறது. இவருக்கு வாய்ப்பிருக்கிறது என்று எழுதுவது கூட சம்பந்தப்பட்டவர்களுக்கு ஒரு தடங்கலாகப் போகலாம்" என்றும் பேச்சு! "அது போலச் செய்திகள் வந்தால் தலைவருக்குப் பிடிக்காது; ஏதோ நாங்கள் சொல்லித்தான் அவர்கள் எழுதுகிறார்கள்! என்று எடுத்துக் கொண்டு விட்டால் எங்கள் சான்ஸ் அடிபட்டுப் போய்விடும்" என்கிறார் ஒரு

**கவர்னர் பேட்டி: கலக்கத்தில் ஜெ**

படம் : சௌந்தர்ராஜன்





பட்டிருக்கிறார்கள். இதற்கிடையில் 'என் கணவர்' என்று தயாளு அம்மாள் கலைஞரைப் பற்றிச் சொன்ன குங்குமம் கவர் ஸ்டோரி விளம்பரம், 'சன்'னில் இரண்டு நாட்கள் வெளிவந்த பின்னர் வெட்டப் பட்டது. இதுவும் குடும்ப குழப்பத்தைத் தவிர்க்கவே செய்யப்

பிரமுகர். ஆனால் இதிலும் ஒரு அரசியல் குசும்பு இருக் கிறதாம். 'ஒரு குறிப்பிட்ட ஆளுக்கு கிடைக்கக் கூடாது' என்று எதிர் பார்ட்டி நினைத்து விட்டால், "அவருக்குத்தான் கிடைக்கும்" என்று புலனாய்வு நிருபர்களிடம் செய்தியைப் பரப்புவார்கள். ஏனென்றால் அது போன்ற செய்திகள் வெளிவருமானால் அது நெகடிவ்வாக வேலை செய்யுமாம். அடேங்கப்பா!

● ஆண்டி - போண்டி கார்ட்டூன் போட்டு சன் தொலைக்காட்சி மேலுள்ள தமது அதிருப்தியைக் கலைஞர் காட்டிக் கொண்டவுடன் 'குடும்பத்துக்குள் குழப்பம் எதற்கு' என்று சன்னும் வழிக்கு வந்து விட்டது. செய்திப் பிரிவிலுள்ளவர்கள் (குறிப்பாக தலைமைப் பொறுப்பிலிருப்ப வர்கள்) கழகச் செய்திகள் விஷயத்தில் தாராளம் காட்டும்படி கேட்டுக் கொள்ளப் பட்டதாம். பவளவிழா அன்று சன்னில் அறிவிப்பாளர்களும் செய்தி படிப்பவர்களும் நிகழ்ச்சித் தொகுப்பாளர் களும் ஒட்டு மொத்தமாகச் சென்று கலைவாணர் அரங்கத்தில் கலைஞரை வாழ்த்திவிட்டு வந்திருக்கிறார்கள்.

● 'டாக்டர் கிருஷ்ணசாமி மீது கலைஞர் கோபமாக இருக்கிறார். அதனால் பவளவிழாவில் பேசும் வாய்ப்பு கட்டாகி விட்டது' என்று முன்பு எழுதியதை வாபஸ் பெற்றுக் கொள்கிறோம். பவள விழாவில் டாக்டர் பேசினார். "கலைஞரை ஒரு நொடிப் பொழுதும் வீணாக்காத உழைப்பாளி என்று கல்கிக்கு பேட்டி கொடுத்திருக்கிறேன்" என்றும் பேசினார். ஆனால் ஒரு சந்தேகம்! பவள விழா பொதுக் கூட்டம் பற்றி வைக்கப் பட்ட பல பெரிய பேனர்களில் பேச்சாளர்களின் வரிசையில் டாக்டரின் பெயர் ஏன் இடம் பெறவில்லை? ●

— தில்லப்பா

## மூன்றாம் உலக யுத்தம்

அன்பு - காதல்
இரக்கம் - இனிமை
இதயம் - உறவு
மனுஷன் - மனிதம்
மனிதநேயம், மண்ணாங்கட்டி
எழுதித் தீர்த்து,
பேசி மாய்ந்து,
உருகி உருகி உரைகள்
சொல்லி,
மென்மைக்குக் கொடி பிடித்து,
பனிச்சறுக்கு வாழ்வுக்கென
தவமிருந்து, யாசித்து,
தூறல், சாரல் போல் சுகமாய்
இருக்கும் பொழுது எனக்
கனவு கண்டு, பிடித்தது பித்து.
அம்மாவுக்கு அவள்மேல்
ஆயிரம் விமர்சனம்
மூக்கை நொடித்து, தோளில்
இடிக்கும்
அவளின் செய்கையில்
பலப்பல வலிகள்.
இரண்டு வாள்களை
இழுத்துச் சொருகிச்
சொருகி,
ஒழிந்து போய்க்
கொண்டிருக்கிறது
என் உறை.

கவிதை சூப்பரா? ஆறுமாசம் முன்னால கல்யாணம் ஆன என் ஃப்ரெண்டு ஒருத்தன் எழுதினது! கூடவே ஒரு தத்துவம் வேற சொன்னான்:

"கல்யாணம் பண்ணிக்காதவன் முட்டாள். பண்ணிட்டவன் அடி முட்டாள்!" (யாரோ சொன்னதுதான்!)

இதனால் அறியப்படுவது? தத்துவஞானி ஆக வேண்டுமானால் டும்டும்முக்குச் சம்மதியுங்கள். (நான் டாக்டரா மட்டுந்தாம்ப்பா



ஆகப்போறேன்!)

நாத்திப்பத்து டிகிரி வெயில் கொளுத்திச்சி, போனவாரம்! இந்த சுமி மாதிரி மென்பட்டு மேனி உள்ளவங்கள்ளாம் என்ன ஆறது? ஐஸ் க்ரீம் சாப்ட்டு, ஜூஸ் குடிச்சி, ஐஸ் கட்டியால முகத்தைத் தேய்ச்சி, உஸ்ஸு உஸ்ஸுனு பெருமூச்சு விட்டுக்கிட்டு ஒரே அவஸ்தை. போறாத குறைக்கு அப்பப்ப பவர்கட். (ஆற்காடு வீராசாமி வீட்டுல கரண்ட் கட் ஆகுதான்னு தெரியலை.) நம்ம லல்லு பிரசாத் யாதவ் ஒரு சூப்பர் கோடை ஜோக் அடிச்சிருந் தார். போக்ரான்ல அணுகுண்டு வெடிச்சதால தான் இவ்ளோ வெப்பம் கொளுத்துதாம். வெயிலே [illegible]

## சாப்டு, கீஸ்து, டகுரு, ஜில்பான்ஸ், நாஸ்தி— என்றால் என்ன?

வ/[illegible]வேன், சாப்டு கன்ட்ருவேன், பொய கீஸ்து இரு(க்)குது. டகுரு, ஜில்பான்ஸ் வேலை, நாஸ்தி பகரு–

இந்த செந்தமிழ்ச் சொற்களுக்கு யாராச்சும் அர்த்தம் சொன்னீங்கன்னா கோடி புண்ணியம். எங்க ஏரியால நடந்த ஒரு அரசியல் மீட்டிங்ல ஒரு லோக்கல்

ஏடிஎம்கே ஆள் பேசின பேச்சுலேர்ந்து பொறுக்கியெடுத்த மணிகள் இவை. ஏற்ற இறக்கங்களோட அவர் இப்படிப்பட்ட அற்புதச் சொற்களைப் போட்டு நாஸ்தி பண்ணினப்ப(சே!) என்னையறியாம கைதட்டத் தோணிச்சி. தமிழுக்கு யார்யாரோ எப்படி எப்படியோ சேவை பண்றாங்கப்பா!

ஒரு தமிழ் எழுத்தாளர், ஃப்ரெண்ஸோட ஜப்பானுக்குப் போயிருக்கார். சும்மா சுத்திப் பார்க்க. ஒரு ஹோட்டல்ல சாப்பிட நுழைஞ்சவர், தனியா ஒரு ஜப்பானியர் உட்கார்ந்து சாப்பிட்டுட்டு இருந்த டேபிள்கிட்டப் போயி, தன் ஜமாவோட உட்கார்ந்து கேஷுவலா அந்த ஜப்பானியரோட அறிமுகம் பண்ணிட்டு, பேச்சுக் குடுத்துட்டே சாப்ட்ருக்காங்க.

விதவிதமா, தொப்பை ரொம்ப சாப்பிட்டதும் சர்வர் பில் கொண்டு வந்து அந்த ஜப்பானியர்கிட்ட குடுத்தாராம்.

"என் பில் எங்கே?"ன்னு இவர் கேட்க, "ஸாரி, நீங்க பே பண்ண முடியாது. நீங்க, நான் சாப்பிட்டுக்கிட்டிருந்த டேபிளுக்கு வந்துட்டீங்க. நாம நண்பர்களா வேற ஆயிட்டோம். இப்ப நீங்க என் விருந்தாளி. நான் பே பண்றது தான் ஜப்பானியப் பண்பாடு"ன்னாராம் அந்த ஜப்பானியர்!

யார்கிட்ட? முன்னபின்ன அறிமுகமில்லாத யாரோ ஒரு வெளிநாட்டுக்காரர்கிட்ட!

அந்த எழுத்தாளர் யாருன்னு தெரியலை. பட், மணிமேகலை பிரசுரம் வெளியிட்டிருக்கற 'ஜப்பான்'ங்கற புஸ்தகத்துல இதைப் படிச்சப்போ புல்லரிச்சிடுச்சி. ஜப்பானியர்கள் எத்தனை 'உயரமான'வர்கள்!

## JOKE OF THIS WEEK:

ஒரு கெமிஸ்ட்ரி டீச்சர், ஸ்டூடண்ஸைப் பார்த்து '$HNO_3$ன்னா என்ன?'ன்னு கேட்டாங்க.

பசங்க திருதிருன்னு முழிக்க, ஒரு பையன் மட்டும், "சே, நெஞ்சுல இருக்கு, வரமாட்டேங்குது டீச்சர்!"ன்னான்.

அதுக்கு டீச்சரோட பதில்:

"சீக்கிரம் கொட்டிடு. இல்லேன்னா, நைட்ரிக் ஆஸிட் எரிச்சிடும்."

— சுபி

# இ.சி.ஜி. என்பது என்ன?

எலக்ட்ரோ கார்டியோ ஜிசால்ப் எனப்படும் இ.சி.ஜி (ECG) பரிசோதனையை நீங்களே செய்து கொண்டிருக்கா விட்டாலும்கூட, சினிமாவில் யாராவது முக்கிய பாத்திரம் சாகப் பிழைக்கக் கிடக்கும்போது எடுக்கப்படுவதைக் கண்டிருப்பீர்கள். இ.சி.ஜி வரைதாளில் உருவாகும் மேலும் கீழுமான பலவிதமான கோடுகளுக்கு என்ன அர்த்தம்? இ.சி.ஜி பரிசோதனையின்போது உடலின் பல பாகங்களில் எதையோ பொருத்துகிறார்களே, அது எதற்காக? தவிர இதயத்தைச் சுற்றி மட்டுமல்லாமல் கையிலும் காலிலும் வேறு எதற்காக இவற்றைப் பொருத்துகிறார்கள்? 'துடிப்பான' சுவாரஸ்யமான இந்த விவரங்களை அறிய வேண்டுமானால், நம் உடலின் செயல்பாடு பற்றிக் கொஞ்சம் புரிந்து கொள்வது அவசியம்.

நம் உடலில் உள்ள திசுக்களிலெல்லாம் 'மின்சாரம்' பாய்ந்து கொண்டிருக்கிறது! ஒரு மின் இணைப்பின் மூலம் எப்படி மின்சாரம் பரவுகிறதோ, அதுபோல நம் உடலில் உள்ள சோடியம் மற்றும் பொட்டாஷியம் அயனிகளில் சங்கிலித் தொடராக நடைபெறும் மாறுபாடுகளால், இந்த மின்னியக்கம் தொடர்ந்து நடைபெறுகிறது. உடலின் ஒரு குறிப்பிட்ட பகுதி சரியாக இயங்குகிறதா என்பதை இந்த மின் இயக்கத்தைப் பதிவு செய்து கண்காணிப்பதன் மூலம் மருத்துவர்களால் கண்டு பிடிக்க முடியும்.

இந்த மின் இயக்கம் முக்கியமாக நடைபெறும் மூன்று பாகங்கள் - இதயம், மூளை மற்றும் சில தசைகள். இந்தப் பகுதிகளில் உள்ள நோயைக் கண்டறிய மருத்துவர்கள் பயன்படுத்தும் உத்திகளைத்தான் முறையே, ECG, EEG, EMG என்கிறோம்.

இதயம் என்பது ஒரு ஜெனரேட்டர் மாதிரி. தனது துடிப்புகளின் மூலம் தானே மின் அதிர்வுகளை உண்டாக்கிக் கொள்ளும் திறன் படைத்தது. இந்த மின் அதிர்வுகள் இதயம் முழுவதும் பரவும்போது, இதயம் சுருங்குகிறது. உடனே ரத்தம் இதயத்திலிருந்து வெளியேறி உடலின் பல்வேறு பாகங்களை அடைகிறது. ஆக இதயத்தை 'இடைவிடாது இயங்கும் ஒரு பம்ப்பிங் ஸ்டேஷன்' என்று குறிப்பிட்டாலும் தவறில்லை.

இதயத்தின் மின் அதிர்வுகளைப் பதிவு செய்யும் இ.சி.ஜி. தொடர்பாக நமக்கு எழுந்த சந்தேகங்களைத் தீர்த்தவர் டாக்டர் சுதா சேஷையன்.

இ.சி.ஜி. பரிசோதனைக்கு உள்ளாகும் நபர் மல்லாக்காகப் படுக்க வைக்கப்படுகிறார். அவர் உடலில் சில



குறிப்பிட்ட இடங்களில், சிறிய தட்டையான மின் கடத்திகள் (ELECTRODES) பொருத்தப் படுகின்றன. இவையெல்லாம் ஒரு கருவியில் இணைக்கப்படுகின்றன. உடலின் இந்தக் குறிப்பிட்ட இடங்களில் வெளிப்படும்




## பரீட்சை எழுத ஒரு வழக்கு!

இவ்வாண்டு ஒன்பது வயதில் பத்தாவது பாஸ் செய்த சிறுவன் 'ததாகட் அவ்தார் துள்சி' உலகிலேயே மிகச் சிறிய வயதில் அந்தச் சாதனையை நிகழ்த்தியவனாகிறான். பிறரை விட ஐந்து ஆண்டு இளையவனாகப் பத்தாவது பரீட்சை எழுதியிருக்கிறான். இது கின்னஸ் ஸில் இடம் பெறலாம்.

வழக்குத் தொடர்ந்து அவன் வெற்றி கண்ட பின்னரே, அவ்தார் துள்சி பரீட்சை எழுதத் தேர்வாணையம் அனுமதித்தது. அடுத்து, பட்டப் படிப்பை மேற்கொள்ள மீண்டும் நீதி மன்ற வாசல் கதவைத் தட்டத் தொடங்கி விட் டான் துள்சி!

ஆதாரம் : ஹிந்து.

— அஜந்தா மஹேந்திரநாத்

**காலிப் என்னும் உருதுக் கவிஞர் தம்மைச் சுற்றிலும் இருப்பவர்கள் தாடி வைத்துக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டு அவர்களிடமிருந்து தம்மை வேறுபடுத்திக் காட்ட தாடியை எடுத்து விட்டார்.**

**காலிப்பைப் பார்த்து விட்டு மற்றவர்கள் தாடியை எடுக்க ஆரம்பித்தார்கள். உடனே காலிப் தாடி வளர்க்க ஆரம்பித்தார்! மற்ற வர்களின் பழக்க வழக்கத்திற்கு நேர்மாறாக இருக்க வேண்டும் என்பது அவரது விருப் பம்! ஆனால் மற்றவர்களோ பிரபல மான இவரைப் பின்பற்ற எண்ணினார் கள்!**

**— ஆர். ஆர். பூபதி**

இதய மின் அதிர்வுகள் மின் கடத்திகள் மூலமாக மேற்குறிப்பிட்ட கருவியை அடைகின்றன. அந்தக் கருவியில் பொருத்தப்பட்டிருக்கும் நீளமான, வால் போன்ற கிராஃப் தாளில் இந்த மின் அதிர்வுகள் மேலும் கீழுமான கோடுகளாகவும், வளைவுகளாகவும் பதிவாகின்றன.

இப்படி உடலில் பொருத்தப்படும் மின் கடத்திகளின் எண்ணிக்கை மொத்தம் ஒன்பது. இதயத்தைச் சுற்றி ($V_1$, $V_2$, $V_3$, $V_4$, $V_5$, $V_6$ என்று மருத்துவர்களால் குறிக்கப்படும்) ஆறு இடங்களிலும், கை மற்றும் கால் பகுதிகளில் ($L_1$, $L_2$, $L_3$ என்று குறிப்பிடப்படும்) மூன்று இடங்களிலும் இவை பொருத்தப்படுகின்றன.

குறிப்பாக இந்த ஒன்பது இடங்களைத் தேர்ந்தெடுப்பானேன்? காரணம் உண்டு. இங்கே இதய மின் அதிர்வுகள் துல்லியமாக மட்டுமல்ல; சீராகவும் வெளிப்படுகின்றன. அதாவது ஓர் ஆரோக்கியமான இதயத்தில் இந்தக் குறிப்பிட்ட பகுதிகளில் உள்ள மின் அதிர்வுகள் எப்போது பதிவு செய்யப் பட்டாலும் ஒரே மாதிரி இருக்கும்.

ஒவ்வொரு மின் கடத்திக்கும் ஒன்று என்கிற வகையில் இ.சி.ஜியில் ஒன்பது வரை படங்கள் கிடைக்கும். இவை தவிர சில குறிப்பிட்ட வகை நோயாளிகளுக்கு ஏற்றது என டாக்டர் கருதும் இன்னொரு பாகத்திலும் பொருத்தப்படலாம். அப்போது மொத்தம் பத்து வரைபடங்கள்.

L என்ற மின்கடத்தியில் மின் அதிர் வுகள் பதிவாகும்போது வழக்கமான மூச்சு, ஆழ்ந்த மூச்சு ஆகிய இரு நிலைகளில் இதயத் துடிப்பைப் பதிவு செய்வதுண்டு. அப்போதும் அதிகப்படி வரைபடங்கள் கிடைக்கும்.

இ.சி.ஜி அறிமுகமாகி சுமார் நூறு வரு டங்கள் ஆகி விட்டன. என்றாலும் இதில் பெறப்படும் கோடுகள் மற்றும் வளைவுகள் உணர்த்துவது என்ன என்பது பற்றி ஆராய்ச்சிகளின் மூலம் ஆழமான ஞானம் பெற வழி கிடைத்திருக்கிறதே தவிர, இ.சி.ஜிக்கு மாற்றுச் சோதனை என்கிற அளவில் எதுவும் உண்டாகிவிட வில்லை.

இ.சி.ஜியின் மூலம் இதயத்தின் எந்தப் பகுதியில் பாதிப்பு ஏற்பட்டுள்ளது, அந்தப் பாதிப்பின் தீவிரம் என்ன என்பதை அறிந்து கொள்ள முடியும். எப்படி? ... அடுத்த இதழில். ●

**— ஜி.எஸ்.எஸ்.**

# அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்புச் சிறுகதைப் போட்டி — 1998

இனிய வாசக எழுத்தாளர்களே, கல்கி நூற்றாண்டு விழா கொண்டாட்டங்களின் இரண்டாவது அறிவிப்பு இது. (முதல் — பொன்னியின் செல்வன்!) பிரமாதமான சிறுகதைகள் மூலம் அசத்த அழைக்கிறோம்.

இவ்வாண்டு, ஸ்பெஷல் அல்லவா? பரிசுத் தொகை கூடியிருக்கிறது.

**முதல் பரிசு — ரூ. 10,000**

**இரண்டாம் பரிசு — ரூ. 7,500**

**மூன்றாம் பரிசு — ரூ. 5,000**




தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 1000 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். தழுவல், உருவல் கூடாது; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டாது.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால்தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்புச் சிறுகதைப் போட்டி'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி: ஜூன் 15.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 2 ஆண்டு மலரில் வெளியாகும்.

எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்!

— **ஆசிரியர்**

மத்திய வர்த்தகத் துறை அமைச்சர் ராமகிருஷ்ண ஹெக்டே. எந்தப் பதவியும் இவரது எளிமையை மாற்றியதேயில்லை. இவர் பதவி விலக வேண்டும் என்று ஜெ. தரப்பில் அறிக்கை விடப்பட, பொறுமைக்குப் பெயர் போன

**"நாம் அணுகுண்டுச் சோதனை நடத்தியிருப்பதால் ஏற்பட்டுள்ள பொருளாதாரத் தடைகள் பற்றி வர்த்தகத் துறை அமைச்சர் என்கிற முறையில் என்ன சொல்லுகிறீர்கள்?"**

"நமது நாட்டுக்குச் சிறிது பாதிப்பு வரலாம் என்பது உண்மைதான். ஆனாலும் சில பத்திரிகைகளும் எதிர்க்கட்சிகளும் சொல்லுகிற அளவுக்கு அது பெரிய பாதிப்பாக இருக்காது."

**"எப்படிச் சொல்லுகிறீர்கள்?"**

"இந்தியாவில் கடந்த ஆறாண்டு காலமாகக் கடைப்பிடிக்கப்பட்டு வரும் புதிய பொருளாதாரக் கொள்கையால், பல வெளிநாட்டு நிறுவனங்கள் நமது நாட்டில் கோடிக்கணக்கிலான முதலீடுகளைச் செய்துள்ளன. குறிப்பாக நமக்குத் தடை விதித்துள்ளதாகச் சொல்லுகிற அமெரிக்கா தவிர ஜப்பான், ஜெர்மனி போன்ற நாடுகளிலுள்ள நிறுவனங்கள்தான் நம் நாட்டில் அதிக முதலீடு செய்துள்ளன. இந்த நிலையில் 'தடை' என்றால் அந்த நாட்டு நிறுவனங்களுக்குத்தான் ஏராளமான நஷ்டம் ஏற்படும். இந்த நிலையில் எப்படி அந்த நாடுகள் நம் நாட்டின் மீது முழுமையான தடையைக் கொண்டு வர முடியும்? அவர்கள் அறிவித்துள்ள பொருளாதாரத் தடைகளெல்லாம் வெறும் ஏட்டளவில்தான் இருக்கும். இதையெல்லாம் யோசித்துத்தான் நாமும் செயல்பட்டிருக்கிறோம்."



**"அணுகுண்டுச் சோதனைக்குப் பிறகு, நமது ரூபாயின் மதிப்பு மிகவும் குறைந்து போயிருக்கிறதே?"**

"இதுவும் தாற்காலிகமானதுதான். மீண்டும் பழைய நிலைக்கே வந்துவிடும். கவலைப்படத் தேவையில்லை."

**"இனியும் இந்தியாவில் முதலீடு செய்வதற்கு வெளிநாட்டு நிறுவனங்கள் முன் வருமா?"**

"ஏன் வராது? முன்பை விட அதிகமாக வரும் என்று எதிர்பார்க்கிறேன். இப்போதுகூட சுமார் பத்தாயிரம் கோடி ரூபாய் முதலீடு செய்வதற்கான பேச்சு வார்த்தைகளில் வெளிநாட்டு நிறுவனங்கள் ஈடுபட்டுள்ளன."

**"அணுகுண்டுச் சோதனைக்குப் பிறகு வெளிநாடு சென்று வந்தவர் நீங்கள். அங்குள்ள இந்தியர்கள் என்ன நினைக்கிறார்கள்?"**

"இன்பம் கலந்த அதிர்ச்சியில் இருக்கிறார்கள். தங்களைப் பெருமையடையச்

ஹெக்டேகூட சீறிக் கொண்டு பதிலறிக்கை விட்டார். இருவருக்கும் இடையிலான பனிப்போர் இன்னமும் தொடர்ந்து கொண்டிருக்கிற நிலையில்தான், அண்மையில் ஹெக்டேயை பெங்களூரில் சந்தித்தோம்...

செய்த செயல் என்று என்னைச் சந்தித்த இந்தியர்கள் சந்தோஷப்பட்டார்கள்"

**"ஜெயலலிதா, உங்கள் மீது ஊழல் புகார் சொன்னாரே?"**

"நல்ல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும்போது, இடையில் இது எதற்கு?"

**"தவிர்க்க முடியாத விஷயம் என்பதால்தான் கேட்கிறோம்..."**

"என் மீது அவர் இரண்டு புகார் கூறினார். ஒன்று, 110 ஏக்கர் புறம்போக்கு நிலத்தை, எனக்கு வேண்டியவர்களுக்கு நான் ஒதுக்கியதாக. இரண்டாவது, கர்நாடகத்திலுள்ள நிறுவனம் ஒன்றிடமிருந்து 2.5 கோடி ரூபாயை நான் கமிஷன் பெற்றதாக. இந்த இரண்டுமே அபாண்டமானவை. இந்தக் குற்றச்சாட்டுகளை முன்பே எழுப்பிய கர்நாடக எதிர்க்கட்சிகளால் 'லோக்பால்' விசாரணையில் நிரூபிக்க முடியாமல் போனவை. உச்சநீதி மன்றத்திலும் தள்ளுபடியான புகார்கள் இவை. இந்த நிலையில் 'கோயபல்ஸ்' மாதிரி திரும்பத் திரும்பக் குற்றம் சாட்டுகிறபோது, நான் எவ்வளவுதான் பொறுமை காட்ட முடியும்? அதுவும் அவர் மீது ஏராளமான வழக்குகளில் குற்றப் பத்திரிகையே தாக்கல் செய்யப்பட்ட நிலையில் – அவை நிரூபிக்கப்பட்டால் அவரால் தேர்தலில் போட்டியிடக் கூட முடியாது என்கிற நிலையில் என் மீது பழி சுமத்துகிறார் என்றால் நான் சும்மா இருப்பேனா?"

**"அவர் உங்கள் மீது இப்படிக் குற்றம் சுமத்துவதற்கு என்ன காரணம்?"**

"அதுதான் எனக்கும் தெரியவில்லை. அவரை என் மகள் மாதிரிதான் நினைத்துக் கொண்டிருக்கிறேன் – இப்போதும்கூட! அவர் யார் கொடுத்த சாவிக்கோ ஆடுகிற பொம்மை போல் செயல்படுகிறார் என்றுதான் நான் நினைக்கிறேன்.

**"சுப்ரமணியசுவாமியைச் சொல்கிறீர்களா?"**

"நான் எதுவும் சொல்லவில்லையே! அவர் யார் என்பது நாடறிந்த உண்மை. அவர் பெயரை நான் வேறு சொல்ல வேண்டுமா?"

**"ஆர்.கே. குமாரின் ராஜினாமா பற்றி?"**

"வேண்டவே வேண்டாம். அவர்கள் அமைச்சர். அவர்கள் கட்சி. அவர்கள் பிரச்னை. ஆனாலும் என் அரசியல் அனுபவத்தில் ஒன்று சொல்ல விரும்புகிறேன். இப்படியெல்லாம் பிரச்னைகளை உருவாக்கிக் கொண்டிருந்தால் வோட்டுப் போட்டு நம்மைத் தேர்ந்தெடுத்த மக்களுக்கு நம்மால் ஒன்றுமே செய்ய முடியாது. இதைப் பற்றி அவர்கள் கவலைப்பட வில்லை என்றே தோன்றுகிறது."

**— ஹெக்டே பேட்டி**

**"முன்னாள் பிரதமர் தேவே கௌடா பற்றி?"**

"அந்த அம்மா (ஜெ)வாவது நேரடியாக மோதுகிற ஆசாமி. ஆனால் இவரோ முதுகில் குத்தும் ஆசாமி; கூட இருந்தே குழி பறிக்கும் ஆசாமி."

**"இன்னும் சில மாதங்களில் கர்நாடகத்தில் சட்டமன்றத் தேர்தல் வரவிருக்கிறது. அதில் லோக் சக்தியின் நிலை எப்படியிருக்கும்?"**

"நாங்களும் பாரதிய ஜனதாவும் சேர்ந்து ஆட்சியைப் பிடிப்போம். அப்புறம் கர்நாடகத்தில் ஜனதாதளத்தைத் தேடித்தான் கண்டுபிடிக்க வேண்டியிருக்கும். வருகின்ற தேர்தலிலேயேகூட எங்கள் கூட்டணிக்கும் காங்கிரஸ்"க்குத்தான் போட்டியே!"

பேட்டி: **நந்தினி**

அட்டை வண்ணப்படம்: **யோகா**

# ஜெ. என் மகள் மாதிரிதான் – இப்போதும்கூட!

சர்க்கார் அலுவலகங்களுக்கே உரிய அசமந்தத்தனம்; ஒரு நூற்றாண்டைக் கடந்து விட்ட வயோதிகக் களைப்பு; உயர்ந்த தூண்கள்; வெளிறிய சுவர்கள்... இவற்றுடன் ஒரு பழங்காலக் கல்லறைக்கே உரிய மயான அமைதியோடு அந்தக் கட்டடம் நின்றிருந்தது.

அந்த என்னெப் பிசுக்குப் பிடித்த வரவேற்பறையில் நான் காத்திருந்தேன். அந்தப் புராதன(?)க் கட்டடத்தின் இரண்டாவது மாடியில் அந்த வரவேற்பறை இருந்தது. பிரமிக்க வைக்கிற அளவுக்கு பிரம்மாண்டமாகவும், அதன் பழைமைக்குப் பொருத்தமில்லாமல் நவீன மின் விசிறிகள்; பாலியூரிதேன் சேர்கள் என்ற தற்கால விஷயங்களுடன் புதுப்பித்துக் கொண்டும் இருந்தது.

கடந்த நூறு வருஷங்களில் யார் யாரோ உபயோகித்த வரவேற்பறை இது என்று நான் நினைத்துக் கொண்டேன். ராபர்ட் க்ளைவ் யாருக்காகவோ காத்திருக்கலாம்; அல்லது ராபர்ட் க்ளைவ்வுக்காக வேறு யாராவது காத்திருந்திருக்கலாம். இப்போது குடிநீர் வாரிய மேலதிகாரிக்காக நான் காத்துக்

சர்' பண்ண ஆரம்பிச்சுட்டியே" என்றேன் மகா எரிச்சலுடன். இதுவே வேறு ஒரு சந்தர்ப்பமாக இருந்திருந்தால் நானும்கூட மஹிமா சௌத்ரியைப் பார்த்து ரசித்திருப்பேன். இப்போது முடியாது. இது தீவிரமான சூழ்நிலை. உடனடியாக அந்த வஸ்துவை நாங்கள் அடைந்தாக வேண்டும். காலையில் அந்த வஸ்துவுக்காகத்தான் நாங்கள் ஆலாய்ப் பறந்து கொண்டிருக்கிறோம். அந்த வஸ்துவின் பெயர் $H_2O$. அதாங்க, தண்ணீர். இவன் என்னடாவென்றால் தீ எரிகையில் ஃபிடில் வாசிப்பேன் என்கிறான்.

அலுவலக ஊழியர்கள் போலிருக்கிறது. குறுக்கும் நெடுக்குமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

"என்னப்பா ஃபிப்த் பே கமிஷன் ரிப்போர்ட் பாத்தியா? உனக்கு ஏதாச்சும் சம்பளத்துல ஏறுதா?"

"எனக்கொண்ணும் இல்லே பாஸ். இருநூறு ரூபா ஏறுது. பிச்சைக் காசு" என்று பேசியபடி இருவர்.

# 'ஸேம் சைட் கோல்'

கொண்டிருக்கிறேன்.

மேலதிகாரியைப் பார்க்க ஏகப்பட்ட பேர் காத்திருந்தார்கள். அவர்களை வரிசையாக உள்ளே அனுப்ப மஹிமா சௌத்ரியின் சாயலில் ஒரு ரிசப்ஷனிஸ்ட். ஆட்களை உள்ளே அனுப்புவது போக மீதமுள்ள நேரத்தில் தன் முகத்தை அவ்வப்போது 'டச் அப்' செய்வதில் செலவிட்டாள்.

"ரிசப்ஷனிஸ்ட் சூப்பரா இருக்கா இல்லே?" என்று அபிப்ராயம் தெரிவித்தான் குமார். அவனும் என்கூட வந்திருந்தான். மேலதிகாரியைப் பார்க்க எனக்குத் துணையாக.

"ரொம்ப முக்கியம். வந்த வேலை ஒழுங்கா முடியணுமேன்னு நானே ரொம்ப 'டென்ஷன்'லே இருக்கேன். நீ வேற 'டார்ச்

சுரேஷ்.ஜி.

"சென்ட்ரல்லே டி.ஏ. அனௌன்ஸ் பண்ணிட்டாங்க. இன்னும் நமக்கு அனௌன்ஸ் பண்ணலியே"

கவலையுடன் ஓர் இளம் பெண்.

ஆக, மற்றவர்கள் யாருக்கும் தண்ணீர்க் கஷ்டம் இல்லை போல. அதனால்தான் அதைத் தவிர மற்றதெல்லாம் பேசிக் கொள்கிறார்கள்.

இப்போது என்னைப் பற்றி: என் பெயர் பன்னீர்செல்வம். சுருக்கமாகப் பன்னீர். சிவப்பு 'சிக்னலின்போது சாலையைக் கடக்காத, 'ஒன்வே'யில் அலட்சியமாகப் பிரவேசித்து போலீஸ்காரரிடம் மாட்டி 'தண்டம்' அழாத நல்ல பிரஜை. தண்ணீர் வாரி வரவில்லையா? கூப்பிடு பன்னீரை. மணிக்கணக்காக மின் தடை நீடிக்கிறதா? மின் வாரியம் கண்டு கொள்ளவில்லையா? எங்கே அந்தப் பன்னீர்? அவனை மின்சார வாரியத்துக்கு அனுப்புங்கள். எந்த ஒரு பிரச்



ணைக்கும் எங்கள் காலனி என்னைத்தான் தேடும். சின்ன வயசிலிருந்தே எனக்கு அப்படி ஒரு இமேஜ். எதிர்நீச்சல் படத்தில் வரும் மாடிப்படி மாது போல.

அதன் விளைவை இப்போது நான் அனுபவித்துக் கொண்டிருக்கிறேன். எங்கள் காலனியின் ஒட்டு மொத்தத் தண்ணீர்ப் பிரச்னையை என் ஒருத்தன் தலையில் சுமத்தி விட்டார்கள். பாரம் தாங்காமல் மூச்சுத் திணறுகிறது. ஏகப்பட்ட அலுவலகங்கள்; ஏகப்பட்ட அதிகாரிகளைக் கடந்து, இப்போது இந்த அழுக்குக் கட்டடத்தில், இந்த மேலதிகாரியைச் சந்திக்க வந்திருக்கிறேன்; பையில் இருபத்தைந்தாயிரம் ரூபாயுடன்; துணைக்கு குமாருடன். குமார் காலனிவாசி. அதைவிட ஃபுட்பால் டீமில் என் குழு ஆட்டக்காரன். அதனாலேயோ என்னமோ எங்களுக்குள் அப்படி ஒரு ஒட்டுதல்.

எங்கள் காலனியின் பெயர் 'வெல்கம் காலனி' (பெயரளவில்தான்!). புதிதாக வருபவர்களை ஒன்று நாய்கள் துரத்தும்;

அல்லது 'வாட்ச்மேன்' துரத்துவான். மூன்று வருஷங்களுக்கு முன்புவரை கட்டாந் தரையாக இருந்துவிட்டு, பின்பு 'திடும்' என்று நூறு ஃப்ளாட்களுடன் அட்ட காசமாக எழுந்து நின்று கால் பரப்பிக் கெக் கலிக்கும் காண்க்ரீட் ராட்சசன். எப்போ தாவது சென்னை நகர வரைபடத்தைப் பார்த்திருக்கிறீர்கள் அல்லவா? அப்படி யானால், வரைபடத்தின் வடக்கே சுற்றி யுள்ள ஏரியாக்களால் நசுக்கப்பட்டும், நெளிந்து வளைந்தும் லாரி ஏறிய 'டால்டா' டின்னைப் போல் ஒரு நகர் உங்கள் கண்ணில் பட்டிருக்குமே? அதுதான் எங்கள் நகர். சாலி கிராமத்திலிருந்து நெற்குன்றம் போகும் பாதையிலுள்ள எண்ணற்ற திடீர் நகர்களில் இதுவும் ஒன்று. பெயர் காவிரி நகர் (இதுவும் பெயரளவில்தான்!) எந்த நேரத்தில் எந்தப் புண்ணியவான் அப்படி ஒரு பெயரை வைத்துத் தொலைத்தாரோ தெரியவில்லை. இன்றுவரை எங்கள் நகரில் அப்படி ஒரு தண்ணீர்ப் பஞ்சம்.

அரசியல்வாதிகளுக்கு அடுத்தபடியாக, சாமர்த்தியமாக மக்களை வசப்படுத்துவதில் ஃப்ளாட் விற்பனையாளர்கள் கெட்டிக் காரர்கள். இல்லாவிட்டால் பயன்படுத்த முடியாத மஞ்சள் நிற நிலத்தடி நீர். குடிநீர் சப்ளை இல்லை. அப்படிப்பட்ட ஒரு கட் டாந் தரையில் நூறு ஃப்ளாட்களைக் கட்டி முடித்து என் போன்ற பல இளிச்சவாயர் களின் தலையில் கட்டி இருக்க முடியுமா? போட்டி போட்டுக் கொண்டு ஃபிளாட் வாங்கிய நாங்கள், போட்டி போட்டுக் கொண்டு குடிநீர் லாரிகள் பின்னால் ஓடிக் கொண்டிருக்கிறோம்!

எத்தனை காலம்தான் லாரித் தண்ணீரை நம்புவது. நிறைய லாரிகள் நல்ல கண்டி ஷனில் இல்லை. சுத்தமாக பிரேக் பிடிப்ப தில்லை. எனவே, தினசரி தவறாமல் லாரி வரும் என்பது உத்திரவாதமில்லை. எனவே, குடிநீர்க் குழாய் இணைப்பை வாங்க வேண் டியது முக்கியம் என்று முடிவு செய்தோம்.

நாயாய் அலைந்து கட்ட வேண்டிய கட் டணங்கள்; டெப்பாசிட்டுகள்; வாட்டர் சர் சார்ஜ்கள் எல்லாம் கட்டியாயிற்று; பெற வேண்டிய 'சாங்ஷன்' கூட பெற்றாகி விட் டது. குழாய் இணைப்பு வர வேண் டியதுதான் பாக்கி.

இருந்தும் ஒரு சிக்கல்.

குடிநீர் இணைப்பு வேண்டுமானால் ஒரு ஃப்ளாட்டுக்கு ஐநூறு ரூபாய் வீதம் நூறு ஃப்ளாட்காரர்களும் கமிஷன் தர வேண்டு மாம். இல்லாவிட்டால் 'அது சரி இல்லை' 'இது சரி இல்லை' என்று இழுத்தடிப்பார் களாம்.

சரி எவ்வளவோ செலவு செய்கிறோம். இந்தத் 'தண்டத்'தையும் அழுதுவிட்டால் போகிறது என்று நானும் குமாரும் முடிவு செய்தோம். ஃபிளாட்காரர்களிடம் பேசி னோம். பாதிப் பேர் ஒத்துக் கொண்டு பணத்தை எண்ணி வைத்து விட்டார்கள்; மீதிப் பேர் தர மாட்டேன் என்கிறார்கள். ஃபுட்பாலில் எதிர் டீம் மாதிரி எதிர் க்ரூப். என்ன செய்வது என்று தெரியவில்லை.

நான் ஏக்கத்துடன் எனது திருவல்லிக் கேணி நாட்களை நினைவு கூர்ந்தேன்.

அந்தத் திருவல்லிக்கேணி ஒண்டுக்குடித் தன பொந்தில் பல்லிகள் போல் எத்தனை சந்தோஷமாக வாழ்ந்தோம் தெரியுமா? தீவாந்தர சிறைவாச 'செல்' மாதிரி அறை கள்; வெளிச்சம், காற்று வராதுதான். அத னால் என்ன? க்ளோரின் நெடியோடு கொஞ்சம் குடிநீரும் (நிறையக் காற்றும்) வருமே? போச்சு; இந்த ஃபினாட்டுக்குக் குடி வந்ததிலிருந்து எல்லாம் போச்சு.

எனக்கு ஃபுட்பால் ரொம்பப் பிடிக்கும். அதென்னமோ அதில் ஒரு அதீத ஈடுபாடு. பெரும்பாலான பையன்கள் கிரிக்கெட் டையே நாடிப் போவதால், பாவம் என்று ஃபுட்பால் மீது நாட்டம் வந்ததா அல்லது நாள்கணக்கில் விளையாடும் அசமந்தமான ஆட்டத்தைவிட, ஒரு மணி நேரத்தில் முடிந்து விடக்கூடிய சுறுசுறுப்பான ஆட்டம் என்பதால் பிடித்துப் போனதா என்று எனக்கே தெரியவில்லை. எது எப்படியோ



**"என்னங்க, வெயில் பயங்கரமா காயுது...!"**

**"சரி, அதுக்காக சப்பாத்தியை அடுப்புல வேக வைக்காம இப்படி மொட்டை மாடியில காய வைச்சுக் கொண்டாரணுமா?**

**— வந்தவாசி பா. ஜெயக்குமார்**

ரோல்ஸ் ராய்ஸின் வேகம்; ஷெர்லாக் ஹோம்ஸின் மர்மம்; ரோலர் கோஸ்டரின் பரபரப்பு எல்லாம் சேர்ந்ததுதான் கால் பந்தாட்டம் என்பார் சந்தானம் மாஸ்டர். அவர்தான் எனக்கும், இந்தக் குமார் பய லுக்கும் கோச்.

இன்றைக்கு நான் ரயில்வேயில் வேலை செய்கிறேன் என்றால் அதற்குக் காரணம் சந்தானம் மாஸ்டர்தான். அவரால்தான் நான் ஃபுட்பால் சாம்பியன் ஆனேன்; ஸ்போர்ட்ஸ் கோட்டாவில் வேலையும் கிடைத்து.

சந்தானம் மாஸ்டர் அற்புதமான மனிதர். தீவிர பிரம்மச்சாரி. விளையாட்டுக்காகவே அவர் கல்யாணம்கூட செய்து கொள்ள வில்லை.

"மனுஷனுக்குக் கஷ்டங்கள் வரதுக்கான காரணமே, அவன் டீம் ஸ்பிரிட்டை இழந்துடறதுதான். ஈகோ மனுஷனை தனி மைப் படுத்திக் கொன்னுடும். டீம் ஸ்பிரிட் அவனைப் புது மனுஷனாக்கும். போட் டிக்கும் போராடறதுக்கும் தயார் பண்ணும். டீம் ஸ்பிரிட்டைப் புரிய வைக்கறதுக்கும் கத்துக் குடுக்கறதுக்கும் ஃபுட்பால் ஒரு கருவி" என்று அடிக்கடி சொல்வார்.

ரிஸப்ஷனிஸ்ட் எங்கள் இருவரையும் மையமாகப் பார்த்து, "நீங்க உள்ளே போக லாம்" என்றாள்.

உடனே பரபரப்புடன் நான் எழுந்து போனேன். பின்னாலேயே குமார். அவ னுக்கு யாரையாவது பின்பற்றியே பழக்கம். சுயமாக ஒன்றும் செய்ய மாட்டான். ஃபுட்பால் ஆடும்போதும் இப்படித்தான். யார் யார் பந்தைத் தட்டிக் கொண்டு போகிறார்களோ அவர்கள் பின்னாடியே போவான். சந்தானம் மாஸ்டரிடம் இதற்காகவே திட்டுக்கூட வாங்கி இருக் கிறான்.

"பந்து உன் ஆளுகைக்கு வரும்போது மட்டும் உதைத்து விரட்டு. தப்பித் தவறி அடுத்தவன் காலுக்குப் போய் விட்டால் உடனே விட்டு விடு. கை விட்டுப் போன பந்து உன் காலடிக்கு வரும்வரை கொக்கு மாதிரி பொறுமையாகக் காத்திரு" என்பார். அவர் பேசுவது சமயத்தில் கீதோபதேசம் போல் இருக்கும்.

இப்போது எங்கள் காலனியில் இரண்டு டீம்'களாக நாங்கள் பிரிந்து 'கேம்' ஆடிக் கொண்டிருக்கிறோமே இதற்கு மாஸ்டர் என்ன சொல்வார் என்று தெரியவில்லை.

உள்ளே மேலதிகாரி எரிச்சலுடன் உட்



''உங்க மகன் ஜனங்களுக்கு நல்லது செய் யப் போய் மாட்டிக்கிட்டானா?... அப்படி என்ன செஞ்சான்?''

''ஜனங்க சில்லரை நோட்டுக்குப் படற கஷ்டத்தைப் பார்த்துட்டு அஞ்சு ரூபாய் நோட்டு அச்சடிச்சான்!''

— உடுமலை பொன்னுசாமி

---

கார்ந்திருந்தார். ஒரு நாளைக்கு நூறு பேர் வருகிறார்கள். அத்தனை பேருக்கும் பதில் சொல்லி அனுப்ப வேண்டுமே. அவர்தான் என்ன செய்வார்? பாவம்.

அவர் எதிரில் நாற்காலிகள் இருந்தன. உட்காரச் சொல்லவில்லை அவர். உட் காரலாமா நிற்பதா என்று உள்ளுக்குள் போராட்டம்.

"எங்கே இருந்து வர்ரீங்க?"

"காவேரி நகர். எட்டாவது குறுக்குத் தெரு. வெல்கம் காலனி..."

"யெஸ்... யெஸ்... ஐ நோ..." என்று நெற்றி சுருக்கி நினைவு கூர்ந்தார். நானும் குமாரும் சந்தோஷத்துடன் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துக் கொண்டோம்.

"இப்ப என்ன பொஸிஷன்லே இருக்கு சார். இதுவரைக்கும் பத்துத் தடவை இதுக்காக அலைஞ்சுட்டோம் சார்!"

"பணம் எல்லாம் ரெடி பண்ணிட்டீங்க இல்லே?"

"எல்லாம் ரெடிதான் சார். ஆனா ஒரு சின்ன சிக்கல்."

"என்ன சிக்கல்?"

''எங்க ஏரியாவில மொத்தம் நூறு ஃபினாட் இருக்கு இல்லியா சார்? நீங்க சொன்ன மாதிரி ஒரு ஃப்ளாட்டுக்கு ஐநூறு ரூபா வீதம் 'கலெக்ட்' பண்ண ஆரம் பிச்சோம். பாதிப் பேர் தந்துட்டாங்க. மீதிப் பேரு சட்டம் பேசறாங்க. அப்பிடி ஒண்ணும் கமிஷன் குடுத்து வாட்டர் கனெக்ஷன் வாங்க வேண்டாம். கட்ட வேண்டிய 'டாக்ஸ்' எல்லாம் கட்டியாச்சு. தண்ணி வர்ரப்ப வரட்டும், அப்பிடீன்னு



"நீ என்ன செய்வியோ தெரியாது... நான் நடிகர் 'விஜய்' ரசிகன்... அவரது ஸ்டைலில் முடி வெட்டி விடு!"

– கிறிஸ்டி

சொல்றாங்க சார்" என்றேன் பரிதாபமாக.

அவர் என்ன பதில் சொல்லப் போகிறாரோ என்று திகிலால் உறைந்து போய் அவரையே பார்த்தபடி நின்றேன்.

மேலதிகாரி சில வினாடிகள் யோசித்தார். பின்பு,

"இட்ஸ் ஆல் ரைட்! அந்தப் பாதி பேரு குடுத்துட்டாங்க இல்ல? அது போதும். அதுவரைக்கும் குடுத்துடுங்க. மத்தவங்களைப் பத்தி அப்புறம் பாத்துக்கலாம். பணத்தைக் குடுங்க. ஒரு வாரத்துல வாட்டர் லைன் குடுத்துடலாம்" என்றார்.

நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே கிடையாது. ஒரு வழியாக ஜெயித்தாகி விட்டது. குடிநீர் வரப் போகிறது. எத்தனை காலமாயிற்று நல்ல தண்ணீரில் குளித்து; துவைத்து. வெள்ளைத் துணி இனி வெள்ளைத் துணியாகவே இருக்கும். மஞ்சள் நிறத்துக்கு மாறாது. கடவுளுக்கு வந்தனம்...

"ஆனா..." என்று இழுத்தான் குமார்.

எனக்கு 'திக்'கென்றது.

"ஸார் எதுக்கும் இன்னும் கொஞ்ச நாள் வெயிட் பண்ணலாமே!"

"என்ன சொல்றீங்க?"

"பாதிப் பேர்தானே பணம் குடுத்திருக்காங்க. மீதிப் பேரும் குடுத்துரட்டுமே. அவங்களுக்கு இன்னும் கொஞ்சம் டைம் குடுக்கலாமே. அவசரப்பட்டு இப்பவே வாட்டர் லைன் குடுத்துட்டா அப்புறம் அவங்ககிட்ட எப்படி பணம் கலெக்ட் பண்றது?" என்றான் குமார் சீரியஸாக.

"வாட்ஸ் கோயிங் ஆன்?" என்று குழம்பினார் மேலதிகாரி.

அடப்பாவி! என்ன உளறுகிறான் இவன். லட்சக்கணக்கில் பணத்தைக் கொட்டி ஃப்ளாட் வாங்கி, ஆயிரக்கணக்கில் குடிநீர் கனெக்ஷனுக்காகப் பணம் அழுத பின்பு 'லைன்' வரும் சமயத்தில் வேண்டாம் என்கிறானே, தரதரவென்று அவனைத் தனியே அழைத்துப் போனேன்.

"என்ன உனக்கு மூளை குழம்பிடுச்சா? ஏன் இப்பிடி அறிவு கெட்ட தனமா உளர்றே? ஃப்ளாட்டுக்கு வந்ததுலே இருந்து மூணு வருஷமா தண்ணிக்கு நாய் படாத பாடு படறமே அதை மறந்துட்டியா? என்னிக்கு எந்தத் தெருவுல தண்ணி லாரி வரும்னு, நாய் மாதிரி மோப்பம் பிடிச்சு, பிளாஸ்டிக் குடத்துல தண்ணி பிடிச்சுக் கிட்டு வந்து 'ரேஷன்'ல செலவு பண்றமே அந்தக் கண்றாவிக்கு முடிவு கட்ட வேண்டாமா? புட்பால் கேம்லேதான் ஸேம் ஸைட் கோல் போட்டுச் சொதப்புவே. இப்ப வாழ்க்கையிலேயே 'ஸேம் ஸைட் கோல்' போட்டுட்டியேடா" என்றேன் விரக்தியுடன்.

அவன் மூர்க்கமானான்.

"ஸேம் ஸைட் கோல்! யார்ரா போடறது ஸேம் ஸைட் கோல்? அவங்களா இல்லே நானா? நாம கஷ்டப்பட்டு அலைஞ்சு திரிஞ்சு பணத்தை கலெக்ட் பண்ணிக் குடுப்போம். ஆனா அந்த நாயிங்க அலையவும் மாட்டானுங்க. பணமும் தர மாட்டானுங்க.

"ஆனா நாம குடுக்கற பணத்துல வாட்டர் லைன் வந்துட்டா அவனுங்களும் 'என்ஜாய்' பண்ணுவாங்க. இது எந்தவிதத்துலடா நியாயம்? டீம் ஸ்பிரிட் டீம் ஸ்பிரிட்னு சந்தானம் மாஸ்டர் நமக்குக் கத்துக் குடுத்தாரே அதெல்லாம் உனக்கும் எனக்கும் மட்டும் இருந்தா போதுமாடா? எல்லாருக்கும் இருக்க வேணாமா? அந்த ஃபிளாட்காரனுங்களுக்கும் எப்ப டீம் ஸ்பிரிட் வருதோ அப்ப நமக்குத் தண்ணி வந்தா போதும். அதுவரைக்கும் தண்ணி இல்லாம 'காலனி' நாறட்டும்" என்றான் ஒருவித க்ரூர திருப்தியுடன்.

எனக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை.

இனி எத்தனை காலமாகும் நான் நல்ல தண்ணீரில் குளிக்க; தோய்க்க. வெள்ளைத் துணி இனியும் மஞ்சள் கலரில்தான் இருக்குமா? வெள்ளையாக மாறவே மாறாதா? என்று நான் ஏங்க ஆரம்பித்தேன்.

# பொன்னியின் செல்வன்

நாற்பத்தெட்டாம் அத்தியாயம்

## நீர்ச் சுழலும் விழிச் சுழலும்




**கல்கி கலெக்ஷன்**

கடவுள் படைத்த ஆதி மனிதன் ஒரு மலையின் சாரலில் வசித்தான். மழைக்கும், காற்றுக்கும் அவனுக்கு மலைக்குகை அடைக்கலம் தந்தது. வன விருட்சங்கள் அவனுக்குத் தேவையான கனி வர்க்கங்களை உணவாக அளித்தன. காட்டு மிருகங்கள் அவனைக் கண்டு நடு நடுங்கின. வானத்துப் பறவைகளைப் போல் அவன் சுயேச்சையாக ஒரு குறைவும் இல்லாமல் வாழ்ந்து வந்தான். ஆயினும் அவனுடைய உள்ளத்தின் உள்ளே ஏதோ ஒரு குறை, – இனந்தெரியாத ஒரு வகைத் தாபம், – இடைவிடாமல் குடி கொண்டிருந்தது. ஏதோ ஒரு காந்த சக்தி அவனைக் கவர்ந்து இழுத்துக் கொண்டிருந்தது. ஏதோ ஓர் அரிய பொருளை, – இது வரை பார்த்தும் அநுபவித்தும் அறியாத இன்பத்தை, – அவனுடைய இதயம் தேடிக் கொண்டிருந்தது. பகலில் அதைப் பற்றிக் கற்பனை செய்தான்; இரவில் அதைப் பற்றிக் கனவு கண்டான். "எனக்காகவே படைக்கப்பட்ட அந்த அற்புதப் பொருளை, – கற்பகக் கனியை, – என்னைக் கவர்ந்திழுக்கும் காந்தத்தை, எங்கே காண்பேன்? எப்போது காண்பேன்?" என்று அவன் இதயம் ஏங்கித் தவித்துக் கொண்டிருந்தது. ஆதி மனிதனைப் படைத்த அதே சமயத்தில் இறைவன் ஆதி ஸ்திரீயையும் படைத்தார். மலையின் மற்றொரு பக்கத்துச் சாரலில் அவள் வசித்து வந்தாள். பசிக்கு உணவும், தாகத்துக்குச் சுனை நீரும், தங்கியிருக்க மலைக் குகையும் அவளுக்கு இருந்தன. வெளிப் படையாகப் பார்த்தால் ஒரு குறைவும் இல்லை. ஆனால் உள்ளத்தினுள்ளே ஒரு தீப்பிழம்பு ஜுவாலை விட்டு அவளை எரித்துக் கொண்டிருந்தது. ஏதோ ஒரு சக்தி அவளைக் கவர்ந்து இழுத்துக் கொண்டிருந்தது. அச்சக்தி எங்கிருந்து அவளை இழுக்கிறது, எந்தத்

**அமரர் கல்கி**

திசையை நோக்கி இழுக்கிறது என்பது ஒன்றும் தெரியவில்லை.

ஆதி மனிதனுக்கும் ஆதி ஸ்திரீக்கும் இடையில் ஒரு பெரிய மலை ஓங்கி நின்று ஒருவரையொருவர் சந்திக்க முடியாமல் தடுத்துக் கொண்டிருந்தது.

வெயிற் காலத்தில் ஒருநாள் இயற்கை நியதி காரணமாகக் காட்டில் தீ மூண்டு நாலாபுறமும் பரவத் தொடங்கியது. மலையைச் சுற்றி நெருப்பு அதிவேகமாகப் பரவி வந்தது. மனிதனும் ஸ்திரீயும் காட்டுக்குள் போனால் ஆபத்துக்குள்ளாவோம் என்று உணர்ந்து மலை மேல் ஏறினார்கள். மலையின் உச்சியில் அவர்கள் ஒருவரையொருவர் பார்த்தார்கள். பார்த்த கண்கள் பார்த்தபடி கண் கொட்டாமல் நின்றார்கள். காட்டுத் தீயை மறந்தார்கள். எதற்காக மலை உச்சியில் ஏறினோம் என்பதையும் மறந்தார்கள். பசி தாகங்களை அடியோடு மறந்தார்கள். இத்தனை காலமும் தாங்கள் உயிர் வாழ்ந்ததெல்லாம் இந்த ஒரு சந்திப்புக்காகவே என்பதை உள்ளுணர்வினால் அறிந்தார்கள். தங்களைக் கவர்ந்திழுத்த இனந் தெரியாத சக்தி இதுதான் என்பதையும் தெரிந்து கொண்டார்கள். தங்களில் ஒருவரிடம் உள்ள குறையை இன்னொருவரால் இட்டு நிரப்பிப் பூர்த்தி செய்ய முடியும் என்பதை அறிந்தார்கள். இவ்விதம் ஒன்று சேர்ந்து விட்டவர்களை இனிப் பிரிக்கக் கூடிய சக்தி உலகில் வேறொன்றும் கிடையாது என்பதையும் உறுதியாக உணர்ந்தார்கள்.

இந்த அற்புதக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த படைப்புக் கடவுளான பிரம்ம தேவர் தாம் ஆரம்பித்த வேலை நல்ல முறையில் தொடங்கி விட்டது என்பதை அறிந்து பரிபூரணத் திருப்தி அடைந்தார்!

மேற்கூறிய ஆதிமனிதனையும் ஆதி ஸ்திரீயையும் ஒத்திருந்தார்கள் அந்த நேரத்தில் நம் வல்லவரையனும் குந்தவை தேவியும், இப்பூவுலகில் தாங்கள் பிறந்து வளர்ந்ததெல்லாம் இந்த நிமிஷத்துக்காகவே, – இந்தச் சந்திப்புக்காகவே, – என்பதை அவர்களுடைய உள்ளுணர்ச்சி உணர்த்தியது. ஆனால் ஆதி மனிதனையும் ஆதி ஸ்திரீயையும் போலின்றி இவர்கள் நாகரிக வாழ்க்கையை மேற்கொண்டவர்கள் அல்லவா? ஆகையால் தங்களுடைய பரஸ்பர அந்தஸ்தில் இருந்த வேற்றுமையை அவர்களால் மறக்க முடியவில்லை. முழுதும் உணர்ச்சி வசப்பட்டு மனத்தைக் கட்டுக்கடங்காமல் அவர்கள் விட்டு விடவில்லை. ஒருகணம் ஒருவரையொருவர் பார்த்துக் கண்ணோடு கண் சேர்வதும், அடுத்த கணத்தில் தங்கள் கண்களைத் திருப்பி அக்கம் பக்கத்திலிருந்த பூமரம், பட்டுப் பூச்சி, ஓடை முதலியவற்றைப் பார்ப்பதுமாயிருந்தார்கள்.

ஈசான சிவ பட்டர் தொண்டையைக் கனைத்த பிறகுதான் இருவரும் ஏதோ ஒரு முக்கியமான காரியம் பற்றி இங்கே சந்திக்கிறோம் என்பதை ஞாபகப்படுத்திக் கொண்டார்கள்.

"நீர் என்னைத் தனிமையில் பார்க்க வேண்டுமென்று ஈசான பட்டரிடம் தெரிவித்தது உண்மையா?" என்று குரலைக் கடுமைப் படுத்திக் கொண்டு இளைய பிராட்டி வினவினாள்.

அந்தக் குரலின் கடுமையும் அதிகார தோரணையும் வந்தியத்தேவனை நிமிர்ந்து நிற்கச் செய்தது.

"தாம் யார் என்று தெரிந்தால் அல்லவா தமது கேள்விக்கு விடை சொல்லலாம்? ஈசான பட்டர் என்னைத் தவறான இடத்துக்கு அழைத்து வந்து விட்டாரோ என்று ஐயுறுகிறேன்!" என்றான் அந்த வீர வாலிபன்.

"எனக்கும் அவ்வித சந்தேகம் உண்டாகிறது. நீர் யாரைப் பார்க்க விரும்பினீர்?"

"சோழர் தொல்குலத்தின் மங்காமணி விளக்கை, சுந்தர சோழ மன்னரின் செல்வத் திருமகளை, ஆதித்த கரிகாலருக்குப் பின் பிறந்த சகோதரியை, அருள்மொழிவர்மரின் அருமைத் தமக்கையை, இளையபிராட்டி குந்தவை தேவியைப் பார்க்க வேண்டுமென்று ஈசான சிவ பட்டரிடம் சொன்னேன்..."

குந்தவைப் பிராட்டி புன்னகை பூத்து, "அவ்வளவு பெருமையையும் தாங்க முடியாமல் தாங்கிக் கொண்டிருப்பவள் நான்தான்!" என்றாள்.

"அப்படியானால் குடந்தை ஜோதிடர் வீட்டிலும் அரிசிலாற்றங் கரையிலும் நான் பார்த்த நாரீமணி தாங்கள் இல்லைதானே?" என்றான் வல்லவரையன்.

"ஆமாம், ஆமாம்! அந்த இரண்டு



இடத்திலும் அவ்வளவு மரியாதைக் குறைவாகத் தம்மிடம் நடந்து கொண்டவளும் நானேதான். அந்த நாகரிகமில்லா மங்கையை மறுபடியும் இவ்வளவு சீக்கிரத்தில் சந்திப்போம் என்று எதிர்பார்த்திருக்க மாட்டீர்!"

"மறுபடியும் சந்திப்பதாகச் சொல்வது பொருத்தமில்லை, தேவி!"

"ஏன்?"

"விட்டுப் பிரிந்திருந்தால் அல்லவா மறுபடியும் சந்திப்பதாகச் சொல்லலாம்? தாம் என் மனத்தை விட்டு ஒரு கணமும் அகலவில்லை..."

"தொண்டை மண்டலத்தார் இவ்வளவு சமத்காரமாகப் பேசுவார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை."

"எல்லாப் பெருமையையும் சோழ நாட்டிற்கேதான் கொடுப்பீர்களாக்கும். வேறு நாடுகளுக்கு ஒரு பெருமையும் தர மாட்டீர்கள் போலிருக்கிறது."

"ஆம்; என்னிடம் அந்தக் குற்றம் இருப்பது உண்மைதான். உமக்கு எங்கள் சோழ நாட்டைப் பிடிக்கவில்லையாக்கும்!"

"பிடிக்காமல் என்ன? நன்றாய்ப் பிடித்திருக்கிறது. ஆனால் இச்சோழ நாட்டில் இரண்டு பெரும் அபாயங்கள் இருக்கின்றன. அவற்றை எண்ணினாலே எனக்குப் பயமாயிருக்கிறது...!"

"சோழ நாட்டு வீரர்களின் வாளும் வேலும் அபாயகரமான ஆயுதங்கள்தான்! அயல்நாட்டவர்கள் இங்கே ஜாக்கிரதையாகவே வர வேண்டும். முக்கியமாக, ஒற்றர் வேலை செய்வதற்கென்று வருவோர்..."

"இளவரசி! அந்த இரு அபாயங்களை நான் குறிப்பிடவில்லை. வாளும் வேலும் என்னிடமும் இருக்கின்றன. அவற்றை உபயோகிப்பதற்கும் நான் நன்கு அறிவேன்..."

"உமது வேலின் வன்மையைத்தான் அரிசிலாற்றங்கரையில் அன்று பார்த்தேனே? செத்துப் போன முதலையை உமது வேல் எத்தனை வேகமாய்த் தாக்கியது? ஒரே தாக்குதலில் உள்ளே அடைந்திருந்த பஞ்சையெல்லாம் வெளிக் கொண்டு வந்து விட்டதே?"

"அம்மணி! சோழ நாட்டு மாதரசிகள் செத்த முதலையைக் கண்டு பயந்து சாகும் வீர நாரீமணிகள் என்பதை நான் அறியேன். சோழ நாட்டு வீரர்கள் செத்த முதலையைத் தாக்கும் சுத்த வீரர்கள் என்றும் எனக்குத் தெரியாது. உயிருள்ள முதலையாக்கும் என்று எண்ணி வேலை எறிந்தேன். அது என் தவறும் அன்று; என் வேலின் தவறும்

அன்று...!"

"அந்த அசட்டு முதலையின் தவறுதான்! வாணர் குலத்தில் பிறந்த வீர வந்தியத் தேவர் வேலோடு வரும் வரையில் காத்துக் கொண்டிராமல் முன்னதாகவே செத்துப் போய்விட்டதல்லவா? அதற்கு நன்றாய் வேணும் இந்த அவமானம்...! வேறு எந்த இரு அபாயங்களைப் பற்றிச் சொன்னீர்?"

"இந்தச் சோழ நாட்டு நதிகளில் புது வெள்ளம் வரும்போது உண்டாகும் சுழல்கள் அபாயமானவை! அவற்றை ஒரு போதும் நம்பவே கூடாது. என்னைத் திண்டாடித் திணறும்படி செய்து விட்டன!"

"வெள்ளச் சுழலில் நீர் எப்படி அகப்பட்டுக் கொண்டீர்? தண்ணீரில் காலையே வைக்க மாட்டீர் என்றல்லவா உம்மைப் பார்த்தால் தோன்றுகிறது?"

"வேதாளத்துக்கு வாழ்க்கைப் பட்டு முருங்கை மரத்தில் ஏற மாட்டேன் என்றால், முடிகிற காரியமா? சோழ நாட்டுக்கு வந்த காரணத்தினால், நதி வெள்ளத்தில் முழுகிச் சுழலிலும் சிக்கும்படியாகி விட்டது! என்னோடு துணைக்கு வந்த ஒரு அசட்டுப் பிள்ளையின் பிடிவாதத்தினால் அப்படி நேர்ந்தது! கேளுங்கள், தேவி! அந்தப் பிள்ளை ஒரு சின்னஞ் சிறிய பொய் சொல்ல முடியாது என்றான். அதனால் வந்த வினை..."

"நீர் சொல்லுவது புதிராக இருக்கிறது. இன்னும் கொஞ்சம் விளக்கமாகச் சொன்னால் நல்லது."

"சொல்கிறேன். தங்களுடைய அருமைச் சகோதரரின் ஓலையுடன் தூதனாக வந்த என்னைத் தஞ்சைக் கோட்டைத் தலைவர் சிறிய பழுவேட்டரையர் 'ஒற்றன்' என்று குற்றஞ் சாட்டிப் பிடித்து வர ஆட்களை ஏவினார். வந்த காரியம் பூர்த்தியாவதற்குள் சிறைப்பட நான் விரும்பவில்லை. ஆகையால் நான் தஞ்சையில் தங்கியிருந்த வீட்டுச் சிறுவனை வழிகாட்ட அழைத்துக் கொண்டு கிளம்பினேன்..."

"தஞ்சை நகரில் யாருடைய வீட்டில் தங்கினீர்?"

"கோட்டைக்கு வெளியிலே பூக்காரப் பெண்மணி ஒருத்தியின் வீட்டில் தங்கினேன். அந்த அம்மாள் ஊமை..."

"ஓகோ! அவளுடைய பெயர்...?"

"அந்த அம்மாளின் பெயர் தெரியாது; ஆனால் அவளுடைய பிள்ளையின் பெயர் மட்டும் எனக்குத் தெரியும். அவன் பெயர் சேந்தன் அமுதன்..."

"நான் நினைத்தது சரிதான். மேலே சொல்லுங்கள்!"

"என் குதிரை மேல் அச்சிறுவனையும் ஏற்றிக் கொண்டு இந்தப் பழையாறை நகரை நோக்கி வந்து கொண்டிருந்தேன். அதற்குள் பழுவேட்டரையரின் ஆட்கள் சிலர் எங்களை நெருங்கி வந்து விட்டார்கள். நான் வந்த காரியம் முடிவதற்குள் அவர்களிடம் பிடிபட விரும்பவில்லை. குடமுருட்டி ஆறு வந்ததும் அச்சிறுவனிடம், 'நான் இங்கே இறங்கிக் கொள்கிறேன். தம்பி! நீ பாட்டுக்குக் குதிரையை விட்டுக் கொண்டு போ! உன்னை நான்தான் என்று அவர்கள் தொடர்ந்து துரத்தி வருவார்கள். உன்னைப் பிடித்த பிறகு ஏமாறுவார்கள்! நான் எங்கே என்று அவர்கள் கேட்டால் ஆற்றில் விழுந்து முழுகிப் போய் விட்டதாகச் சொல்!'' என்றேன். அந்தப் பையனோ அரிச்சந்திரனுடைய சந்ததியில் வந்தவன் போலிருக்கிறது. 'நீங்கள் முழுகாத போது எப்படி முழுகி விட்டதாகப் பொய் சொல்லுவேன்?' என்றான். அந்தப் பிள்ளை பொய் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படாமற் பொருட்டு, அவனைக் குதிரையில்



சேர்த்துக் கட்டி விட்டு, நான் நதியில் குதித்து முழுகி விட்டேன். அம்மம்மா! இந்தச் சோழ நாட்டு நதிகளில், அதுவும் கரை ஓரங்களில், எப்பேர்ப்பட்ட நீர்ச் சுழல்கள்! அவற்றில் அகப்பட்டுக் கொண்டு நான் பெரிதும் திண்டாடிப் போனேன். கடைசியில், கரை ஓரத்தில் இருந்த மரத்தின் வேர் ஒன்றைப் பிடித்துக் கொண்டு கரை யேறி உயிர் பிழைத்து வந்தேன். தேவி! நீர்ச் சுழலில் நான் அகப்பட்டுக் கொண்டு சுழன்று சுழன்று மதி மயங்கி மூச்சுத் திணறிக் கஷ்டப்பட்ட போது என்ன கண் டேன், எதை நினைத்துக் கொண்டேன் என்று எண்ணுகிறீர்கள்?"

"நான் எவ்விதம் அறிவேன்? ஒருவேளை கஜேந்திர மோட்சத்தை நினைத்துக் கொண் டிருக்கலாம்..."

"இல்லை, இல்லை; என்னைப் போலவே அந்த நீர்ச் சுழலில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடிய சில கயல் மீன்களைக் கண் டேன். அந்தக் கயல் மீன்கள் இந்தச் சோழ நாட்டுப் பெண்களின் கண்களை நினை வூட்டின. நதியின் நீர்ச் சுழலில் அகப்பட் டுக் கொண்டவனாவது எப்படியோ தப்பிப் பிழைக்கலாம்; ஆனால் இந்தச் சோழ நாட்டுப் பெண்களின் விழிச் சுழலில் அகப் பட்டுக் கொண்டவன் ஒரு காலும் தப்பிப் பிழைக்க முடியாது என்று எண்ணிக் கொண்டேன்...!"

"இம் மாதிரி பெண்களைக் குற்றம் கூறிப் பழி சொல்வதில் சிலருக்கு ஒரு பெருமை; தாங்கள் செய்யும் தவறுக்குப் பெண்களின் மீது குற்றம் சொல்வது ஆண் பிள்ளை களின் வழக்கம்..."

"அந்த வழக்கத்தைத்தான் நானும் கைப்பற்றினேன். அதில் என்ன தவறு?" என்றான் வந்தியத்தேவன்.

அச்சமயம் அரண்மனைக்குள்ளே யிருந்து இனிய குழலோசை கேட் டது. அதைத் தொடர்ந்து தண் டைச் சிலம்புகளின் கிண்கிணி ஒலியும், மத்தளத்தின் முழக்கமும் கலந்து வந்தன. பின்னர், இளம் பெண்களின் இனிய குரல் கள் பல சேர்ந்து ஒலித்தன. சிலப்பதிகாரக் காவியத்தில் உள்ள பின்வரும் ஆய்ச்சியர் குரவைப் பாடலைப் பாடினார்கள்.

**"கன்று குணிலாக் கனி உதிர்த்த மாயவன்**
**இன்று நம் ஆனுள்வருமேல் அவன் வாயில்**
**கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ!**
**கொல்லையஞ் சாரற் குருந் தொசித்த மாயவன்**
**எல்லைநம் ஆனுள் வருமேல் அவன் வாயில்**
**முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ!"**

பாடல் முடியும் வரையில் குந்தவையும் வந்தியத் தேவனும் அதன் இனிமையில் ஈடுபட்டுத் தம் வசமிழந்து நின்றார்கள். மறு படியும் வாத்திய முழக்கத்துடன் ஆடல் தொடங்கியதற்கு அறிகுறியாகத் தண்டைச் சதங்கைகளின் ஒலி எழுந்தது.

"அரண்மனையில் குரவைக் கூத்து நடக்கிறது போலும்! கடம்பூர் மாளிகையில் குரவைக் கூத்து ஒன்று பார்த்தேன். அது முற்றும் வேறுவிதமாயிருந்தது!" என்றான் வல்லவரையன்.

"ஆம்; என் தோழிகள் குரவைக் கூத் துப் பயில்கிறார்கள். சீக்கிரத்தில் என்னைக் காணாமல் தேடத் தொடங்கி விடுவார்கள். தாம் வந்த காரியம் என்ன?" என்று இளைய பிராட்டி குந்தவை தேவி கேட்டாள்.

"இதோ நான் வந்த காரியம்; தங்கள் தமையனாரின் ஓலை; எத்தனையோ



அபாயங்களுக்குத் தப்பி, நீர்ச் சுழல்கள் - விழிச் சுழல்களிலிருந்து காப்பாற்றி, இதைக் கொண்டு வந்தேன்!" என்று வல்லவரையன் கூறி ஓலையை எடுத்து நீட்டினான்.

## நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்

# விந்தையிலும் விந்தை!

குந்தவைப் பிராட்டி வந்தியத்தேவன் நீட்டிய ஓலையைப் பெற்றுக் கொண்டு படித்தாள். அதுவரையில் நெரிந்த புருவங்களுடன் சுருங்கியிருந்த அவள் முகம் இப்போது மலர்ந்து பிரகாசித்தது.

வல்லவரையனை நிமிர்ந்து நோக்கி, "ஓலையைக் கொடுத்து விட்டீர். இனி என்ன செய்வதாக உத்தேசம்?" என்று கேட்டாள் குந்தவைதேவி.

"தங்களிடம் ஓலையைக் கொடுத்ததுடன் என் வேலையும் முடிந்து விட்டது. இனி, நான் ஊருக்குத் திரும்ப வேண்டியதுதான்."

"உமது வேலை முடியவில்லை; இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறது!"

"தாங்கள் சொல்லுவது ஒன்றும் விளங்கவில்லை, தேவி!"

"உம்மிடம் அந்தரங்கமான வேலை எதையும் நம்பி ஒப்புவிக்கலாம் என்று இதில் இளவரசர் எழுதியிருக்கிறாரே? அதன்படி நீர் நடந்து கொள்ளப் போவதில்லையா?"

"இளவரசரிடம் அவ்விதம் ஒப்புக் கொண்டுதான் வந்தேன். ஆனால் என்னை நம்பி முக்கியமான வேலை எதுவும் ஒப்புவிக்க வேண்டாம். தங்களை ரொம்பவும் கேட்டுக் கொள்கிறேன்."

"உமது கோரிக்கை எனக்கு விளங்கவில்லை. ஒன்றை ஒப்புக் கொண்ட பிறகு பின்வாங்குவதுதான் வாணர் குலத்தின் மரபா?"

"பழம் பெருமை பேசுவது வாணர் குலத்தின் மரபு அன்று; ஒப்புக் கொண்டு பின்வாங்குவதும் வாணர் குலத்து மரபு அன்று."

"பின்னர், ஏன் தயக்கம்? பெண் குலத்தின் பேரில் கொண்ட வெறுப்பா அல்லது என்னைக் கண்டால் பிடிக்கவில்லையா?" என்று இளவரசி கூறி இளநகை புரிந்தாள்.

ஆகா! இது என்ன கேள்வி? கடலுக்குச் சந்திரனைப் பிடிக்காமல் போகுமா? பிடிக்கவில்லையென்றால் ஆயிரம் அலைக் கைகளையும் நீட்டிப் பூரண சந்திரனை ஏன் தாவிப் பிடிக்க முயல்கிறது? நீல வானத்துக்குப் பூமாதேவியைப் பிடிக்கவில்லையென்று யார் சொல்லுவார்கள்? பிடிக்காது போனால், இரவெல்லாம் ஆயிரமாயிரம் நட்சத்திரக் கண்களினால் இந்தப் பூமியை உற்று உற்றுப் பார்த்து ஏன் பூரித்துக் கொண்டிருக்கிறது? மேகத்துக்கு மின்னலைப் பிடிக்காதிருக்குமா? பிடிக்கவில்லையென்றால், தன்னைப் பிளந்து கொண்டு பாய்ந்தோடும் மின்னலை அப்படி ஏன் இறுகத் தழுவி மார்போடு அணைத்துக் கொள்கிறது? வண்டுக்கு மலர் பிடிப்பதில்லையென்பது உண்டா? அங்ஙனமானால் ஏன் ஓயாமல் மலரைச் சுற்றி வட்டமிட்டு மதிமயங்கி விழுகிறது? விட்டில் பூச்சிக்கு விளக்கைப் பிடிக்கவில்லையென்றால் யாரேனும் நம்புவார்களா? அவ்வாறெனில், ஏன் அந்த விளக்கின் ஒளியில் விழுந்து உயிரை விடுகிறது? தேவி! நல்ல கேள்வி கேட்டீர்! தம்மை எனக்குப் பிடிக்கவில்லையென்றால், தமது கடைக்கண் பார்வை என்னை ஏன் இப்படித் திகைக்க வைக்கிறது? தமது இதழ்களின் ஓரத்தில் விளையாடும் இளநகை என்னை ஏன் இவ்விதம் சித்தப் பிரமை கொள்ளச் செய்கிறது?'... இவ்வளவு எண்ணங்களும் வந்தியத்தேவனுடைய உள்ளத்தில் தோன்றின. ஆனால் நாவினால் சொல்லக் கூடவில்லை.

"ஐயா! என்னுடைய கேள்விக்கு மறுமொழி சொல்லவில்லையே? வாணர் குலத்தில் பிறந்த வீர புருஷன் கேவலம் ஒரு பெண்ணின் ஏவலைச் செய்வதா என்று தயக்கமா? இளவரசர் தம்மிடம் இந்த ஓலையைக் கொடுத்தபோது இதில் எழுதியிருப்பதைப் பற்றிச் சொல்லவில்லையா?" என்று இளவரசி மீண்டும் வினாவினாள்.

"தேவி! இளவரசர் விருப்பத்தை நன்கு தெரிந்து கொண்டுதான் புறப்பட்டு வந்தேன். ஆனால் நல்லவேளையில் என் யாத்திரையைத் தொடங்கவில்லையெனத்



தோன்றுகிறது. ஆகையால் வழியெல்லாம் விரோதிகளைச் சம்பாதித்துக் கொண்டு வந்தேன். உற்ற நண்பனையும் பகைவன் ஆக்கிக் கொண்டேன். நாலாபுறத்திலும் பகைவர்கள் என்னைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் தாம் இடும் பணியை நான் நிறைவேற்றுவதாக எப்படி உறுதி சொல்ல முடியும்? இதனால்தான் தயங்குகிறேன். என்னால் தங்கள் காரியம் கெட்டுப் போகக் கூடாதல்லவா?" என்று சொன்னான் வல்லவரையன்.

"யார் யார் அந்தப் பகைவர்கள்? எனக்குத் தெரிவிக்கலாமா?" என்று குந்தவை கவலை தொனித்த குரலில் கேட்டாள்.

"பழுவேட்டரையர்கள் என்னை வேட்டையாடிப் பிடிக்க நாலாபுறமும் ஆட்களை ஏவியிருக்கிறார்கள். என் உயிர் நண்பனாயிருந்த கந்தமாறன் நான் அவனை முதுகில் குத்திக் கொல்ல முயன்றதாக எண்ணிக் கொண்டிருக்கிறான். ஆழ்வார்க்கடியான் என்னும் வீர வைஷ்ணவ வேஷதாரி ஒருவன் என்னைத் தொடர்ந்து கொண்டிருக்கிறான். பழுவூர் இளையராணி நந்தினிதேவி என் மீது ஒரு மந்திரவாதியை ஏவி விட்டிருக்கிறாள். எந்த நிமிஷத்தில் யாரிடம் நான் அகப்பட்டுக் கொள்வேனோ, தெரியாது..."

வெள்ளத்திலிருந்து கரையேறித் தப்பிய அன்றிரவு மந்திரவாதியுடன் நேர்ந்த அனுபவம் வந்தியத்தேவனுக்கு நினைவு வந்தது. பகலில் பிரயாணம் செய்வதன் அபாயத்தை எண்ணி மூங்கில் காடுகளிலும் வாழைத் தோப்புகளிலும் அவன் பொழுது போக்கினான். இரவில் நதிக் கரையோடு நடந்து சென்றான். வெகுதூரம் நடந்து களைத்து இரவு மூன்றாம் ஜாமத்தில் ஒரு பாழடைந்த பழைய மண்டபத்தை அடைந்தான். வெளியில் நிலா மதியம் பட்டப் பகல்போலப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. மண்டபத்துக்குள்ளேயும் சிறிது தூரம் நிலா வெளிச்சம் புகுந்து பிரகாசப் படுத்திக் கொண்டிருந்தது. வெளிச்சமாயிருந்த பகுதியைக் கடந்து இருளடைந்த பகுதிக்குச் சென்று வந்தியத்தேவன் படுத்துக் கொண்டான். கண்ணைச் சுற்றிக் கொண்டு தூக்கம் வந்த சமயத்தில் வெகு சமீபத்திலிருந்து ஆந்தையின் அகோரமான குரல் வந்தது. பழுவூர் இளைய ராணியுடன் லதா மண்டபத்தில் பேசிக் கொண்டிருந்தபோது அதே மாதிரி ஆந்தைக் குரல் கேட்டது அவனுக்கு நினைவு வந்து திடுக்கிட்டு எழுந்தான். உள்ளே இருட்டின பகுதியிலிருந்து இரு சிறிய ஒளிப் பொட்டுகள் அவனை உற்று நோக்கின.



வெளியிலே போய் விடலாம் என்று எண்ணி இரண்டு அடி நடந்தான். வெளியிலிருந்து யாரோ உள்ளே வரும் காலடிச் சத்தம் கேட்டது. இடிந்து விழுந்து கரடு முரடாயிருந்த தூண் ஒன்றைப் பிடித்துக் கொண்டு அதன் மறைவில் நின்றான். வெளியிலிருந்து வந்தவன் முகம் நிலா வெளிச்சத்தில் கொஞ்சம் தெரிந்தது. பழுவூர் ராணியைப் பார்க்க வந்த மந்திரவாதிதான் அவன் என்பதைத் தெரிந்து கொண்டான். மந்திரவாதி அந்தத் தூணை நோக்கியே வந்தான். தான் அவ்விடம் மறைந்திருப்பது அவனுக்குத் தெரியாது என்றும், தன்னைக் கவனியாமல் மண்டபத்துக்குள்ளே போய் விடுவான் என்றும் வந்தியத்தேவன் நினைத்தான். ஆனால் தூணின் அருகில் வரும் வரையில் மெள்ள மெள்ளப் பூனை போல நடந்து வந்த மந்திரவாதி திடீரென்று கோரமான குரலில் ஒரு கூச்சல் போட்டுக் கொண்டு வந்தியத் தேவனுடைய கழுத்தை ஒரு கையினால் பிடித்து நெறித்தான். ''எடு! அந்தப் பனை இலச்சினை மோதிரத்தைக் கொடு! கொடுக்கா விட்டால் உன்

கழுத்தை நெறித்துக் கொன்று விடுவேன்!" என்று கத்தினான்.

வந்தியத் தேவனுடைய கழுத்து முறிந்து விடும்போலிருந்தது; அவனுடைய விழிகள் பிதுங்கி வெளி வந்து விடும் போலிருந்தது; மூச்சுத் திணறியது. எனினும் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான். அந்தப் பழைய தூணை ஒரு கையினால் அழுத்திக் கொண்டு ஒரு காலைத் தூக்கிப் பூரண பலத்தையும் பிரயோகித்து ஓர் உதை விட்டான். மந்திரவாதி ஓலமிட்டுக் கொண்டு கிழே விழுந்தான். அதே சமயத்தில் அந்தப் பழைய தூண் சரிந்து விழுந்தது. மேலே கூரையிலிருந்து பொல பொலவென்று கற்கள் விழுந்தன. வெளவால் ஒன்று படபடவென்று சிறகை அடித்துக் கொண்டு வெளியே சென்றது. அதைத் தொடர்ந்து வந்தியத்தேவனும் வெளியேறினான். ஓட்டம் பிடித்தவன் சிறிது தூரம் வரையில் திரும்பிப் பார்க்கவேயில்லை. பின்னால் யாரும் தொடர்ந்து வரவில்லையென்று நிச்சயமான பிறகுதான் நின்றான். அந்த இரவு அனுபவத்தை நினைத்



ததும் வந்தியத்தேவனுடைய உடம்பெல்லாம் இப்போதுகூட கிடுகிடுவென்று நடுங்கியது.

அந்தப் பயங்கர நினைவுகளுக்கிடையில், "ஐயா! காஞ்சியிலிருந்து தாம் புறப்பட்டு எத்தனை காலமாயிற்று?" என்று குந்தவை கேட்டது அவனுடைய காதில் விழுந்து அவனுக்கு மனத் தெளிவை அளித்தது.

"ஒரு வாரமும் ஒரு நாளும் ஆயிற்று, தேவி!" என்றான்.

"இதற்குள் இவ்வளவு பகைவர்களை நீர் சம்பாதித்துக் கொண்டது விந்தையிலும் விந்தைதான். இவ்வளவு அதிசயமான காரியத்தை எப்படிச் சாதித்தீர்?"

"அது பெரிய கதை, தேவி!"

"இருந்தால் பாதகமில்லை. சொல்லலாம். அந்த விவரங்களைத் தெரிந்து கொண்ட பிறகுதான் தமக்கு நான் இட வேண்டிய பணியை இடக் கூடும்."

இவ்வாறு இளவரசி கூறிவிட்டு, ஈசான சிவபட்டரை அருகில் அழைத்து, "படகோட்டி எப்படிப் பட்டவன்?" என்று கேட்டாள்.

"இரண்டு காதும் நல்ல செவிடு; இடி இடித்தாலும் கேளாது, தாயே!"

"ரொம்ப நல்லது. படகிலேறிக் கொஞ்ச தூரம் ஓடையில் போய்விட்டு வரலாம். வாருங்கள்! இவருடைய கதையை முழுதும் நான் கேட்க வேண்டும்!" என்றாள்.

வல்லவரையன் புளகாங்கிதம் அடைந்தான். சோழர் குலத் திருமகளோடு ஒரே படகில் செல்லும் பாக்கியம் எளிதில் கிட்டுவதா? அதைப் பெறுவதற்கு ஏழு ஜன்மங்களில் தான் தவம் செய்திருக்க வேண்டாமா? படகில் ஏறிய பிறகு எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம் கதையை நீட்டி வளர்த்திச் சொல்ல வேண்டும்! சுருக்கமாக முடித்து விடக் கூடாது! அவசரம் என்ன? அரிதில் பெற்ற பாக்கியத்தை எளிதில் கை நழுவ விட்டு விடலாமா?

வந்தியத்தேவனுக்கு அவசரமில்லை தான். ஆனால் படகு ஓடையில் நகர்ந்து, அவன் கடம்பூர் சம்புவரையர் மாளிகையில் நடந்ததைச் சொல்லத் தொடங்கியது முதல் குந்தவைக்கு நிமிஷத்துக்கு நிமிஷம் அவசரமும் பரபரப்பும் அதிகமாகி வந்தன. "மேலே என்ன?" "அப்புறம் என்ன?" என்று கேட்டுத் துரிதப்படுத்தி வந்தாள். வந்தியத்தேவன் அவளுடைய தீர்மானத்தின்படி கூடிய வரையில் கதையை வளர்த்தினான். எவ்வளவு நீண்ட கதையாயினும் முடிவு ஒன்று வந்துதானே ஆக வேண்டும்? கதை முடிந்தபோது படகும் திரும்ப ஓடைப் படித்துறைக்கு வந்து சேர்ந்தது.

படகிலிருந்து அவர்கள் இறங்கிப் பூங்காவுக்குள் வந்தபோது, அரண்மனையில் இன்னும் குரவைக் கூத்து நடந்து வந்ததற்கு அறிகுறியாக இசைக் கருவிகளும் தண்டைச் சிலம்புகளும் ஒலித்தன. பின் வரும் சிலப்பதிகார வரிப் பாடலும் கேட்டது: –

**"பெரியவனை மாயவனைப் பேருலக
மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக்
கண்ணும்
திருவடியும் கையும் திருவாயும்
செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன
கண்ணே!
கண்ணிமைத்துக் காண்பார் தம்
கண்ணென்ன கண்ணே!
மடந் தாழு நெஞ்சத்துக் கஞ்சனார்
வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால்
நாற்றிசையும் போற்றப்
படர்ந்தாரண முழங்கப்
பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன
நாவே!
நாராயணா வென்னா நாவென்ன
நாவே!"**

இதைக் கேட்ட வல்லவரையன் "கஞ்சனார் மிக்க வஞ்சனாராயிருக்கலாம்! ஆனால் எனக்கு நேற்றுப் பேருதவி செய்தார்!" என்றான்.

"அது என்ன? கம்ஸன் உமக்கு என்ன உதவி செய்திருக்க முடியும்?" என்று இளையபிராட்டி கேட்டாள்.

"நான் இந்த நகரத்துக்குள் புகுவதற்குக் கம்ஸன்தான் உதவி செய்தான்!" என்றான் வந்தியத் தேவன். பிறகு, அந்த உதவியின் வரலாற்றையும் கூறினான்.

பழையாறைக்குத் தான் வந்து சேர்வதற்குள்ளாகவே பழுவேட்டரையரின் ஆட்கள் வந்திருப்பார்கள் என்று வந்தியத்தேவன் ஊகித்திருந்தான். நகரத்தின் நுழை வாசல்



கள் தோறும் அவர்கள் காத்திருப்பார்கள். சந்தேகம் ஏதேனும் தோன்றினால் பிடித்துக் கொண்டு போய் விடுவார்கள். அவர்களிடம் சிக்காமல் பழையாறை நகருக்குள் பிரவேசிப்பது எப்படி? – இந்தக் கவலையுடன் அந்த மாநகரின் பிரதான வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் அரிசிலாற்றங்கரையில் வந்தியத்தேவன் நின்றிருந்தபோது நாடக கோஷ்டி ஒன்று வந்தது. கண்ணன், பலதேவன், கம்ஸன் முதலிய வேஷக்காரர்கள் வந்தார்கள். அவர்களில் கம்ஸன் மட்டும் மரத்தினாலான முகத்தைத் தரித்திருந்தான். வந்தியத்தேவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. நாடக கோஷ்டியுடன் பேச்சுக் கொடுத்தான். கம்ஸன் வேஷம் போட்டவனுக்கு ஆட்டத் திறமை அவ்வளவு போதாது என்றான். கம்ஸ வேஷக்காரன் இவனுடன் சண்டைக்கு வந்தான். வந்த சண்டையை இலகுவில் வல்லவரையன் விடுவானா? "உன்னைவிட நான் நன்றாக ஆடுவேன். பார்க்கிறாயா?" என்று சொல்லி முகமூடியைப் பலவந்தமாகப் பிடுங்கி வைத்துக் கொண்டு ஆடினான். அச்சமயம் அவனுடைய ஆரவாரத் தடபுடலைப் பார்த்தவர்கள் அவனை மெச்சினார்கள். அவன் ஆடியது தான் அதிகப் பொருத்தமாயிருந்தது என்றும் சொன்னார்கள். கம்ஸ வேஷக்காரன் கோபித்துக் கொண்டு போய் விட்டான். "அவன் போனால் போகட்டும்; நானே உங்களுடன் நகரத்துக்குள் வந்து ஆடுகிறேன்" என்று வந்தியத்தேவன் ஒப்புக் கொண்டான். நாடக கோஷ்டியார் மகிழ்ச்சியுடன் அவனைத் தங்களுடன் சேர்த்துக் கொண்டு சென்றார்கள்.

பழையாறை வீதிகளில் ஆட்டம் பாட்டமெல்லாம் முடிந்த பிறகு வந்தியத்தேவன் ஆதித்த கரிகாலர் சொல்லி அனுப்பியபடி வடமேற்றளி ஆலயத்துக்குச் சென்று ஈசான பட்டரைச் சந்தித்துப் பேசினான். அவர் அவனைக் கோயிலைச் சுற்றியிருந்த சமணர் முழையில் இருக்கச் செய்து, இளவரசி குந்தவைப் பிராட்டியிடம் முன்னால் தெரிவித்துவிட்டு ஓடை வழியாக அழைத்து வந்தார்.

இந்த விவரங்களைக் கேட்ட இளவரசி

வந்தியத்தேவனை வியப்பினால் மலர்ந்த கண்களைக் கொண்டு பார்த்து, "வெற்றித் தெய்வமாகிய கொற்றவையின் கருணை இந்தச் சோழர் குலத்துக்குப் பரிபூரணமாக இருக்கிறது. ஆகையினாலேதான் இந்தச் சங்கடமான நிலைமையில் தம்மை எனக்கு உதவியாகத் தேவி அனுப்பி வைத்திருக்கிறாள்!" என்றாள்.

"அரசி! இன்னும் தாம் எந்த விதப் பணியும் எனக்கு இடவில்லையே? என் பூரண ஆற்றலைக் காட்டக் கூடிய சமயம் இன்னும் கிட்டவில்லையே!" என்றான் வல்லவரையன்.

"அதைப் பற்றிக் கவலை வேண்டாம். இது காறும் தமக்கு நேர்ந்திருக்கும் அபாயங்கள் எல்லாம் ஒன்றுமில்லை என்று சொல்லக் கூடிய அளவு அபாயம் நிறைந்த வேலையைத் தரப் போகிறேன்!" என்றாள்.

வந்தியத்தேவன் உள்ளம் பொங்கி உடல் பூரித்து நின்றான். அந்தப் பெண்ணரசி இடும் பணியை நிறைவேற்றுவதற்காக ஏழு கடல்களைக் கடந்து செல்லவும், ஆயிரம் சிங்கங்களுடன் ஆயுதம் இன்றிப் போர் செய்யவும், மேரு பர்வதத்தின் உச்சியில் ஏறி விண் மீன்களைக் கையினால் பறித்து எடுத்துக் கொண்டு வரவும் அவன் சித்தமானான்.

அரண்மனை நந்தவனத்தின் மத்தியில் பளிங்கினால் ஆன வஸந்த மண்டபம் ஒன்று இருந்தது. அதை நோக்கிக் குந்தவை நடந்தாள். பட்டரும் வந்தியத்தேவனும் இளவரசியைத் தொடர்ந்து சென்றார்கள்.

மண்டபத்துக்குள்ளிருந்த மணி மாடம் ஒன்றிலிருந்து குந்தவை ஒரு சிறிய பனை ஓலைத் துணுக்கையும் தங்கப் பிடி அமைத்த எழுத்தாணியையும் எடுத்தாள். ஓலைத் துணுக்கில் பின் வருமாறு எழுதினாள்:

"பொன்னியின் செல்வ! இந்த ஓலை கண்டதும் உடனே புறப்பட்டு வரவும். விவரங்கள் இது கொண்டு வருகிறவர் சொல்லுவார். இவரைப் பூரணமாக நம்பலாம்."

இவ்விதம் எழுதி அடியில் ஆத்தி இலை போன்ற சிறிய சித்திரம் ஒன்று வரைந்தாள். ஓலையை வந்தியத்தேவன் கையில் கொடுப்பதற்காக நீட்டியவாறு, "சிறிதும் தாமதியாமல் இந்த ஓலையை எடுத்துக் கொண்டு ஈழ நாட்டுக்குச் செல்ல வேண்டும். இளவரசர் அருள்மொழி வர்மரிடம் கொடுத்து அவரைக் கையோடு அழைத்து வர வேண்டும்!" என்றாள்.

வந்தியத்தேவன் ஆனந்தத்தின் அலைகளினால் மோதப்பட்டுத் தத்தளித்தான். நெடு நாளாக அவன் கொண்டிருந்த மனோரதங்கள் இரண்டில் ஒன்று நிறைவேறி விட்டது. சோழர் குல விளக்கான இளையபிராட்டியைச் சந்தித்தாகி விட்டது. அவர் மூலமாகவே இரண்டாவது மனோரதமும் நிறைவேறப் போகிறது. இளவரசர் அருள்மொழி வர்மரைச் சந்திக்கும் பேறு கிடைக்கப் போகிறது.

"தேவி! என் மனத்துக்குகந்த பணியையே தருகிறீர்கள். ஓலையை எடுத்துக் கொண்டு இப்போதே புறப்படுகிறேன்!" என்று சொல்லி ஓலையைப் பெற்றுக் கொள்வதற்காக வலக் கரத்தை நீட்டினான்.

குந்தவை ஓலையை அவனிடம் கொடுத்த போது காந்தள் மலரையொத்த அவளுடைய விரல்கள் வந்தியத்தேவனுடைய அதிர்ஷ்டக் கையைத் தொட்டன. அவனுடைய மெய் சிலிர்த்தது; நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது. ஆயிரம் பதினாயிரம் பட்டுப் பூச்சிகள் அவன் முன்னால் இறகுகளை அடித்துக் கொண்டு பறந்தன. ஆயிரம் பதினாயிரம் குயில்கள் ஒன்று சேர்ந்து இன்னிசை பாடின. மலை, மலையான வண்ண மலர்க்குவியல்கள் அவன் மீது விழுந்து நாலா பக்கமும் சிதறின.

இந்த நிலையில் வந்தியத்தேவன் தலை நிமிர்ந்து குந்தவைதேவியைப் பார்த்தான். என்னவெல்லாமோ சொல்ல வேணும் என்று அவனுடைய உள்ளம் பொங்கியது. ஆனால் அதைச் சொல்லும் சக்தி உயிரற்ற வெறும் வார்த்தைகளுக்கு ஏது?

சொல்ல வேண்டியதையெல்லாம் அவனுடைய கண்களே சொல்லின. அச்சமயம் வந்தியத்தேவனுடைய கண்கள் புனைந்துரைத்த கவிதைகளுக்கிணையான காதற் கவிதைகளைக் காளிதாஸனும் புனைந்ததில்லை, 'முத்தொள்ளாயிரம்' இயற்றிய பழந் தமிழ்க் கவிஞர்களும் இயற்றியதில்லையென்றால் வேறு என்ன சொல்ல வேண்டும்?

வஸந்த மண்டபத்துக்கு வெளியில் எங்கேயோ சற்று தூரத்தில் காய்ந்த இலைச் சருகுகள் சலசலவென்று சப்தித்தன. ஈசான சிவபட்டர் தம் குரலைக் கனைத்துக் கொண்டார்.

வந்தியத்தேவன் இந்த உலகத்துக்கு வந்து சேர்ந்தான்!

(தொடரும்)

கல்கி கலெக்ஷன்

# தெய்வம் ஒன்று நினைக்கும்

உலகில் எந்தப் பக்கம் பார்த்தாலும் பயங்கரக் காட்சிகளே தென்படுகின்றன. மேற்கே, கிழக்கே, தெற்கே, வடக்கே-எங்கு நோக்கினாலும் மக்களை மக்கள் கட்டுக் கொன்று தள்ளுகிறார்கள். மத்தியதரைக் கடல் செங்கடல் ஆகிறது. அட்லாண்டிக்-பசிபிக் சமுத்திரங்கள் மக்களின் இரத்தம் கலந்து சிவக்கின்றன. ஆப்பிரிக்கப் பாலை வனத்து மணல் பரப்பின் மீதும், வால்கா நதியின் உறைந்த வெண்பனித்திரள் மீதும் செக்கச் செவேலென்று இரத்தம் தோய்ந்து கிடக்கிறது.

நமது தேசத்திலும் சிட்டகாங்கில் ஜப்பான் குண்டுகளின் ஓசை கேட்கிறது. மிதுன புரி ஜில்லாவில் வெள்ளத்திலும் புயலிலும் அகப் பட்டுத் தவிக்கும் ஜனங்களை சர்க் காருடைய கஷ்ட நிவாரணத் தொண்டும் சேர்ந்து வாட்டுகிறது.

நம் ஊரிலோ அரிசி விற்கும் விலையை காதால் கேட்கவே சகிக்கவில்லை! இப் படியெல்லாம் அரிசிப் பஞ்சம் வரு மென்று தெரிந்துதான் காந்திமகான் இந்திய ஜனங்களை உண்ணா விரதம் இருந்து பழகச் சொன்னாரோ என்று தோன்றுகிறது.

"அங்கே ஒரு தபால் பெட்டி எரிந்தது", "இங்கே ஒரு பள்ளிக்கூடம் தீக்கிரையா யிற்று" என்பது போன்ற செய்திகள் ஒரு பக்கத்தில் நமது மனச் சோர்வை அதிகப் படுத்திக் கொண்டிருக்கின்றன.

இப்படிப்பட்ட நிலைமையில் திடீ ரென்று பகவான் நம் முன் பிரத்யட்சமாகி "உனக்கு என்ன வரம் வேண்டும்?" என்று கேட்டால், நாம் என்ன சொல்வோம்? "ஆண்டவனே! இந்தப் பூமியில் இனி என்றும் பிறவாத வரம் தர வேண்டும்" என்று கேட்கத்தான் முதலில் தோன்றும். உடனே, "அப்படி ஒரு வேளை பிறப்ப தாயிருந்தால், புண்ணிய நதியாகிய தேம்ஸ் நதிக் கரையில் புண்ணிய பூமியாகிய இங்கிலாந்தில் பிறக்க வரம் வேண்டும்" என்று பகவானைக் கேட்போம். "இங்கி லாந்தில் பிறக்கும் பாக்கியத்தோடு, அங்கே வேலையில்லாத திண்டாட்டத் துக்காளாகும் அதிர்ஷ்டத்தையும் அளிக்க வேண்டும்" என்று விண்ணப்பம் செய் வோம்.

இப்படிப்பட்ட அடங்காத ஆசையை -அதாவது அடுத்த ஜன்மத்திலா வது இங்கிலாந்தில் பிறந்து வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு ஆளாக வேண்டுமென்ற தாங்க முடியாத ஆசையை- நமக்கு அளித்திருப்பது, சென்ற வாரத்தில் ஆங்கில சர்க்காரின் பூரண ஆதரவுடனும் ஆசியுடனும் ஸர் வில்லியம் பிவரிட்ஜ் என்பவர் தயாரித்து வெளியிட்டிருக்கும் திட்டந்தான்.

இந்தத் திட்டமானது இங்கிலாந்து தேசத்தில்

**"இல்லையென்ற கொடுமை
இல்லையாக வைப்போம்"**

என்னும் கொள்கையை நிலைநாட்டு வதற்காகத் தயாரிக்கப் பட்டிருக்கிறது. கவர்ன்மெண்டின் சார்பாகத் தயாரிக் கப்பட்ட திட்டமாதலால் அமுலுக்கு வரப் போகிறதென்பதில் யாதொரு சந் தேகமுமில்லை. அவ்வளவு முக்கியமான திட்டத்தின் சில முக்கியமான அம்சங் களை மட்டுமாவது நாம் கவனித்து வைப் போம்:-

1. இந்தத் திட்டத்தின்படி இங்கிலாந் தில் யாராவது ஒரு மனுஷனுக்கு வேலை

அமரர் கல்கி

கிடைக்கா விட்டால் அவனுக்கு சர்க்கார் வாரத்துக்கு 56 ஷில்லிங் வீதம் உதவிப் பணம் அளித்து வருவார்கள்.

வாரத்துக்கு 56 ஷில்லிங் என்றால் மாதத்துக்கு ரூ. 160 ஆயிற்று!

2. ஒரு மனுஷன் எந்தக் காரணத்தினாலோ அங்கஹீனனாகி வேலைக்கு லாயக்கற்றவனாகிப் போய் விட்டால், அவனுக்கும் மேற்கண்ட விதம் மாதத்துக்கு ரூ. 160 வீதம் உதவிச் சம்பளம் அளிக்கப்படும்.

3. ஒரு குடும்பத்திலுள்ள ஒவ்வொரு குழந்தைக்கும் 16 வயது நிரம்பும் வரையில் வாரத்துக்கு 8 ஷில்லிங் (மாதத்துக்கு ரூ. 24) வீதம் அலவன்ஸ் அளிக்கப்படும்.

4. ஒரு தொழிலாளி வேலை செய்யும் வயதைக் கடந்து முதுமை அடைந்து விட்டால், அவனுக்கும் அவன் மனைவிக்குமாக வாரம் 40 ஷில்லிங் (மாதம் ரூ. 120) சாகிற வரையில் பென்ஷன் தரப்படும்.

5. ஸ்திரீகளுக்கு விவாகத்துக்காக நன்கொடையும், கர்ப்ப கால உதவியும், விதவைகளுக்குப் பென்ஷனும் உண்டு.

6. கடைசியாக, இங்கிலாந்தில் ஒரு மனுஷன் செத்துப் போனால், அவனுடைய பிரேத சம்ஸ்காரச் செலவுகளுக்காக இருபது பவுன் (ரூ. 300) நன்கொடை சர்க்கார் அளிக்கிறார்கள்!

இதையெல்லாம் படிக்கும்போது யாருக்குத்தான் நாக்கில் ஜலம் ஊறாது? "பிறந்தால் இங்கிலாந்தில் பிறக்க வேண்டும்" என்று தோன்றுவதில் ஆச்சரியம் என்ன? இந்தியாவில் பிறந்து உத்தியோகம் கிடைத்துப் பார்ப்பதைக் காட்டிலும் இங்கிலாந்தில் பிறந்து வேலையில்லாமலிருப்பது சௌக்யம் என்று தோன்றுவதும் இயல்பல்லவா? இதையெல்லாம் காட்டிலும், ஒரு மனுஷன் செத்துப் போவதற்கு இங்கிலாந்தைப் போல் சௌகரியமான- லாபகரமான-நாடு வேறில்லையென்றும் தோன்றக் கூடுமல்லவா?



• முசோலினி

ஸர் பிவரிட்ஜின் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதற்கு 1943-ல் 69 கோடியே 70 லட்சம் பவுன் செலவாகப் போகிறதாம். அதாவது கிட்டத்தட்ட ஆயிரம் கோடி ரூபாய்! அம்மாடி! ஆயிரம் கோடி ரூபாய்! இந்திய அரசாங்கத்தின் மொத்த வருஷ வருமானம் 200 கோடிக்குக் குறைவு!



• ஹிட்லர்

**பி**ரிட்டிஷார் மகா பயங்கரமான யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். வலிமை வாய்ந்த ராட்சதப் பகைவர்களுடன் "இருப்பதா? இறப்பதா?" என்னும் நிலைமையில் போராடுகிறார்கள். "யுத்தத்தில் ஜயிப்பதல்லவா முதல் காரியம்? வேலையில்லாதவர்களுக்கு உபகாரச் சம்பளத்துக்கும், பிரேத ஸம்ஸ்கார உதவிப் பணத்துக்கும் இப்போது என்ன அவசரம்?" என்று பிரிட்டிஷ் சர்க்கார் தங்கள் சொந்தக் காரியத்தில் இருந்து விடவில்லை.

கடுமையான யுத்தத்துக்கு நடுவில்தான் ஸர் பிவரிட்ஜை மேற்கூறிய திட்டம் வகுக்கும்படி கேட்டுக் கொண்டு, அதைப் பிரசாரமும் செய்திருக்கிறார்கள். எதற்காக? பிரிட்டிஷ் மக்கள் உற்சாகத்துடன் யுத்த முயற்சிகளில் ஈடுபடுவதற்காகத் தான். "இந்த யுத்தத்தில் மட்டும் ஜயித்தோமானால் அப்புறம் பஞ்சம் பிணியின்றி சௌக்யமாக வாழ்வு நடத்தலாம்" என்ற உறுதியான நம்பிக்கை பிரிட்டிஷ் பொது மக்களுக்கும்- முக்கியமாகத் தொழிலாளிகளுக்கும்-ஏற்படுவதற்காகத் தான் இந்த பிவரிட்ஜ் திட்டம் இச் சமயத்தில் வெளியாகியிருக்கிறது. இத் தகைய "தரித்திர நிவாரண சாஸனத்தை" இந்த நெருக்கடியான யுத்த காலத்திலேயே பெற்றதின் பொருட்டு, பிரிட்டிஷ் மக்களுக்கு மனமார்ந்த வாழ்த்துக் கோருகிறோம்.

ஆனால், மேற்கூறிய விதமான உறுதியும் நம்பிக்கையும் பிரிட்டிஷ் ஆட்சிக்கு உட்பட்ட மற்ற அபாக்கிய நாடுகளின் மக்களுக்கும் ஏற்பட வேண்டுமென்ற எண்ணம் தற்போதைய பிரிட்டிஷ் மந்திரிகளுக்கு ஏன் உண்டாகவில்லையென்பது மட்டுந்தான் நமக்கு ஆச்சரியம் அளிக்கிறது. "தன்னைப் போலவே மற்றவர்களையும் பார்க்க வேண்டும்" என்று கிறிஸ்துவ வேதம் போதிக்கிறது. ஆனால், தற்போதைய பிரிட்டிஷ் மந்திரிகள் "நாமும் நம் இனமும் மட்டும் வாழ்ந்தால் போதும்" என்ற எண்ணங் கொண்டிருக்கிறார்கள். இந்த யுத்தத்தில் ஜயிக்க வேண்டுமென்று அவர்கள் நிச்சயம் விரும்புகிறார்கள். ஆனால் அந்த ஜயம் பிரிட்டனுடைய ஆயுத பலத்தினாலும், பிரிட்டிஷ் மக்களின் பிரயத்தனத்தினாலுமே கிடைக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். வெற்றியின் பலன்களையும் தாங்களே முழுதும் அனுபவிக்க வேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள்.

"பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தைக் கலைத்து விடுவதற்காகவா நான் பிரதம மந்திரியாகியிருக்கிறேன்? ஒரு நாளும் இல்லை" என்று பிரதம மந்திரி சர்ச்சில் சொன்னார். இந்த யுத்தத்திற்குப் பிறகும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை முன் போலவே கட்டியாள வேண்டுமென்ற ஆசை சர்ச்சிலுக்கு உண்டு என்பது நமக்கு முன்னமே தெரிந்ததுதான். ஆனால் இவ்வளவு பட்டவர்த்தனமாக அதைச் சொல்வார் என்று மட்டுந்தான் நாம் எதிர்பார்க்கவில்லை. வட ஆப்பிரிக்காவில் ஏற்பட்ட வெற்றியின் போதையானது அவருக்கு இத்தகைய உற்சாகத்தை அளித்து விட்டது.

• சர்ச்சில்



சர்ச்சிலைப் போலவே தலை தெரியாத உற்சாகத்தையடைந்து இன்னும் சில பிரிட்டிஷ் மந்திரிகளும் பிதற்றத் தொடங்கியிருக்கிறார்கள். லார்ட் கிரான்போன் என்னும் ஒருவருடைய பெயர் இந்திய வைஸராய்ப் பதவி சம்பந்தமாக அடிபடுகிறது. இவர் சென்ற வாரத்தில் சில வாய் முத்துக்களை உதிர்த்தார். "மலாயில் நாம் தோல்வியடைந்ததற்குக் காரணம் அந்த நாட்டு ஜனங்களுக்குச் சுயாட்சி இல்லாமலிருந்ததல்ல; அவர்கள் உற்சாகமாக நமக்கு உதவி செய்யாததுமல்ல; போதிய ஆயுத பலம் இல்லாததுதான் காரணம்" என்று சொன்னார்.

இந்த மகா புண்ணியவானே அடுத்த இந்திய வைஸராயாக வரும் பட்சத்தில் ஒரு விதத்தில் எவ்வளவோ நன்றாயிருக்கும். இவர் வைஸராயாக வந்ததும், இந்திய மக்களைப் பார்த்து, "யுத்தத்துக்கும் உங்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை. நீங்கள் வீண் சிரமப்பட வேண்டாம். பட்டாளத்தில் சேர வேண்டாம்;

பணங்கொடுக்க வேண்டாம். உங்கள் வேலையை நீங்கள் பாருங்கள். எங்களுடைய ஆயுத பலத்தைக் கொண்டு நாங்களே ஜப்பானை ஜயித்துக் கொள்கிறோம்" என்று ஒருவேளை சொல்லி விட்டால் இந்திய மக்களுக்குத் தொந்தரவுமில்லை, பொறுப்புமில்லையென்று ஏற்பட்டு விடுமல்லவா?

அமெரி, சர்ச்சில், கிரான்போன் கூட்டத்தார் என்ன உத்தேசம் வேண்டுமானாலும் கொண்டிருக்கலாம். ஆனால், நல்ல வேளையாக இந்த யுத்தத்தை அவர்கள் மட்டும் நடத்தவில்லை. அவர்களால் மட்டும் சமாளிக்கக் கூடிய யுத்தமும் இது இல்லை. அமெரிக்கா, ருஷியா, சீனா தேசங்களும் இந்த யுத்தத்தில் ஈடுபட்டிருக்கின்றன. சர்ச்சில் கும்பலைப் போல் குறுகிய திருஷ்டி கொள்ளாமல் விசால நோக்கங் கொண்டவர்கள் பலர் அமெரிக்காவில் இருக்கிறார்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, கடவுளின் சித்தம் ஒன்று இருக்கிறது. ஆகவே, இந்த யுத்தத்தின் முடிவில் சர்ச்சில் கும்பலின் இலட்சியங்கள்தான் உலகில் நிலைபெறும் என்று நாம் நம்பவில்லை. இந்த யுத்தத்தின் போக்கையும் சர்ச்சில் கும்பல் மட்டும் நிர்ணயிக்கப் போவதில்லை.

சென்ற மகா யுத்தம் நாலு வருஷம் மிகவும் பயங்கரமாக நடந்தது. அந்த யுத்தத்தில் ஜயித்தவர்கள் சிற்சில இலட்சியங்கள் கொண்டிருந்தார்கள். அந்த இலட்சியங்களை நிறைவேற்ற முயன்றார்கள். ஆனால், அவர்கள் எதிர்பார்த்தபடி ஒன்றும் நடக்கவில்லை. ஜயமடைந்த தேசங்களில் ஒன்றான பிரான்ஸ் தேசம் இன்று பழைய எதிரியின் காலடியில் மிதிபட்டுக் கிடக்கிறது. பிரஞ்சுக் காலனிகள் துண்டு துண்டாகப் பிரிந்து வெவ்வேறு ஆதிக்கத்தின் கீழ் சின்னாபின்னமாகிக் கிடக்கின்றன.

சென்ற யுத்தத்தினால், அதில் ஈடுபட்டவர்கள் யாருமே எதிர்பாராத ஒரு மகத்தான விளைவு ஏற்பட்டது. அது ருஷியாவில் ஏற்பட்ட யுகப் புரட்சிதான். ருஷிய ஜார் சக்ரவர்த்தி ருஷியாவை யுத்தத்தில் ஈடுபடுத்தியபோது ருஷிய சாம்ராஜ்யத்தை என்றென்றைக்கும் தம் சந்ததிகள் ஆளப்போகிறார்கள் என்ற எண்ணத்துடன் தான் இருந்திருப்பார். ஆனால், அவருடைய வம்சமானது வேரும் வேரடி மண்ணுமில்லாமல் பொசுங்கிப் போய் விட்டது. அந்த யுத்தத்தில் ருஷியா மத்தியிலேயே விலகித் தனிச் சமாதானம் செய்து கொண்டது. அதே ருஷியாதான் இன்று நாஜிப் படைகளின் ராட்சதப் பலத்தைத் தூள் தூளாக்கி நேசக் கட்சியின் ஜயத்துக்கு அஸ்திவாரம் போட்டிருக்கிறது.

ஹிட்லரும், முஸோலினியும் இந்தக் கொடிய யுத்தம் ஆரம்பித்தபோது வருங்கால உலகத்தில் தங்களுடைய இஷ்டப்படிதான் எல்லாம் நடக்கப் போகிறது என்று எண்ணினார்கள். அவர்களுடைய ஆசையில் ஏற்கெனவே மண் விழுந்து விட்டது. இன்று அவர்கள் யுத்தத்திலிருந்து எப்படியாவது தப்பி மீண்டால் போதுமென்று நினைக்கிறார்கள் என்பது அவர்களுடைய் பேச்சிலிருந்தே தெரிய வருகிறது.

இன்று சர்ச்சிலும், கிரான்போனும், அமெரியும் தங்களுடைய இஷ்டப்படிதான் உலகத்தில் எல்லாம் நடக்கப் போகிறது என்று பகற்கனவு காண்கிறார்கள். ஆனால் அவர்களுடைய எண்ணம் நிறைவேறப் போவதில்லை. ரூஸ்வெல்ட்டும், ஸ்டாலினும், சியாங்காய்-ஷேக்கும் போடும் திட்டங்கள் தான் நிறைவேறுமென்றும் சொல்வதற்கில்லை. இவர்கள் எல்லாம் ஒவ்வொன்று நினைத்துக் கொண்டிருக்க, கடவுளுடைய சித்தம் ஒன்று தனியாக இருந்து கொண்டிருக்கும். யுத்தத்திற்குப் பிந்திய உலக நிலைமை அதைப் பொறுத்துத்தான் ஏற்படும். இந்தியாவின் கதிமோட்சத்துக்கும் அந்தக் கடவுளின் சித்தத்தில் இடமிருக்க வேண்டுமென்று நாம் பிரார்த்திக்கிறோம். ●

(கல்கி, டிசம்பர் 10, 1942)

இந்த வார இளைஞர்!

# அதற்குள் ஆயிரம் ரசிகர் மன்றங்கள்!

**அபிஷேக்-பாலிவுட் உலகின் புதிய நட்சத்திரம் 'Aakhri mughal' படத்தில் அறிமுகமாகிறார். முதல் படம் வெளி வருவதற்கு முன்பே 'எலிசபெத்' என்ற படத்திலும் நடித்து விட்டார். தவிர மன்மோகன் தேசாய் தயாரிக்கும் அடுத்த படத்திலும் கதாநாயகன் இவரே. இப்படி பாலிவுட் பட உலகையே கலக்கும் இளம் கதாநாயகனுக்கு இதுவரை மும்பையில் ஆயிரம் ரசிகர் மன்றங்கள் துவக்கப்பட்டுவிட்டன. இப்படி அதிரடியாகப் பட உலகில் இறங்கியிருக்கும் அபிஷேக், அமிதாப் பச்சன்-ஜெயா பாதுரி தம்பதியின் மகன்! அண்மையில் மும்பையில் இவரைச் சந்தித்துப் பேசினோம்...**



**"உங்களுடைய முதல் படமே இன்னும் முழுமையாகப் படமாக்கப்படவில்லை. அதற்குள் மும்பைப் படவுலகையே கலக்க ஆரம்பித்து விட்டீர்களே?"**

"மும்பைப் பட உலகை நான் கலக்குகிறேனா? நல்ல ஜோக் இது. எதை வைத்துக் கொண்டு நீங்கள் இப்படிச் சொல்கிறீர்கள்?"

**"முதல் படம் வெளிவரும் முன்பே கையில் ஐந்து படங்கள். இன்றைய முன்னணிக் கதாநாயகிகள் உங்களோடு நடிக்கிறார்கள். ரசிகர் மன்றங்கள் துவக்கப்பட்டு விட்டன. இது எல்லாம் எதைக் காட்டுகின்றன?"**

"'Aakhri mughal' என்ற என் முதல் படத்தில் நான் நடிப்பது பற்றியறிந்து தான் பிற படங்களில் எனக்கு வாய்ப்புக் கிடைத்தனவே தவிர, யாருடைய சிபாரிசினாலும் அல்ல. எந்தப் படம் ஓடும், எது ஓடாது என்று தலையை பிய்த்துக் கொள்கிற இன்றைய சூழ்நிலையில் தயாரிப்பாளர்கள் என்னை வைத்துப் படம் எடுக்கத் தயார் ஆகிறார்கள் என்றால் அதில் உள்ள ரிஸ்க் பற்றித் தெரியாமலா என்னை புக் செய்வார்கள்? So, ஏதோ நான் சாதிப்பேன் என்ற நிலையில்தான் என்னைத் தயாரிப்பாளர்கள் புக் செய்கின்றனர். அப்படித்தான் புகழ்பெற்ற கதாநாயகிகளையும் எனக்கு ஜோடியாகப் போடுகிறார்கள். மேலும் என் தகப்பனார் பெயரில் இருந்த ரசிகர் மன்றங்கள் அனைத்தும்

என் பெயரில் மாற்றப்பட்டது தற்செயலாகத்தான் நடந்தது. நான் சொல்லி அல்ல."

**"அப்படியானால் உங்கள் தந்தை அமிதாப் உங்கள் பின்னால் இருந்து வழி நடத்தவில்லை என்கிறீர்களா?"**

"அதற்கு நான் என்ன செய்ய முடியும்? புகழ் மிக்க அமிதாப்-ஜெயா தம்பதியினருக்கு நான் மகனாகப் பிறந்தது குற்றமா? இருவருமே நடிப்பால் இந்தியாவையே கலக்கியவர்கள். அவர்களின் ரத்தமான எனக்கு நடிப்பு தானாகவே வராவிட்டால் தான் ஆச்சரியம்! அப்படியிருக்க என் தந்தை என்னைப் பின்னாடி இருந்து நடத்துகிறார் என்று சொல்வது அபாண்டம். என் தந்தை அமிதாப் எடுக்கும் படத்தில் நான் கதாநாயகனாக அறிமுகமாகவில்லையே. அப்படியும் ஏன் இந்தக் கேள்வி?"



"ஆபீஸ்ல நான் தூங்கறதைப் பற்றி வரவர நம்ம மானேஜர் பண்ற கிண்டலுக்கு எல்லையே இல்லாம போச்சு!"

"அப்படி என்ன சொல்லிட்டார்?"

"கொஞ்சம் ஜாக்கிரதையா கொட்டாவி விடுங்க; திறந்த வாய்க்குள்ள 'டைடானிக்' நுழைஞ்சடும் போல இருக்குன்றார்!"

— உ. ராஜாஜி

**"உங்களுக்கு இந்த வாய்ப்பு எப்படி வந்தது?"**

"ஒரு பார்ட்டியில் என்னைப் பார்த்த ஜே.பி. தத்தா என்பவர், நீதான் என் படத்தில் ஹீரோ என அங்கேயே அட்வான்ஸையும் கையில் திணித்து விட்டார். என்னை எதுவுமே பேச விடவில்லை. முதல் நாள் ஷூட்டிங்குக்குப் போகும் போதுதான் என் பெற்றோரிடம் கூறினேன். வாழ்த்துப் பெற்றேன். அது அவர்களுக்கே அதிர்ச்சி! தெரியுமா?"

**"அமிதாப் மகன் என்பது உங்களுக்கு எந்த வகையில் உதவுகிறது?"**

"உண்மையாகச் சொன்னால் அது 'முள் கிரீடம்' அணிவதைப் போன்றுதான் இருக்கிறது. எங்கே நான் மோசமாக நடித்தால் அவரின் பெயர் கெட்டு விடுமோ என்ற பயம் ஒவ்வொரு நிமிடமும்-ஒவ்வொரு மயிர்க் காலிலும் எனக்கு இருக்கிறது. ஆனால் அதுவே சில சமயம் 'கவசம்' போலவும் உள்ளது. சுமாராக நான் நடிக்கும் போது கூட பிறர் பெரிதாகப் பாராட்டும் போது, இந்தப் பாராட்டு எல்லாம் எனக்கு அல்ல. என் தந்தைக்கும் தாய்க்கும் உரியது என்று நான் நினைத்துக் கொள்வேன். ஒரு வகையில் இது ஒரு அட்வான்டேஜ்தான். படப்பிடிப்புத் தளத்தில் நான் நடக்கும் போது, கையை அசைக்கும்போது, தலையைச் சாய்க்கும்போது 'சின்ன அமிதாப்பைப் பார்ப்பது போலவே இருக்குது' என்று பிறர் மெல்லிய குரலில் பேசுவது என் காதில் விழும். அப்போது நான் சிரித்துக் கொள்வேன்."

**"உங்கள் தாய் ஜெயா பச்சன் உங்களுக்கு எந்த வகையில் உதவுகிறார்?"**

"நான் ஷூட்டிங் தவிர அனாவசியமாக பார்ட்டிகளுக்குப் போவதைத் தடுக்கிறார். போனால் 'சிக சிக'வில் மாட்டிக் கொள்வாய் என்று சொல்வதால் அதை ஏற்றுக் கொள்கிறேன். அதனால்தான் இதுவரை எந்த வம்பு தும்பிலும் நான் இன்னும் சிக்கவில்லை!" எனச் சிரிக்கிறார்.

**"உங்களுக்கு Girl friends உண்டா?"**

"ஐயோ, அதெல்லாம் இதுவரை கிடையாது. நான் உண்டு. என் படப்பிடிப்பு உண்டு. அவ்வளவுதான்!"

**"உங்கள் பெற்றோர் காதலித்துத் திருமணம் செய்து கொண்டது போல் உங்கள் திருமணமும் காதல் திருமணமாகத்தான் இருக்குமா?"**

"என்ன சார் என்னை வம்பில் மாட்டி விடுவீர்கள் போல இருக்கிறதே! இப்போது தான் நான் நடிக்க வந்துள்ளேன். முதலில் சினிமா உலகில் செட்டில் ஆகி நல்ல நடிகன் என பெயர் எடுக்கவே விரும்புகிறேன். பிறகு தான் காதல், திருமணம் எல்லாம்."

**"அப்படியானால் இன்னும் சில ஆண்டுகளுக்குப் பிறகு காதலிப்பீர்கள். இல்லையா?"**

"உங்களுக்குப் பேட்டி கொடுத்ததே தவறாகி விட்டதே!"

சந்திப்பு: **நந்தினி**




உங்கள் குழந்தை தானிய உணவை உண்ணும் நேரம் வந்துவிட்டது. ஆனால், நான்கு மாத காலத்தில் அதன் ஜீரண உறுப்புக்கள் சிறிது நாசூக்கானவை. பிரத்தியேகமாக, குழந்தைகளுக்கென தயாரிக்கப்பட்ட உணவே மிகச் சிறந்தது.

# புதிய ஃபாரெக்ஸ் ரைஸ் மீல்ஸ் குழந்தையின் தேவையை அறிந்தது. ஊட்டம் தரும் உணவிலே உயர்ந்தது. உங்கள் குழந்தைக்கு, அது உகந்தது.

அறிமுகம், முதன் முறையாக இந்தியாவிலே புதிய ஃபாரெக்ஸ் ரைஸ் மீல்ஸ். எளிதாக ஜீரணிக்கக்கூடிய வகையில், அரிசிக்கு இயற்கை அளித்த நற்குணங்கள் அனைத்தும், வளரும் குழந்தைக்கு நல்முறையிலே கிடைக்க வேண்டும் என்றே தயாரிக்கப்பட்டது. க்ளுட்டன் ஃப்ரியாக தயாரிக்கப்பட்ட புதிய ஃபாரெக்ஸ் ரைஸ் மீல்ஸ், உங்கள் குழந்தைக்கு, உணவினால் அலெர்ஜி வராமல் பாதுகாக்கிறது. சமச்சீரான அளவிலே வளரும் குழந்தைக்கு தேவையான ஊட்டச்சத்துக்கள் அனைத்தும் கொண்ட தயாரிப்பாகும். ஆறு சுவைகளில் தயாரிக்கப்பட்ட ரைஸ் மீல்ஸில் ஒன்றை இன்றே ஊட்டத்துவங்குங்கள், உற்சாகம் பெற்ற மழலை முகத்தை கண்டு மகிழுங்கள்.

Farex® Nutritious RICE MEALS

ரைஸ், ரைஸ் முட்டை, ரைஸ் வெஜிடேபிள்,
ரைஸ் மிக்ஸ்ட் ஃப்ரூட், ரைஸ் பனானா மற்றும் ரைஸ் ஆப்பிள்.

**Farex®**
GROWING UP RIGHT

முக்கிய அறிவிப்பு: தாய்ப்பாலே குழந்தைக்கு உகந்தது. தானிய உணவுகளை 4 மாதத்திற்குப் பிறகே துவங்க வேண்டும்.

CONTRACT FAX 24860 TA



படபடவென்று மாடிப்படி ஏறுகிற சப்தம். சக்திவேல் திடுக்கிட்டு விழித்தான். அப்பா. அந்த விழிப்பு ஆச்சரியமாக விரிந்தது! அப்பா இதுவரை மாடிப்படி மிதித்ததில்லை. உயிர் போகிற அவசரம் என்றால் கூட குரல் தான் வரும். அவர் வரமாட்டார். கல்லும் மண்ணும் சுமந்து வந்ததோடு சரி. அதற்குப் பிற்பாடு வரவில்லை. அப்பா சரசரவென்று மாடியின் விளிம்புக்குப் போனார். அது மொட்டை மாடி. மாடியின் முதுகில் சாய்ந்து கொண்டு ஒரு தென்னை. குட்டித் தென்னை. அப்பா கையில் அரிவாள். அவர் பார்வை எதையோ தேடியது. பாளை பண்ணாடை, பூவிரி இவற்றையெல்லாம் ஒரு பார்வை. மறுபார்வை குறுத்தை. இப்படியும் அப்படியும் சுற்றி ஒரு பார்வை. பரபரவென்று மண்டிக்கிடந்த குப்பைகளை எல்லாம் கொத்தி இழுத்துப் போட்டார். அப்பாவுக்கு எப்படித் தோன்றியது, இதையெல்லாம் சுத்தம் பண்ண வேண்டும் என்று? குலை தள்ளுகிற நேரம் இப்படி அரிவாளோடு வந்து நிற்கிறார்.

சக்திவேலுக்கு ஆச்சரியம். அப்பாவிடம் இன்னும் எத்தனையோ ஆச்சரியங்கள் உண்டு. அப்பா நல்ல உசரம். தேய்த்து அலம்பின தாமிரப் பாத்திரம் மாதிரி முகம். அவர் வசதியானவர் இல்லை. எப்போதும் வெள்ளை உடுத்துகிறவர் இல்லை. ஆனால் எப்போதும் 'வெள்ளை'யாகத் தான் இருப்பார். ஒரு பொழுது கூட முழு விளைச்சலும் வீடு வந்தது கிடையாது. ஒருமுறை பூச்சி வைத்துப் பயிர் நாசமாகும். ஒரு முறை எலி தின்று தீர்க்கும். ஒரு முறை தண்ணீர் கூடிப் பயிர் அழுகிப் போகும். இல்லாவிட்டால் தண்ணீர் காணாது, பயிர் காய்ந்து கருகும். எல்லாம் கூடி வந்தால் அடிமாட்டு விலைக்கு நெல்லுக்கு விலை வைப்பான். இது அப்பாவின் ராசி. ஒரு முறை கூட அவரால் கையைச் சுட்டுக் கொள்ளாமல் கரையேற முடியவில்லை.

இதற்கெல்லாம் கலங்குகிறவர் இல்லை அவர். கஷ்டமோ நஷ்டமோ அவர் முகத்தில் களை மட்டும் குறையாது. எதற்கும் சட்டென்று கலங்கிவிட மாட்டார். எந்த எழுத்தும் படிக்காமல், எந்தப் புத்தகமும் பிரிக்காமல், கான்ஃபரன்ஸ், கச்சேரி என்று எந்தப் படியும் மிதிக்காமல் அவரால் எப்படி இப்படி இருக்க முடிகிறது?

கஷ்டமோ, நஷ்டமோ எல்லாவற்றோடும் அப்பாவால் இயல்பாக ஒட்டிக் கொள்ள முடிகிறது. 'ஐயோ'வென்று ஒதுங்காமல், 'ஆஹா'வென்று நெருங்காமல் எல்லாவற்றோடும் ஒரு விதத்தில் கலந்து விடுகிறார். ஒவ்வொரு நாளையும் கலபமாய் உதறி.

பாரதிபாலன்

அமைதியில் கரைத்து விட முடியும் அவரால்.

இன்று அப்படி முடியவில்லை—

கவலை. தீராத கவலை. மண்ணைத் தோண்டிப் பார்க்கத் தெரிந்த தனக்கு மகனின் மனசைத் தோண்டிப் பார்க்கத் தெரியலையே என்ற கவலை. அவர் மாடிக்கு வந்த விஷயமே வேறு. அரிவாள் ஒரு கைத் துணை. அவர் மனசு படபடத்து விட்டால் அவருக்கு எதையாவது பிடித்துக் கொள்ள வேண்டும். அவரின் தைரிய மின்மைதான் அவரைத் தென்னை மரத்திற் குத் தள்ளியது. இப்படித் தென்னையைப் பார்த்துக் கொண்டு தவிப்பாய் நிற்க வைத்து விட்டது!

# செவ்வந்தி

**ச**க்திவேல் கட்டிலில் தலையைச் சாய்த்து அப்பாவைப் பார்த்துக் கொண்டிருந்தான். வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். அப்படியே தூங்கி விட்டான். ஜிலுஜிலுவென்று காற்று. அந்தக் காற்றுதான் அவனை அடித்துப் போட்டு விட்டது. அசந்து தூங்கி விட்டான். அப்பா குரல் கொடுத்தார். காதில் விழவில்லை. மீண்டும் குரல் கொடுத்தார். அவன் உதடு சுழியிட்டது. கன்னத்துச் சதை ஆடியது. ஏதோ சொப்பனம் போல. கொஞ்சம் நர்ழியானது. தூக்கத்தில் கையோ காலோ சுவரில் மோதியது. விழிப்புக் கொடுத்து விட்டது. கண்ணைத் திறந்தான். கட்டிலோரம் அப்பா. அவனைக் குடைசாய்த்து விட்டது போல ஆனது! இது கனவா என்று கேள்வி! மலங்க மலங்க விழித்தான்.

"என்ன தூக்கமாப்பா?" அப்பாவே தான்.

சட்டென்று எழுந்தான்.

"என்னப்பா?"

"முடியலையா?"

"இல்லை. நல்லாத்தேன் இருக்கேன்!"

அப்பா பதில் பேசவில்லை. ஒரு கணம் அவனையே பார்த்தார். அப்பாவின் மனசில் ஏதோ ஒன்று. அவர் பார்வை 'புகைகிறது' என்கிறது. அவரின்



படம் : யோகா

பதற்றம் எரிகிறது என்கிறது. அவரின் மனசு ஆழம். அதற்கேற்ற அழுத்தமில்லை.

"என்னய்யா இதெல்லாம்?

"எது?"

"இப்படிப் பூட்டியே வெச்சிட்டியே!"

"என்னப்பா சொல்றீங்க..."

"ரொம்ப அழகா இருக்குப்பா நீ பேசறது!"

மௌனம்.

அவன் அவரையே பார்த்தான். அவரும் பார்த்தார். அவர் மண்ணை உண்டு வளர்ந்தவர். கண்ணைக் கண்டு மனசை எடைபோடத் தெரியாது. எதையும் எடை போட்டுப் பேசுகின்ற ஜாக்கிரதையும் அவரிடம் கிடையாது. மனசு கசிந்தால், மடை உடைந்து விடும்.

"ஏன் மறைச்சுட்டே. இப்படிப் போட்டுப் புதைச்சுட்டியே!"

"அவன் விழிகள் மேலும் கீழும் பாய்ந்தன.

"கண்ணுக்குத் தெரியாம, மனசுக்குப் புரியாம மூடிவச்சுக்கிட்டு மூச்சுத் திணறனுமா?"

அவன் சற்று நேரம் சூனியத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். விஷயம் என்னவென்று தெளிவாயிற்று. மெல்ல மெல்லப் புத்தியில் ஏறிற்று! அது ஏறியவுடன் புதிராயிற்று. இது அப்பாவுக்கு எப்படிப் போயிற்று. அடி ஆழத்தில் கிடந்ததை, எப்படி, எதன் மூலம் அறிந்து கொண்டார்? சக்திவேல் புரியாமல் விழி பிதுங்கினான்.

"சொல்லுயா. சொல்லு. இப்படி ஒண்ணுமே பேசாத இருந்தா எப்படி?" அவன் பேசவில்லை.

அப்பாவும் நகரவில்லை. அங்கயே நின்றிருந்தார். அவனையே பார்த்தார். அவர் முகம் குலைந்து போனது! கொழ கொழவென்று மாறியது. எங்கே அழுதுவிடுவாரோ என்று பயம். படபடப்பாகத்தான் இருக்கார்.

"எனக்கு நீதான்யா முக்கியம். உன் சுகம் தேன் முக்கியம். எனக்குக் கண்ணுலெ வெண்ணை போட்டுக்கிட்டு எதையும் பார்க்கத் தெரியாது. அப்படிப் பார்த்திருந்தா இது வெளிச்சமாத் தெரிஞ்சுருக்கலாம். எனக்கு அப்படிப் பார்க்கத் தெரியலை. நீ வெளிச்சமா இருக்கணும். இருட்டுலெ விழுந்து புழுங்கப்படாது!"

"எதையாவது சொல்லாதீங்க!"

"உள்ளதைத் தான் சொல்றேன்."

"..................."

"எத்தனை நாளா இந்த முள்ளு மேலே நின்னுக்கிட்டிருக்க?"

அவன் சட்டென்று நிமிர்ந்து அப்பாவின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான்.

"என் பேர்லெ உனக்குச் சந்தேகம். குறுக்கு விழுந்து குதறிடுவேனோன்னு சந்தேகம்.

அதான் மூடிட்ட, தளதளவென்று அப்பாவின் கண்கள் நிறைந்தன. அதை மறைக்க முகத்தை இப்படியும் அப்படியு மாய்த் திருப்பினார். அதில் அவருக்குத் தோல்விதான். சக்திவேல் திகைத்துப் போனான். விழுந்து அவர் காலை வாரி நெஞ்சில் வைத்துக் கொள்ள வேண்டும் போல் குறுகுறுப்பு. அது ஒவ்வொரு கணமும் கூடிக் கொண்டேதான் இருந்தது. 'அப்பா போய்விடுங்கள். தயவு செய்து இங்கிருந்து எழுந்து போய் விடுங்கள். எனக்குத் தெம்பு இல்லை. உங்களைப் பார்க்கத் திராணி இல்லை! திகைப்பில் இருந்து அவனால் திரும்ப முடியவில்லை.

அப்பா ஏதோ பேச வாயெடுத்தார். அவன் அவரையே மிரட்சியோடு பார்த்துக் கொண்டிருந்தான். அப்பாவின் வார்த்தை அரிவாளாய் உயர்ந்தது. பிரகலாதன் கழுத்திலே கத்தியை ஓங்குவதுபோல் வார்த்தை ஓங்கியது. அவன் தலை கவிழ்ந்தான். அரிவாள் கழுத்தில் இறங்கப் போகிறது! கண்களை இறுக மூடிக் கொண்டான். கடைசியில் அது பூமாலையாகத்தான் விழுந்தது.

"செவ்வந்தியோட, அப்பாகிட்டப் பேசுறேன்."

"..................."

"பேசட்டுமா?"

அப்பாவுக்கு எதையும் காவு கொடுக்கப் பிடிக்காது. பலி. பாவம். அவருக்குச் 'சைவம்' உணவு மட்டுமல்ல உணர்வும் தான். எந்த உணர்வையும் கொல்லப் படாது. அவனால் முடியவில்லை. பொசுக்கென்று விட்டு விட்டான். மூடிய கைகளையும் மீறி அழுகை ஒழுகி விட்டது! அப்பா அவனை நெருங்கினார். அவரை இத்தனை நெருக்கத்தில் பார்த்ததே இல்லை. ஏதோ ஒரு நெருக்கத்தில் நிற்கிறாற் போல் அவரும் நின்றார். அவர் நிற்கும் நிலை அப்படி! அவனுக்கு அது கதகதப்பாக இருந்தது! அப்பா என் தோளில் கைவையுங்கள். அது எனக்கு ஆறுதலாக இருக்கும். அப்பா தோளில் கைவைத்தால் அப்படியே வாரி எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற தவிப்பு.

அலையலையாய் ஒரு கொதிப்பு! அந்தத் தைரியம் அவனுக்கில்லை. ஆனால் அப்பா நெருக்கமாகத் தான் நிற்கிறார். இது பிரமையாகிவிடக் கூடாது. அவனுக்கு 'ஹோ'வென்று கத்த வேண்டும் போல் ஆயிற்று. எல்லோரும் பார்ப்பார்கள். அம்மா ஓடி வருவாள். எதிர் வீட்டுக்காரர்கள் பார்ப்பார்கள். தெருவில் போகிறவர்கள் பார்ப்பார்கள். எல்லோரும் பார்ப்பார்கள். அந்தக் கத்தல் யாருக்குப் புரியும்? புரியுமா? பைத்திமாகத்தான் பார்ப்பார்கள். பார்க்கட்டும். இதுவரை பைத்தியமாகத்தான் இருந்தேன்.

"சரி. எழுந்து முகம் கழுவிக்க..."

"முத்துப் பிள்ளை..."

"அது என் பிரச்னை. நான் பார்த்துக்கிறேன்."

"அசிங்கமாயிடாதா?"

அப்பா அவனை ஒரு கணம் கூர்ந்து பார்த்தார்.

"போப்பா போ. என்ன அசிங்கம்."

அம்மாவை ஆச்சரியம் அடித்துப் போட்டு விட்டது. கிர்ர் என்று ஒரு குடைசல் காதை உறுத்தியது. கண்ணைக் கட்டிப் போட்டு விட்டு, எல்லாவற்றையும் கொள்ளை அடித்துக் கொண்டு ஓடிவிட்டாற் போல் ஒரு கலக்கம். 'கட்டையிலே... போறவளே... பாடையிலே போறவளே' என்று அவள் யாரையும் சபிக்கவில்லை. முழிச்சிருக்க முழியைப் பிடுங்கிட்டுப் போயிட்டயடி பாவி என்று பதறவில்லை. ஆனால் அந்தப் பிரமை மட்டும் நகர வில்லை. வெகு நேரம் வரை அவள் பார்வை நிலையாய் நின்றது. பிற்பாடு அந்த மாடிப் படியைப் பார்த்தாள். அந்த நடை வாசலைப் பார்த்தாள். அது செல்வந்தி உட்காரும் இடம். இரண்டையும் மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தாள். ஆச்சரியம் அவளை விட்டு அகன்றபாடில்லை. அவள் மனதையே அவளால் சமாதானம் பண்ண முடியவில்லை.

"நிஜமாவா?"

அப்பா சிரித்தார்.

"என்ன சிரிப்பு? இது என்ன விளையாட்டா?"

"நான் வீதியிலையும் விளையாண்டதில்லை. வீட்டிலையும் விளையாண்டதில்லை."

அம்மாவுக்கு ஆவல் அதிகரித்தது.

"சொல்லுங்க?"

"தொண தொணங்காதே!"

"நிஜமாவா?"

"ஆமாம்."

"இது என்னவாம்! நமக்கு எல்லாம் யுத்தமா வந்து நிக்கணும்!"

"வாழ்க்கையே யுத்தம்தான். அதுலெ சத்தமோ, ரத்தமோ இல்லாம பார்த்துக்க வேண்டியது நாமதான்."

அம்மாவுக்கு இது புரியவில்லை.


"சினிமா நடிகர் அரசியல்வாதியா மாறினது அவஸ்தைதான்!"
"ஏன்?"
"மினிமம் கியாரண்டியோட லோ பட்ஜெட்ல ஒரு மீட்டிங் அரேஞ்ச் பண்ண முடியுமான்னு கேட்கறாரு!"
— அம்பை தேவா

"அவுக, கறியெல்லாம் நிம்பாக!"

"முன்வேலியிலெ ஒரு உசுரு விழுந்து இறக்கையை அடித்து அடித்துத் துடிக்குது. ரத்தம் கொட்டித் துடியாத் துடிக்கிறப்ப வேலி முக்கியமா? உசுரு முக்கியமா? வேலியெல்லாம் நாம போட்டுக்கிறதுதானே! உசுரைப் பண்ண முடியுமா?"

"அப்ப வேலியைப் பிடுங்கிப் போட்டுறவா?"

"அதை ஏன் பிடுங்கிப் போடுவானேன். வேலிங்கிறது நம்ம சௌகரியத்துக்குத்தான். நம்ம பாதுகாப்புக்குத்தான். அதை ஏன் பிடுங்கணும்? அது பாட்டுக்கு இருந்துட்டுப் போகட்டும். நம்ம வசதிக்குக் கொஞ்சம் தள்ளிப் போட்டுக்கிட்டாப் போச்சு."

அம்மாவுக்கு ஆச்சரியம். இவரா இவரா இப்படிப் பேசுவது என்ற கேள்விக்குள் விழுந்து புரண்டாள். அந்தக் கேள்வியிலே கரைந்து போனாள். கண்களில் ஆச்சரியமும் மனத்தில் மிரட்சியும் பொங்க நின்றாள். ஆச்சரியமான நிமிஷங்களில் எல்லாம், எங்கே நலுங்கி விடப் போகிறதோ என்று தவிக்கின்ற போது அந்த நிமிஷங்களில் இருந்து எளிதில் தாவி விடுகிறார். அந்தரத்தில் நடப்பது போல் நடந்து விடுகிறார். பட்டென்று தென்னை ஈர்க்கைப்



## அணுகுண்டு : வாஜ்பாய் வேதனை!

**செல்லப் பிராணியான நாய்**
**இறந்து போனால் கூட**
**மனிதனுக்குத் தூக்கம் தொலைந்து போகிறது;**
**அணுகுண்டு கண்டுபிடித்த விஞ்ஞானிகள்**
**ஹிரோஷிமாவிலும் நாகசாகியிலும்**
**லட்சக்கணக்கானவர் செத்து மடிந்ததையும்**
**ஆயிரக்கணக்கானவர் ஆயுள் முழுவதும்**
**ஊனமாகிப் போனதையும் மறந்து**
**எப்படித்தான் தூங்கினார்களோ!**
**அமெரிக்க குண்டானாலும் சரி,**
**ருஷ்ய குண்டானாலும் சரி**
**ரத்த வெள்ளம்தானே ஓடப் போகிறது?**

**– வாஜ்பாய் எழுதிய கவிதை**
**ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்**
**தகவல் : இரத்தின மனோகரன்**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

பிடுங்கி, பேசிக் கொண்டே கிளியோ, காகமோ பண்ணிவிடுகிற மாதிரி தான் நடந்து கொள்கிறார். இதிலே ஒண்ணும் ரகசியம் கிடையாது என்று கைவிரிக்க முடியாது. இதெல்லாம் அவரின் தனிப்பட்ட குணம்.

"முத்துப் பிள்ளை முகத்துலெ எப்படி விழிக்கிறதாம்?"

"ப்சு! பார்க்கலாம்."

"நாமளும் ஊரெல்லாம் போய் பருமானம் பண்ணிட்டு வந்தாச்சு!"

"எல்லாம் நம்ம கையிலையா இருக்கு?"

"ஒரே ஊருக்குள்ள, அதுவும் ஜாதிவிட்டு ஜாதி..."

"வண்டிச் சுப்பையா வீட்டுலெ இருக்காறான்னு பாரு."

"வேண்டாம். இப்ப அங்க போக வேண்டாம்."

"ஏன்?"

"தனியாப் போக வேண்டாம்!"

"அட! நீ வேற..."

"கூட யார்னா கூப்பிட்டுப் போகணும். நம்ம ஆளுங்க யார்னா வரட்டும்."

"ஏனாம்?"

"காலம் கெட்டுக் கிடக்கு."

"வண்டிச் சுப்பையா நமக்குத் தெரியாத வரா?

"தெரியாத இன்னும் எத்தனை இருக்கோ!"

அம்மா சொன்னது அவர் காதை எட்டவில்லை. அவரை ஏதோ ஒன்று செலுத்திக் கொண்டிருப்பது போல நடந்தார். சரசர வென்று கொடுக்காப்புளி மரத்திற்குப் போனார். அங்கு விட்டமாய் நிழல் தேங்கிக் கிடந்தது. அதில் சிறிது நேரம் இளைப்பாறினார். மரக் கிளையில் ஒரு குருவி கூடு கட்டியிருந்தது. அதைப் பார்த்துக் கொண்டே உட்கார்ந்து இருந்தார். அவருக்கு அது ஆச்சரியம். பச்சைக் குழந்தையைப் போல் ஆச்சரியம். அம்மா சாப்பிடுவதற்குக் குரல் கொடுத்தாள்.

அப்பா சாப்பிடவில்லை. சாமி அறைக்குள் போனார். வெகுநேரம் வரையிலும் வெளியில் வரவேயில்லை. அம்மா ஏறுகின்ற வெயிலையே பார்த்துக் கொண்டிருந்தாள். முழு வெயிலும் கூரை மேல் ஏறிற்று. அப்போதுதான், சாமி அறைக் கதவு அசைந்தது. அப்பா வெளியே வந்தார். அவர் முகம் கனிவாய் இருந்தது. சட்டையை மாட்டிக் கொண்டு வண்டிச் சுப்பையா வீட்டிற்குப் போனார். தனியாகத்தான் போனார்.

அம்மா தடுக்கவில்லை. மனசுக்குள் கைகுவித்தாள். ஊர்த் தெய்வங்களை எல்லாம் ஒன்று திரட்டி மனசுக்குள் நிறுத்தினாள். ஆனாலும் நிற்கவில்லை. மனசு அடித்துக் கொண்டேதான் இருந்தது. அவர் வாசல்படி இறங்கியதிலிருந்து மனசு விரல் விடத் தொடங்கியது. கால், அரை, முக்கால் என்று தொடங்கி, முழுசாய் இரண்டு மணி நேரத்திற்கு மேல் ஆயிற்று! அப்போதுதான் அவர் தலை தெரிந்தது. முகத்தில் திருப்தி மிதந்தது. அவர் நடை சந்தோஷத்தில் தள்ளாடியது.

அவர் உருவம் விலக பின்னாடியே செவ்வந்தி! அவள் முகத்தைப் பார்க்க வேண்டுமே! ஒரே சந்தோஷ மிதப்பு. பிறவிப் பயனை அடைந்துவிட்ட மாதிரி ஒரு சந்தோஷம்.

(தொடரும்)


SILVER
JUBILEE
YEAR
1974-98

ரசாயனப் பொருள்களை விற்கும் ஒரு பெரிய நிறுவனம். ஆண்டு தோறும் அவர்களது விற்பனை நூறுமில்லியன் டாலர் (பத்துக் கோடி டாலர்). அதில் எனக்கு ஒரு மாநில அளவுக்கு விற்பனை செய்யும் வேலை. வாரா வாரம், ஏறத்தாழ 500 மைலிலிருந்து 800 மைல் வரை காரில் பயணம் இருக்கும். ஒரு சில வாரங்களில் ஆயிரம் மைல் கூட போட்டிருக்கிறேன்.

கோகோ கோலா போன்ற பானம் தயாரிக்கும் நிறுவனங்கள், பால், பால் கட்டி, பால் பவுடர் தயாரிக்கும் நிறுவனங்கள், உணவைப் பதப்படுத்தும் நிறுவனங்கள்தான் எங்கள் முக்கிய வாடிக்கையாளர்கள்.

பேராசிரியர் என்ற அறிவு உலகிலிருந்து




திடீரென்று அன்றாட விற்பனை உலகில் இறங்குவது ஒன்றும் சுலபமாயில்லை. ஒரு கூச்சம், தயக்கம், எனது படிப்பைப் பற்றிய நினைவு இவை எல்லாம் தடைகளாக இருந்தன.

# விற்பனை-

ஆனால் ஒரு மிகப் பெரிய விஷயம் எனக்கு உதவியது. அதாவது நான் ரசாயனத்தின் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை எல்லாத்துறைகளிலும் - மருத்துவ ரசாயனம், பொறியியல் துறையில் வேதியல் கல்வி, சுற்றுப்புறச் சூழல், உணவுத் தொழிலில் என்று வெவ்வேறு துறைகளில் பயன்படும் வேதியல் பொருள்களைப் பற்றிய படிப்பும், தெளிவும் இருந்தது. இது எனக்குப் பெரிதும் உதவியது.

எங்கே எந்த நிறுவனத்தில் போய் உட்கார்ந்தாலும் சரி அந்தத் தொழிலைப் பற்றிய குறிப்பிட்ட தொழில் பத்திரிகைகள் அங்கே மேஜை மீது இருக்கும். நான் அதைப் படிப்பதுண்டு. சில சமயம் அவர்களைக் கேட்டு பழைய பிரதிகளை எடுத்துச் செல்வதுண்டு. பல சமயம் எனது தொழில் சம்பந்தமான பல்வேறு துறையிலுள்ள பத்திரிகைகளுக்கும் சந்தா கட்டி வரவழைப்பதுண்டு. இதனால் என்ன பொருளை எதற்காக உபயோகிக்கிறார்கள் என்பது எனக்குத் தெரிந்தது. என்னென்ன புதிய பொருள்கள், மார்க்கெட்டிற்கு வந்திருக்கின்றன என்பது தெரிந்தது. தொழில் பத்திரிகைகளில் வரும் விளம்பரத்தைப் படித்தாலே போதும்; எதெதை எங்கே உபயோகிக்கலாம் என்பதைத் தெளிவாக விளம்பரப்படுத்தி இருப்பார்கள்; புரிந்து கொள்ளலாம்.

இந்த அறிவு - இந்தப் பின்னணிதான் என்னை முன்னணியில் நிறுத்தியது. சில மாதங்களில் எனது கூச்சத்தை விட்டுவிட்டு எல்லோருடனும் "ஹலோ வால்டர்!" என்று அவர்களது முதல் பெயரைச் சொல்லி சகஜமாகப் பழக ஆரம்பித்தேன்.

விற்பனையில் நான் தெரிந்து கொண்ட முக்கியமான விஷயம் - கடைப் பிடித்த ஒரு நல்ல விஷயம் - எந்தப் போட்டி கம்பெனியையும் அவர்களது பொருள்களையும், குறைவாக, அல்லது தாழ்த்திப் பேசக் கூடாது என்பதுதான்.

"அவர்கள் நல்ல நிறுவனம். அருமையான பொருள்களைத் தயாரிக்கிறார்கள்'' என்று சொல்லிய பின் மிருதுவாக எங்கள் பொருள்களின் தரத்தையோ, தனித்தன்மையையோ விளக்குவேன். சகஜமாக பொருளின் விலையைப் பற்றி பேசுவதில்லை; அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை.

காரணம், ஒரு சமயம் டெங் சோபிங் என்ற பிரபல சீன தலைவர் சொன்னதுதான் நினைவுக்கு வருகிறது.

''எலிப்பொறியைப் பற்றியெல்லாம் எனக்கு விளக்காதீர்கள்; அது எலியைப் பிடிக்குமா, சொல்லுங்கள்! அதுதான் எனக்கு முக்கியம்'' என்பார். அது போல நமது பொருள், சொன்ன வேலையைச் செய்யுமா,




என்பதில்தான் அதிக கவனம் செலுத்து வார்கள் அங்கே.

அடுத்ததாக ஒரு முக்கிய விஷயம். அதாவது அங்கே

# ஒரு கலை!

நீங்கள் ஒரு விற்பனை யாளருடன் பேச்சுக் கொடுத்தால் போதும் மார்க்கெட்டில் என்னென்ன புது மைகள் வந்துள்ளன? மார்க்கெட் எப்படி இருக்கிறது" என்கிற எல்லா விவரங்களையும் ஒரு புத்தகத்தைப் படிப்பதை விட அதிக மாகத் தெரிந்து கொள்ளலாம்!

இதன் காரணமாக நான் எங்கள் நிறு வனத்தின் விற்பனையாளர்களுடனும், மேலதிகாரிகளுடனும் (Technical Advisor) தொழில் நுட்ப ஆலோசகர் என்ற பெய ரோடு பெரிய நிறுவனங்களுடன் வியாபாரத் திற்காகச் செல்வேன்.

மூன்று நான்கு மாதம் கழித்து, தொழில் பிடித்துக் கொள்ளத் துவங்கியது. அந்த ஆண்டு முடிந்த போது சிகாகோ தலைமை யகத்தில் பெரிய விருந்திற்கும், பலருடனும் கலந்து பேசுவதற்கான வாய்ப்பையும் ஏற் படுத்தி இருந்தார்கள்.

அங்கே தேசியத் தலைமை விற்பனை நிர் வாகி என்னை அழைத்தார். அவர்களது ரசா யன சோதனைக் கூடத்தை நான் சென்று பார்க்க ஏற்பாடு செய்தார். அங்கே தலைமை ஆராய்ச்சியாளரிலிருந்து சுமார் 25 பேர் தீவிரமான ஆராய்ச்சியில் – புதிய பொருள் களுக்கான முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். விருந்தில் அவருக்கருகில் என்னை அமரச் சொன்னார். பலவற்றையும் பேசிக் கொண் டிருந்தபோது சொன்னார்: "ஆராய்ச்சிக் கூடம் தனியாக இயங்குகிறது. அதே போல விற்பனைப் பிரிவு தனியாகச் செயல்படு கிறது. ஆராய்ச்சியாளர்களுக்கு மார்க்கெட் டின் தேவை பிடிபடுவதில்லை. ஆகவே இரண்டையும் இணைக்கும் ஒரு புதிய பத வியை உருவாக்க வேண்டும் என நினைக் கிறேன். நீ எடுத்துக் கொள்கிறாயா?" என் றார்.

"மிக நல்ல யோசனை அது" என்றேன். எனது பதவி உயர்வு, அடி மட்டத்தில் விற் பனையாளரிலிருந்து, நேரடியாக தேசிய தலைமை விற்பனை நிர்வாகிக்கு உதவியான பெரிய பதவியாக மாறிற்று. எனக்கு மகிழ்ச்சி, பெருமை. முகமெல்லாம் பல்!

இது எப்படி நிகழ்ந்தது?

இது எப்படி சாத்தியமாயிற்று என்பதை



விளக்க அதற்கு முன் நடந்த சில சம்பவங்களைக் குறிப்பிட வேண்டும்.

விஸ்கான்சின் மாநிலத்தில் ல-கிராஸ் என்ற நகரம். அங்கே 'பாட்டிலிங் - குளிர் பானம் செய்யும் இரண்டு நிறுவனங்கள். ஒன்று சிறியது. மற்றொன்று பெரிய நிறுவனம். இந்த சிறிய நிறுவனம் முன்னதாகவே எங்களது வாடிக்கையாளர். இப்போது எல்லோருடைய கண்ணும் அந்தப் பெரிய நிறுவனத்தில்தான்!

மாதம் ஒரு முறை ல-கிராஸ் செல்வேன். அங்கே வரவேற்பறையில் டைப்ரைட்டருடனும் போனுடனும் இருக்கும் பெண்மணியிடம் நமது விலாச அட்டையைக் கொடுக்க வேண்டும். சிரித்துக் கொண்டே "எப்படி




இருக்கிறீர்கள்?" என்று கேட்டால் போதும், அவர்களுடன் ஒரு சகஜமான நிலைக்கு வந்து விடுவோம். அதாவது தலைமை நிர்வாகியின் காரியதரிசி உங்களை நன்கு நினைவு வைத்துக் கொள்ள வேண்டும்! அடிக்கடி போவதன் மூலம், பேசிப் பழகுவதன் மூலம், இது சாத்தியம்.

ஆறு மாதம் சென்றிருக்கும். ஒவ்வொரு முறையும், "அவர் நிர்வாகிகளுடன் ஒரு முக்கியமான கூட்டத்தில் இருக்கிறார்" என்ற பதிலோ "இல்லை! இன்று பார்க்க முடியாது" என்ற பதிலோ வரும். எனக்குப் புரியவில்லை. என்னைப் பார்க்க மறுக்கிறாரா? அல்லது உண்மையிலேயே அப்படி அதிக வேலையா, அவருக்கு என்பது.

கடைசி முறை சென்றபோது வரவேற்பறைப் பெண்மணியிடம் சொன்னேன். "இதோ பாருங்கள்! இரண்டே நிமிடம்! உபயோகமான விஷயத்தைச் சொல்ல வேண்டும். அவ்வளவுதான்!" என்றேன். அவருக்கும் இப்படி நான் அலைவதில் அனுதாபம் ஏற்பட்டிருக்க வேண்டும். உள்ளே போனார்.

சிரித்துக் கொண்டே வந்து "உள்ளே செல்லுங்கள்! அவர் காத்திருக்கிறார்" என்றார்.

உள்ளே சென்றேன்.

"ஐயா! உங்கள் நேரத்தை நான் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. இந்தப் பக்கத்தில் கிடைக்கும் நீர், மிகுந்த கனமான ரசாயனப் பொருள்களைக் கொண்டது. பாட்டில்களைக் கழுவ, நீங்கள் ஏராள ரசாயனப் பொருள்களை உபயோகிக்க வேண்டும். எனவே முதலில் இந்த நீரை மிருதுவாக்க, சுத்தப்படுத்தும் ஒரு சிறு சாதனத்தை உபயோகித்தீர்களானால் உங்களுக்கு ஆயிரக் கணக்கான டாலர்கள் மிச்சமாகும். இதைத் தான் இந்த ஊரில் உள்ள பக்கத்து நிறுவனத்தில் சிபாரிசு செய்திருக்கிறோம். அதைச் சொல்லிவிட்டுப் போகத்தான் வந்தேன்" என்றேன்.

"அப்படியா? என்றார். பின் "எங்கிருந்து வருகிறீர்கள்?" என்றார். அதன் பின் எங்கள் ரோட்டரி சங்கத்தில் இருக்கும் பேராசிரியர் சுரேந்திர சிங்கைத் தெரியுமா, என்றார். "ஆம்! அவர் என் நண்பர்தான்" என்றேன். "உட்காருங்கள்" என்றார். அமர்ந்தேன்; அரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

"இன்னும் நான்கு மாதத்தில் கட்டடத்தின் அமைப்பையே, உற்பத்திக்காக மாற்றிக் கட்டப் போகிறோம். அப்போது வாருங்கள். ரசாயனப் பொருள்கள் சப்ளையை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்!" என்றார்.

மகிழ்ச்சியுடன் திரும்பினேன். எனினும் "நான்கு மாதங்கள்! எந்த ராஜா எந்த பட்டமோ? வந்த அன்றுதான் நிஜம்!" என்று எனக்கே சொல்லிக் கொண்டு நான் என் வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

அடிக்கடி சென்று அவரைத் தொந்தரவு செய்வதை நான் விரும்பவில்லை.

டிசம்பர் மாதம். அதே ஊரில் உள்ள பிற வாடிக்கையாளர்களைப் பார்க்க அந்த ஊர் ஓட்டலில் தங்கி இருந்தேன். போன் கால்! என் மனைவி கூப்பிட்டார். "உங்களை கோகோ கோலா கம்பெனிக்காரர்கள் கூப்பிட்டார்கள்!"

"என்ன சொன்னாய்?"

"நீங்கள் அதே ஊரில்தான் இருப்பதாகச் சொன்னேன். இதே ஊருக்கு வந்திருந்து

என்னைப் பார்க்கவில்லையா?'' என்று கோபித்துக் கொண்டார்!

செல்லக் கோபம்!

அவரைப் போய்ப் பார்த்தேன். கட்டடத்தைக் கட்டி முடித்திருந்தார்கள். தண்ணீரை மிருதுவாக்கும் கருவியைப் பொருத்தி இருந்தார்கள். "நமது தொழிற்சாலைக்கான ரசாயன வேலையை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்" என்றார்.

உடனே சிகாகோவைக் கூப்பிட்டேன். அவர்களுக்கு ஆச்சரியம்! இது ஒரு பெரிய வியாபாரம். அன்று மத்தியானம் பூராவும் சிகாகோ விற்பனைப் பிரிவில் "இந்த (Silly Indian Nut) இந்தியன், இதை எப்படிச் செய்தான்" என்றே பேசிக் கொண்டதாக அறிந்தேன். பின்னால்தான் எனக்கு விஷயம் தெரிந்தது.

எங்கள் நிறுவனத்திற்கு அந்த கோகோ கோலா நிறுவனத்துடன் முன்பே வியாபாரத் தொடர்பு இருந்ததென்றும், ஒரு விற்பனையாளர் செய்த குளறுபடியினால், "இங்கே தலைகாட்ட வேண்டாம்!" என்று சொல்லி இருக்கிறார்கள் என்பதையும் அறிந்தேன்!

நான் தெரிந்து கொண்ட வியாபார நுணுக்கம்: முதலில் உன் பொருளைப் பற்றிப் பேசாதே. அவர்களுடைய தேவையை உணர்ந்து கொள். அதைப் பூர்த்தி செய்ய முடியுமா பார்!" என்பதுதான்.

**ம**ற்றோர் சம்பவம்:

ஒரு சமயம் பால், வெண்ணெய் பதனிடும் ஒரு பெரும் நிறுவனத்திற்குச் சென்றேன். பல முறை சென்றிருக்கிறேன். அவர்களுடன் எனக்கு நல்ல பரிச்சயம், பிரியம் உண்டு. அந்த நிறுவனத்தின் உற்பத்திப் பிரிவின் நிர்வாகி என்னைத் தம் அறைக்கு அழைத்துச் சென்றார். அவருக்கு என் படிப்பு அனுபவம், எல்லாம் தெரியும்.

"இதோ பார், நெப்ராஸ்கா மாநிலத்தில், தயிரை பவுடராக்கும் ஒரு நிறுவனம் விலைக்கு வந்திருக்கிறது. வாங்குவதாக இருக்கிறோம். அதை நீ நிர்வகிக்க வர முடியுமா?" என்றார்.

அப்படி அவர்கள் என்னை நினைத்து, என் மீது நம்பிக்கை வைத்திருப்பது எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. மிகப் பெருமையாக இருந்தது.

இரண்டு வாரம் கழித்து நான் அடுத்த மாநிலத்தில் என் விற்பனைப் பகுதியில் உள்ள மற்ற பாதியில் உள்ள ஒரு பெரிய பால் பவுடர் செய்யும் நிறுவனத்திற்கு விற்பனை விஷயமாக - (சகஜமான விஜயம்) போயிருந்தேன். அவர் என்னை "வாருங்கள்! மதிய விருந்து சாப்பிடுவோம்" என்று அந்த ஊரில் உள்ள பணக்காரர்கள் கூடும் (Country Club) நகர சங்க விருந்தினர் கட்டடத்திற்கு அழைத்துச் சென்றார்.

என்னால் நம்ப முடியவில்லை; சொன்னார். "முத்து! நெப்ராஸ்காவில் ஒரு நல்ல கம்பெனியைப் பார்த்துவிட்டு வந்தேன். அது எங்கள் நிறுவனத்தின் பொருள்களுடன், செய்முறைகளுடன் தொடர்பு கொண்டது. அங்கே 'பட்டர் மில்க் பவுடர்' மோர்ப் பவுடர், செய்கிறார்கள். அதைப் பார்த்ததும் எனக்கு உன் நினைவுதான் வந்தது. நீ வருவதாக இருந்தால் மட்டுமே நான் அதை எடுத்துக் கொள்வதாக இருக்கிறேன்!" என்றார்.

எனக்கு இன்ப அதிர்ச்சி. இப்படி எங்கேயோ உள்ள இரண்டு பேர் ஒரே தொழிலை வாங்க நம்மை விரும்பி, அழைக்கிறார்களே என்ற மலைப்பும், பெருமையும் என்னுள் பிடிபடவில்லை.

அதாவது விற்பனை செய்யப் போகுமிடத்தில் அங்கே நான் அவர்களுடன், விற்பனையைக் கடந்து, அவர்களுடைய மொத்த தொழில் பற்றியும் அதன் வளர்ச்சி பற்றியும் நாட்டின் தொழில் நிலைமை பற்றியும் - பல விஷயங்களைப் பேசுவேன். நாம் பேசுவதில் அர்த்தம் இருக்கும்போது அவர்கள் ஆர்வத்துடன் கேட்பார்கள். நீங்கள் வெறும் விற்பனையாளர்தான். ஆனால் விற்பனையாளராக மட்டுமே இருக்க வேண்டியதில்லை! உண்மையில் தொழிலில் ஈடுபடும், ஆர்வமும் இருக்குமானால், வாய்ப்புக்கள் தானே வரும். நிறைய!

நான் அந்த நிறுவனத்தின் நிர்வாகத்தை எடுத்துக் கொண்டேனா? இல்லை, அதை விடப் பெரிய ஒரு நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாகப் போய்ச் சேர்ந்தேன்! எப்போது? ஓராண்டு விற்பனையாளராகப் பணியாற்றி முடிவதற்குள்!

(தொடரும்)



**''கம்பவுண்டருக்கு படிச்சுட்டு டாக்டரா பிராக்டிஸ் பண்ண முடியுமா, டாக்டர்?''**

**''நர்சிங் படிச்ச நானே டாக்டரா பிராக்டிஸ் செய்யும் போது, கம்பவுண்டரால் முடியாதா என்ன? நிச்சயம் முடியும்!''**

**— ராஜிராதா**

# நீங்கள் கேட்டவை — தராசு

● தி. சந்தானம், சென்னை - 35

? 'ஜெய் ஜவான்', 'ஜெய் கிஸா'னோடு, 'ஜெய் விஞ்ஞான்' என்று சேர்த்துக் கொண்டார் வாஜ்பேயி... 'ஜெய் லலிதா' என்று சொல்லியிருந்தால் இன்னும் பொருத்தமாயிருக்குமோ?

! அது என்னத்திற்கு? அதான் பாரதிய ஜெய லலிதா பார்டி என்று (பி.ஜே.பி.) பெயரி லேயே கோஷம் எழுப்பியாச்சே!

● ஆர். அஜிதா, கம்பம்.

? முதல்வர் கருணாநிதியின் பவள விழாவை முன்னிட்டு ஏழு கோடி ரூபா யில் மரம் வளர்ப்புத் திட்டம் தமிழகம் முழுவதும் விரிவுபடுத்தப்படும் என்று அமைச்சர் வீரபாண்டி ஆறுமுகம் கூறி யிருப்பது குறித்து?

! விஷயம் தெரிஞ்சவங்க பூந்து விளையாட லாம்!

● பெ. பொன்ராஜ பாண்டி, மதுரை - 10

? தமிழக அரசின் புதிய தீவிரவாத தடுப்புச் சட்டம் பற்றி?

! மிகக் கடுமையான சட்டம்தான். தனிமனித உரிமைக்கு ஆபத்து ஏற்படுத்தக் கூடியதும் கூட... ஆனால் இன்றைய சூழலுக்குத் தேவையானது. பொறுப்புடன் கை யாளப்பட வேண்டும். இல்லை யெனில் குண்டு வெடிப்புகளால் ஏற் படக் கூடிய அவப்பெயரைவிட அதிக மான கெட்ட பெயரை ஆட்சியும் ஆளுங்கட்சியும் அடையும்.

● வி. பிரசன்ன கிருஷ்ணன், சென்னை - 17.

? நீங்கள் தரும் ஒரேயொரு ஆலோ சனையை மட்டும் சு. சுவாமி ஏற் பார் என்றால், என்ன ஆலோசனை தருவீர்?

! அரசியல் துறவறம் மேற்கொண்டு மக்களுக்கு நல்லது செய்யுங்கள்!

● எம். ராஜலட்சுமி, மதுரை - 10

? நமது தேசிய விளையாட்டை நினைக்கும் போது தலைகுனிய வேண்டியுள்ளதே?

! உண்மையில் ஹாக்கி இந்திய விளை யாட்டே அல்ல. ஹாக்கியில் வெற்றி பெற்று வந்தபோது அதை வசதியாக தேசிய விளையாட்டாக்கி னோம். இனி கபடியில் வேணு மானால் ஒரு கை பார்க்கலாமே! எதில் வெற்றி பெறுகிறோமோ அதை தேசிய விளையாட்டாக்கி னால் ஆச்சு!

● க. சந்தானம், பவித்திர மாணிக்கம்.

? ஆர். எம். வீரப்பன், சந்தன வீரப்பன் - ஒப்பிடுக?

! கண்ணில் படாமல் இருக்கிறார்கள்; காலம் கனியக் காத்திருக்கிறார்கள். இருவரின் ஒரே நம்பிக்கை கலைஞர்தான்!

● வை. வெங்கடேசன், விழுப்புரம்.

? ஜூன் - ஜூலை மாதத்தில் தமிழகத்தில் தேர்தல் வரும் என்று ராம்தாஸ் கூறு கிறாரே?

! பாவம், அந்த வட்டாரத்தில் ரொம்ப ஆர்வ மாக எதிர்பார்க்கப்பட்ட தமிழக ஆளுனர் - அத்வானி சந்திப்பு புஸ்வாணமாகிவிட்டதே!

● திலீப், திருச்சி - 14.

? 'எதிலும் சஸ்பென்ஸ் இருக்கணும். அப் போதுதான் வாழ்க்கையில் சுவாரஸ்யம் இருக்கும்' என்கிறாரே ஜெ?

! அதனால்தான் தமக்கெதிரான வழக்குகளில் ஒவ்வொரு கட்டத்திலும் தடை வாங்கி, வாங்கி சஸ்பென்ஸை அதிகப்படுத்துகிறார்!

● வி.பி. மகராசி, மதுரை - 16

? முன்னாள் காங்கிரஸ் எம்.பி. அன்பரசு மகன், பாம்பைச் சுட முயன்று ஆறு பேரைச் சுட்டுக் காயப்படுத்தியுள்ளது பற்றி?

! துப்பாக்கி கலாசாரம் அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு, அயல்நாட்டு டீவி. சேனல்கள் மூலம் இறக்குமதி ஆகிக்கொண்டிருக்கிற ஆபத்துக்கு ஆரம்ப அறிகுறி.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி.

? அரசியல் கட்சிகள் அடிக்கடி செயற் குழுவைக் கூட்ட காரணம் என்ன?

**'சஸ்பென்ஸ்தான் சுவாரஸ்யம்' என்கிறாரே ஜெ...?**

• கூடுதல் வருத்தம்!



• அவசிய ஆலோசனை!



• ஏழு கோடி அறிவிப்பு!



! செயல்பட்டுக் கொண்டுதான் இருக்கிறோமா என்பதில் அடிக்கடி சந்தேகம் வந்து விடுகிறதோ என்னவோ?!

● *கே.கே. வெங்கடேசன், சென்னை - 58*

***? பாலிதீன் பைகளில் விற்கப்படும் தரம் குறைந்த நீரைக் குடிக்க வேண்டாம் என்ற சென்னை மாநகராட்சி வேண்டுகோள் குறித்து?***

! குடி தண்ணீருக்குக் கூடக் காசு என்ற நிலை எப்போது ஏற்பட்டு விட்டதோ அப்போதே நம்மவர்கள் அதிலும் கலப்படத்துக்கு தயாராகி விட்டிருப்பார்கள். வழக்கம் போல் அரசு நடவடிக்கை லஞ்ச ஊழலில் தான் முடியும். நுகர்வோர்தான் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

● *ஆர். சரோஜா, நாட்டரசன்கோட்டை.*

***? "அணுகுண்டு சம்பந்தமாக அமைச்சர்களின் பேச்சு, நாட்டைப் போர் முனைக்கு இழுத்துச் செல்கிறது என்று குஜ்ரால் கூறியுள்ளாரே?***

! ரொம்ப சரியான வார்த்தை. அதிலும், கடுமையாக முயன்று குஜ்ரால் கொள்கை என்று உலக அளவில் பேசப்படும் நடுநிலைப் போக்கை நிலைப்படுத்தியவருக்கு இன்றைய நிகழ்ச்சிகள் வேதனைதான்!



* சஸ்பென்ஸோ சஸ்பென்ஸ்!

● *ஆரூர் அரசு, இலவங்கார்குடி* ❑

***? அணுகுண்டு வெடிப்பை பெரும்பாலோர் வரவேற்றுப் பாராட்டும் போது கல்கி எதிர்த்து எழுதுவது ஏன்?***

! யாரை எச்சரிக்கறதுக்காக வெடிச்சமோ அவங்களும் நம்மைவிட அதிகமா வெடிச்சிட்டாங்களே. ஒரே விதமான ஆயுதம் இரண்டு பேர்கிட்டேயும் இருக்கறதாலே யாருக்கு என்ன பாதுகாப்பு கிடைச்சுட முடியும்? வீண் செலவும் பொருளாதாரப் பின்னடைவும் தான் நிகர பலன்.

● *சக்தி சரவணன், மோகனூர்.*

***? கார் வாங்க லோன் வேண்டும் என்று எம்.எல்.ஏக்கள் கேட்டிருக்கிறார்களே? கார் இல்லாத எம்.எல்.ஏ. உண்டா?***

! இன்னொரு கார்தான் வாங்க வேண்டும் என்று சட்டமா இருக்கிறது!

● *டீ.எஸ்.டீ. ராயன், மயிலாடுதுறை - 1*

***? இந்தியாவின் அணு ஆயுத சோதனைக்கும் பாகிஸ்தான் அணு ஆயுத சோதனைக்கும் என்ன வித்தியாசம்?***



* நம்பிக்கையுடன்....



* ....காத்திருக்கிறார்!

! இது சீண்டுதல்; அது சீறுதல்.

● *என். பாலகிருஷ்ணன், மதுரை - 1*

***? மேஜிக் நிகழ்ச்சிகளை விரும்பிப் பார்ப்பதுண்டா?***

! ஆளை வெட்டி இரண்டாக்குவதும் பெண்ணைப் பெட்டியில் வைத்து கத்திகளால் குத்துவதும் போஸ்டரில் பார்க்கவே அருவருப்பாயிருக்கிறதே! அற்புதமான 'மாஜிக்' உங்கள் வீட்டு மொட்டை மாடியிலிருந்து பார்க்கலாம். அதிகாலை, இருள் பிரியும் நேரம் வானை நோக்கியபடி நின்றால் தெரிகிற வண்ண ஜாலங்கள்!

● *மு. இரவிச்சந்திரன், சேலம் - 9*

***? பெண்கள் போதிய விழிப்புணர்ச்சியைப் பெற்றுள்ளதால் அவர்களுக்கு எதிரான கொடுமைகள் குறைந்துள்ளனவா?***

! விழிப்புணர்ச்சியால் மட்டும் பெண்களுக்கெதிரான கொடுமைகள் குறைந்து விடாது. முன்பு 'இதுதான் நம் கொடுப்பினை' என்று நினைத்தார்கள். இப்போது 'இது கொடுமை' என்று உணர ஆரம்பித்திருக்கிறார்கள். அவ்வளவுதான் வித்தியாசம். குற்றங்கள் குறைய வேண்டுமானால், தவறிழைப்பவர்கள் மீது சட்டம் சீறிப் பாய வேண்டும்; உள்ளத்தைப் பண்படுத்தும் கல்வியும் தரப்பட வேண்டும். ◉

**❑ ரூ. 50 பரிசு பெறுபவர்:**
**ஆரூர் அரசு,**
**3/28, காமராஜ் நகர்,**
**பவித்தரமாணிக்கம்,**
**இலவங்கார்குடி - 610 051.**

**மதுரையில் கடந்த மே 31-ம் தேதி ஞாயிறு மாலை கே.ஜே. யேசுதாஸும், எஸ். பி. பாலசுப்ரமணியமும் பங்கேற்ற 'லக்ஷ்மண் ஸ்ருதி' இசைக் கச்சேரி மருத்துவக் கல்லூரி மைதானத்தில் நடைபெற்றது. அதிலிருந்து சில செய்தித் துளிகள்...**

● 1500 ரூபாய் வரை டிக்கெட் போட்டு இவ்வளவு மக்கள் கூடியிருந்த அனுபவம் யேசுதாஸுக்கும், எஸ்.பி.பிக்கும் கூட இதுவே முதல் அனுபவமாயிருக்கும். 25 ஆயிரம் பேர் கூடிய பிரம்மாண்ட இசை நிகழ்ச்சி மூலம் லக்ஷ்மண் ஸ்ருதி குழுவுக்கு மதுரை வட்டாரங்களில் மிகப் பெரிய பாப்புலாரிட்டி கிடைத்து விட்டது.

● இந்தியாவிலேயே ஒரு (கட்டண) இசை நிகழ்ச்சிக்கு சுமார் 10 ஆயிரம் பேர் அமருமளவிற்கு காலரி அமைக்கப்பட்டது இதுதான் முதல் முறையாம். அதே போல் தேவையான அளவு ஃபைபர் நாற்காலிகள் மதுரையிலேயே இல்லை என்று வெளியூர்களிலிருந்தெல்லாம் வாடகை நாற்காலிகள் வந்து இறங்கியிருக்கின்றன!

● நிகழ்ச்சிக்கு மூன்று நாட்களுக்கு முன்னால் திடீரென ஷூட்டிங்கின் போது எஸ்.பி.பிக்கு கால் முறிவு ஏற்பட்டு விட்டதால் எஸ்.பி.பி.யின் வருகை சந்தேகத்திற்குரியதாக ஆகி விட்டதாம். உடனே பறந்து போன லக்ஷ்மண், டிக்கெட் விற்பனை கணக்கையும், மேடை மற்றும் கேலரி அமைப்புகளைக் காட்டும் பிரம்மாண்டமான ஃபோட்டோக்களை



யும் எடுத்துக் காட்டி கதறி விட்டாராம். இதை மேடையிலேயே கூறி நொண்டியபடி வந்த எஸ்.பி.பி.யின் கால்களில் விழுந்து கும்பிட்டார்.

● யேசுதாஸ் இந்த நிகழ்ச்சிக்காகவே ஃப்ளாரிடா (U.S.A.) விலிருந்து இந்தியா வந்ததாக மேடையில் அறிவித்தார்கள். 'இந்த இனிய வேளையைத் தந்த இறைவனுக்கு நன்றி' என்று துவங்கி 'நாமெல்லோரும் அன்புக்கு மட்டும் அடிமையாகவே இருக்க வேண்டும்' என்ற வேண்டுகோளோடு 'அன்புக்கு நான்

அடிமை' என்ற பாடலைப் பாடி கைத் தட்டல்களை குவித்தார். ஆனால் 'அம்மா என்றழைக்காத...' என்ற அடுத்த பாடலை முழுக்கவே ராகம் தவறிப் பாடி, கேலரியில் இருந்தவர்களுக்குப் பாடுவது யேசுதாஸ்தானா என்ற ஐயத்தைக் கிளப்பி விட்டார்.

• எஸ்.பி.பி. பாடுவதற்கு முன் யேசுதாஸை 'அண்ணன் அண்ணன்...' என்று ஏகத்துக்குப் புகழ்ந்து தள்ளினார். "நான் வராமல் போயிருந்தால் அடிச்சிருப்பீங்களா?" என்று கூட்டத்தைப் பார்த்துக் கேட்க, கூட்டம் "ஆமாம்" என்று கத்த... "சில தவிர்க்க முடியாத சமயங்களில் அது மாதிரி நடந்து விட்டால் பொறுமை காட்டுங்கள்" என்று கேட்டுக் கொண்டார். அவரும் அவ்வப்போது கோரஸ்களையும், மியூசிக் பிட்டுகளையும் தவிர்த்துப் பாடி இசைக் குழுவை திணறடித்தார்.

'மிமிக்ரி ஷோ'வில் மதுரையே அதிருமளவு கைத்தட்டல் பெற்றார்கள்.

• திடீரென நடிகர் ஜெய்சங்கர் மேடையேறி, "எங்களைப் போன்ற நல்ல கலைஞர்களை ஊக்குவிக்கும் மதுரை மக்கள் மோசமான அரசியல்வாதிகளுக்கும் வோட்டுப் போட்டு அனுப்புவதுதான் கொடுமை..." என்று (சுப்ரமணிய சுவாமி...?) துவங்கி கன்னாபின்னா என்று பேச ஆரம்பித்து விட்டார்! ஆமாம், ஜெய்சங்கருக்கு என்ன ஆச்சு?

• மதுரை ரசிகர்கள் ரவுடித்தனம் பண்ணுவார்கள் என்ற எதிர்பார்ப்போடுதான் எல்லோரும் வந்தார்கள். இவ்வளவு கூட்டம் கூடியும் எந்த அசம்பாவிதமுமின்றி விழா முடிந்ததை மேடையில் எல்லோருமே மாய்ந்து, மாய்ந்து பாராட்டினார்கள்.

## யேசுதாஸ் — எஸ்.பி.பி. கலைவிழா!

# ஜெய்சங்கருக்கு என்ன ஆச்சு?

• இரு சிகரங்கள் இணைந்து பாடும் டென்ஷனோ, என்னவோ லக்ஷ்மண் ஸ்ருதியின் இசை சீராக இல்லாமல் ஆங்காங்கே குட்டிக்கரணம் அடித்ததைக் குறிப்பிட்டே ஆக வேண்டும்.

• 'காட்டுக் குயிலு மனசுக்குள்ளே...' என்ற பாடலை இரு பெரும் பாடகர்கள் இணைந்து பாடி முடிந்ததும் 'சூபர்' என கூட்டம் எழுந்து கலைய முற்பட்டது. அவர்களை பழையபடி நாற்காலியில் கட்டிப் போட்ட பெருமை நடிகர் சின்னி ஜெயந்த் மற்றும் அவரது நண்பர் கோபியையே சாரும். அரை மணி நேர

• விழாவை அந்தளவு பக்கா ப்ளானிங்குடன் அட்டகாசமாக ஏற்பாடு பண்ணியிருந்த விழாக் குழுவினர் பாராட்டுக்குரியவர்கள்.

**டெய்ல் பீஸ் :**

விழாவுக்கான மொத்த செலவு 16 லகரமாம். அதில் யேசுதாஸுக்கு மூணே காலாம். எஸ்.பி.பி.க்கு ஒன்னே முக்காலாம்.

தொகுப்பு : **கிரண்நியூஸ்**

படம் நன்றி : **தினபூமி**

# வட்டமேஜை

✉ தி.மு.க.வை எவ்வளவு துல்லியமாக எடை போட்டிருக்கிறார் சோ.பா! "ஆட்சிக் கலைப்பு நடக்கிறதோ இல்லையோ, தி.மு.க. மனரீதியாக பாதிக்கப்பட்டிருக்கிறது" என்ற வைர வரிகளைத்தான் சொல்கிறேன்!
தூத்துக்குடி, கே. சுதர்ஸன்.

✉ சோ.பாவின் பேட்டியில் அக்னி நட்சத்திர வெயிலின் உக்கிரம் தெரிந்தது. எலக்ஷன் வந்தா கூலாயிடுவாரோ?
மயிலாடுதுறை, ஜே. ரஜினி ராம்கி.

✉ எனக்கு இன்னும் 24 வயது கூட ஆகலை என்று (மே–98 வருடம்) உண்மை சொல்லியிருக்கும் காஜோலின் இந்தச் செய்தியை சுமி செக்ஷனுக்கு ஜோக்காக அனுப்பி வையுங்கள்!
ஆலம்பாளையம், கே. ரமேஷ்.

✉ 'யானை தானே தன் தலையில் சேற்றை வாரி இறைத்தது' போன்று, பா.ஜ.க. அரசு அணுகுண்டு

## அசத்தும் பேட்டிகள்!

வெடித்துச் சோதனை நிகழ்த்தித் தீராத சோதனைக்குள்ளாயிருப்பதை நயமாகக் கண்டித்து இருக்கிறீர்கள். அவ்வேதனையினின்று மீள, ஆற்ற வேண்டிய அவசர – அவசியப் பணிகளை நிகழ்த்தவும், அநாகரிக மிரட்டல்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கவும் தங்கள் தலையங்கம் தெளிவாக வழிகாட்டுகிறது!
இனாம் மணியாச்சி, ச.ஆ. கேசவன்.

✉ யம்மாடி, சூப்பர் சுமி! வர வர உன்னோட வொள்ளுத்தனம் தாங்கலைப்பா. என்ன பண்றது? எங்களுக்குத் தெரியாத பல சேதிகளை எல்லாம் எங்களுக்குச் சொல்றியே! அதுக்காகப் பொறுத்துக்கறோம். நறநற அது எப்டி... எப்டி... பாரதிராஜாவுக்கே 'நோ'வா? அடி... ஆத்தி... நீயே மெச்சிக்காதே. தாங்க மெச்சணும் என்னா?
சர்க்கார் கொல்லப்பட்டி, பெரு. இளங்கம்பன்.

✉ இலவச மின்சாரத்தைப் பற்றிப் பேசி நம் தமிழக அறிவு ஜீவிகள் (அரசியல்வாதிகள்) மக்களை குழப்பிக் கொண்டிருக்கையில் உண்மை நிலை என்ன என்பதை கல்கி வெளிச்சம் போட்டுக் காட்டியது பாராட்டும்படியான சிறப்பம்சமாகும்.
பூனாம்பாளையம், ஆர். பி. ஜெயச்சந்திரன்.

✉ மாஸ்டர் மாதன் சமாளிப்பிலும் மாஸ்டர் தான்! ஜெயலலிதாவின் வாஜ்பாய் பற்றிய பேச்சு, கடித விவகாரம் போன்ற கேள்விகளுக்குப் பிடிகொடுக்காமலேயே பதில் சொல்லி விட்டாரே!
கமுதி, ராஜி.

✉ 'இது ஐடியா வாரம்' சன் டீவி.யை நையாண்டி செய்வது போல இருந்தாலும் அருமையான கற்பனையை ரசிக்க முடிந்தது!
திருச்சி – 14, ராஜி ராதா.

✉ இன்டர்நெட்டில் தமிழ் சினிமா! சினிமா ரசிகர்களுக்குக் கிடைத்த அரிய வரப்பிரசாதம் தான்!
மதுரை – 10,
எம். சுபத்திரா.

✉ சுடுகாட்டில் ஊழல் செய்ய ஒரு சாரார் என்றால், உபயோகமான நந்தவனம் ஆக்க மற்றொரு சாரார் எக்ஸ்நோராவின் பணி பாராட்டுக்குரியது!
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ வண்ணத் தாரகையோ, வானில் வந்த முழு நிலவோ, பேரழகி, என் தேவதை, என் உள்ளம் கவர்ந்த காஜோலின் படத்தைக் கல்கியின் அட்டையில் பார்த்துப் பரவசமானேன். அப்படியே பிரேம் செய்து விட்டேன்.
சென்னை – 1, எஸ். ஆனந்த் பிரகாஷ்.

✉ மீண்டும் இந்தியா அணுகுண்டு வெடித்தது போல், மீண்டும் காஜோல் பிரவேசம் என்று ரம்பா (சீனா)வையும், சிம்ரா(பாக்)னையும் அதிர்ச்சியடைய வைத்து விட்டீர்களே!
கோவை – 14, ஏ. எஸ். இராமசாமி.

✉ வாரம் ஒரு கிரிக்கெட் வீரரின் பேட்டியைப் போட்டு அசத்தி விடுகிறீர்கள். அதிலும் இந்த வார டெண்டுல்கரின் பேட்டி மிகவும் அருமை!
பூனாம்பாளையம்,
கே. எம். சுப்பிரமணியன்.



●● "தி.மு.க. - த.மா.கா. உறவு வலிமை பெற்று விட்டது என்பதற்கு அடையாளமாகத்தான் இந்தச் சங்கிலியை மூப்பனார் அணிவித்ததாகக் கருதுகிறேன். உறவு முறிந்து விடும் என்ற வதந்

# தங்கமயமான பவள விழா!

திக்கு இந்தப் பவள விழா முற்றுப்புள்ளி வைத்து விட்டது" என்று மகிழ்ச்சியுடன் சொன்னார், கலைஞர். இடம் : மெரீனா கடற்கரை பவள விழா கூட்டம். பத்துக்கும் மேற்பட்ட பேச்சாளர்கள். திருத்தணியிலிருந்து குமரி வரை உள்ள பல ஊர்களிலிருந்து, உடன்பிறப்புக்கள் ஆஜர். 'கழகம் ஒரே குடும்பம்' என்ற அடைமொழிக்கு ஏற்ப, மனைவி குழந்தைகளுடன் கழகப் பிரமுகர்கள். பிரியாணி பொட்டலங்களுக்கு ஏகக் கிராக்கி. வாழ்க, சென்னைக் குடிநீர்! பல இடங்களில் குடிநீருடன் ஸின்டெக்ஸ் தொட்டி. கடற்கரையிலேயே வேர்க்கும் அளவுக்கு வெப்பநிலை இருந்தாலும் உடன்பிறப்புக்களின் மனமெல்லாம் ஊட்டி. புதிதாகத் துவங்கப்பட்ட டைட்டானிக் ஒயின்ஸிலும் கூட்டம் அலைமோதியது.

●● மேடையின் புதுமையைப் பற்றிப் புகழாதவர்களே இல்லை. சிப்பிக்குள் முத்து. முத்திலிருந்து சினிமா ஹீரோ பாணியில் தலைவர் வெளிவந்தார். காலை மணி நாலரையிலிருந்து பவள விழா நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டதாலோ என்னவோ, முகத்தில் களைப்பின் சாயல் தெரிந்தது. ஆலிவர் சாலை வீட்டில் மரக்கன்று நட்டது, பின்னர் கோபாலபுரம் வீட்டில் தாய், தந்தை படங்களுக்கு மாலை, அண்ணா சமாதிக்கு விசிட், பெரியார் சிலைக்கு மாலை, கலைவாணர் அரங்கில் உடன்பிறப்புக்களின் வாழ்த்துக்கள் என்று தொடர்ந்து நிகழ்ச்சிகள். கலைவாணர் அரங்க மேடையில் வைக்கப்பட்டிருந்த உண்டியலில் நான்கு லட்ச ரூபாய் தான் கலெக்ஷன். ஏவி.எம். நிறுவனங்களிடமிருந்து மூன்றே முக்கால் லட்சம் வந்ததால் ஏழு லட்சமாகத் தொகை உயர்ந்தது. எல்லாம் முதலமைச்சர் நிவாரண நிதியில் சேர்க்கப்பட்டது.

●● கலைவாணர் அரங்கத்திலேயே கழக உடன்பிறப்புகள் எதிர்பார்த்தது ரஜினிகாந்த்தை. ஆனால் மனிதர் ஆப்செண்ட். மாலை கடற்கரை கூட்டத்தில், ரஜினியின் வாழ்த்துக்களோடு வந்து பூச்செண்டு கொடுத்து விட்டுப் போனார் சத்திய நாராயணா. மேடையின் வலதுபுறம் நூறு அடி தூரத்தில் தாடியுடன் 25 அடி உயர பிளாஸ்டர் ஆப் பாரீஸ் சிலை. "யாருப்பா அது பெரியாரா?" என்று உடன்பிறப்புக்கள் கேட்டுக் கொண்டு இருந்தனர். அது திருவள்ளுவர். குமரி முனையில் வைக்கப் போகும் சிலையின் மாடல்.

●● கரையிலிருந்து 200 அடி தூரத்தில் மூன்று படகுகளில் உதயசூரியன் மற்றும் கலைஞர் ஸீரியல் லைட்டிங். அலைகளின் தாலாட்டில் படகு ஆடிக் கொண்டே இருக்க, காட்சி அற்புதமாக இருந்தது.

●● 'ஆட்சிக் கலைப்பு' விவகாரம்தான் பேச்சாளர்களின் முக்கிய பாயிண்ட். குஜ்ராலிலிருந்து, பாலசுந்தரம் வரை அதைத் தொட்டுக் காட்டாதவர்கள் இல்லை. "கலைஞர் எவ்வளவோ சோதனைகளைத் தாண்டி வந்துள்ளார். இன்னமும் கேட்டால் ஒவ்வொரு தடங்கலுக்குப் பிறகுதான் உற்சாகமாக எழுந்து நிற்கிறார். எனவே ஆட்சிக் கலைப்பு என்கிற பூச்சாண்டிகளுக்கெல்லாம் நாங்கள் பயப்பட மாட்டோம்" என்று உணர்ச்சிக் கொந்தளிப்புடன் நம்மிடம் சொன்னார் ஆவடி கிருஷ்ணன். மேடையிலிருந்து, சுமார் 500 அடி வரை நெருக்கியடித்து உட்கார்ந்திருந்தது கூட்டம். அதன் பிறகு முடிச்சு, முடிச்சாக இடைவெளியுடன் உட்கார்ந்திருந்தார்கள்; வேர்க்கடலை, பான்பராக் பையன்களுக்கு வசதியாக.

●● மூப்பனாரின் 20 பவுன் சங்கிலியை தூக்கியடிக்கும்விதமாக 75 பவுன் சங்கிலியை அணிவித்தவர் தி. நகர் பகுதி செயலாளர் ஜெ. அன்பழகன். தங்கமயமான பவள விழாதான்!

— கௌசி

## நடக்குமென்பார், நடக்கும்!





**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

விட்டுக் குடுத்துப் போற சுபாவத்தை வளர்த்துக்க வேண்டிய கட்டாயத்துல இப்ப இருக்கீங்க. வாழ்க்கைத் துணைவர்/துணைவியோட மனசு புரிஞ்சி, அனுசரணையா நடந்துக்கிட்டீங்கன்னா, சிக்கலில்லாத, சீரான வண்டியோட்டம் சாத்தியம். அநாவசியமான செலவுகளைத் தவிர்க்கணும். அலைச்சலையும்தான். தொண்டைல புண் வந்து படுத்தலாம். தண்ணி விஷயத்துல கவனமா இருங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

கொஞ்சம் பிளான் பண்ணி செஞ்சீங்கன்னா, எந்தக் காரியமும் சக்ஸஸ் ஆகும். நண்பர்களோட உதவி உண்டு. உணவு விஷயத்துல எச்சரிக்கையா இருங்க. அஜீரணக் கோளாறு வரலாம். நீண்ட தூரப் பிரயாணம் ஒண்ணு வரலாம். அரசு ஊழியர்களுக்கு இது வளமான காலகட்டம். நல்லபேர், அரியர்ஸ் வரவுன்னு ஓஹோதான்! தாயார் உடல் நலத்துல கவனம் செலுத்துங்க. பொதுவா, வீண் விவகாரங்கள்ல தலையிடாம இருந்தா பல வகையிலயும் நல்லது!



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

பண வரவு அமோகமா இருக்கும். கல்வியாளர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் இது பிரகாசமான வாரம். வீட்டுல சுப காரியங்கள் ஏதாவது நடக்கலாம். ஒரு தொலைபேசித் தகவல் உங்களைக் குஷிப்படுத்தும். உஷ்ணாதிக்கம் காரணமா வயிறு கொஞ்சம் பிராப்ளம் தரலாம். கவனம்! பெண்களுக்குக் கல்யாண யோகம் கூடி வர்ற சமயம் இது.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

பயணத்துல எச்சரிக்கையா இருங்க. சிறு விபத்துகளுக்கு சான்ஸ் இருக்கு. அதே மாதிரி பண விஷயத்துலயும் பிக்பாக்கெட்டில் இழக்க வேண்டி வரலாம். யாருக்கும் வாக்குறுதி கொடுக்காதீங்க. ஜாமீன் கையெழுத்துப் போடாதீங்க. சிலருக்கு விருந்து கேளிக்கைன்னு அனுபவிக்க சான்ஸ் வரலாம். ஆனா நண்பர்களோட அநாவசிய வாக்கு வாதங்கள் வேணாம். உறவினர்களால சிறு தொல்லை வரலாம். அக்கம் பக்கத்து வீட்டுக்காரங்களோடவும் மனஸ்தாபம் வரலாம். பேச்சைக் குறைச்சா பலன் நிச்சயம்.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

வெளியூர் டிரான்ஸ்ஃபர் வரலாம். இடமாறுதல், லேசான பண, மனக் கஷ்டத்தைத் தரும். ஆனா, பின்னால சரியாப் போயிடும். வர்த்தகத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு ஆதாயமான காலகட்டம். பெண்களுக்குப் புதிய பொருள் சேர்க்கை உண்டு. நண்பர்களால சமயத்துல உதவி கிடைக்கும். வயசானவங்களுக்குப் புண்ணியத் தல யாத்திரை வாய்ப்பு கூடிவரும்.



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

சூழ்நிலை கொஞ்சம் மாறி இருக்கு. போன வாரம் மாதிரி அவ்வளோ கஷ்டப்பட வேண்டிவராது. பொருளாதார நிலைல லேசான அபிவிருத்தி இருக்கும். மனைவி - கணவன் உறவு சுமுகமா இருக்கும். சிலருக்கு வெளிநாடு போற வாய்ப்பு கதவைத் தட்டும். வராத கடன் பாக்கிகள் வந்து சேரும். ஆபீஸ்ல பக்கத்து சீட் ஆசாமியோட ஏதாவது தகராறு வரலாம். எச்சரிக்கையா

இருங்க.

**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*



சினிமாக்காரங்களுக்கு இந்த வாரம் ஓஹோன்னு இருக்கும். புதிய பட ஒப்பந்தங்கள் நடக்கும். மற்ற துறைக்காரங்களும் கஷ்டமில்லாத, சீரான வாழ்க்கை யோட்டம் பார்க்கலாம். பெண்களுக்கு இது நகை, புடைவை வாரம்! வீட்டுக்காரங்க பர்ஸை காலி பண்ணுவீங்க. பையன்கள் படிப்புல தீவிர கவனம் செலுத்தணும். விளையாட்டு வீரர்களுக்கு ஏற்றமான வாரம் இது.

**விருச்சிகம் :** *(விசாகம் 4 - ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*



மனைவி உடல் நலத்துல கவனமா இருங்க, வீட்டுல சூழ்நிலை இறுக்கமா இருந்த நிலைமையெல்லாம் இனிமே இல்லை! பொறுப்புகளைப் பகிர்ந்து குடுத்துட்டு நீங்க ஹாயா இருக்கலாம். மூத்த மகனால ஏதோ ஒரு நன்மை நடக்கப் போவுது. பணப் பிரச்னை கிடையவே கிடையாது. ஆனா, உடல் நலன் ஜாக்கிரதை! லேசா வயிறு பிராப்ளம் வரலாம்.

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*



வீண் செலவுகளைத் தவிர்க்கணும். ஊர் சுற்றல் வேணாம். மனக் குழப்பங்களுக்கு இடம் குடுக்காதீங்க. வாலிபர்களுக்கு வீட்டுல திருமணப் பேச்சு தொடங்கலாம். உத்யோக ரீதில சிலருக்குத் தொலை தூர இடமாறுதல் இருக்கலாம். கலைத் துறையினருக்கு சுமாரான நேரம்தான் இது. வீண் வம்புகள்ல தலை குடுத்துடாதீங்க.

**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*



உங்க புத்தி சாதுர்யத்தாலயே எந்தப் பிரச்னை வந்தாலும் சமாளிச்சிடுவீங்க. நண்பர்கள் வேற பக்க பலமா இருக்காங்க. அப்புறம் என்ன கவலை? இந்த வாரம் புதிய முதலீடுகள், லாட்டரி, ஷேர் எதுவும் வேண்டாம். கையைக் கடிக்கும். அதே மாதிரி, புதிய முயற்சி எதுவானாலும் கொஞ்சம் தள்ளிப் போட்டுங்க. பெற்றோர் உடல் நலத்துல கவனம் செலுத்துங்க.

**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*



உங்களைப் படுத்திட்டிருந்த உடல் நலக் குறை வெல்லாம் சரியாப் போயிடும். வீட்டுல அமைதியும் மகிழ்ச்சியும் தங்கும். வாரிசுகள் உங்க மனசு குளிர்றாப்பல நடந்துப்பாங்க. பெண்களுக்குப் புதிய ஆடைகள் வாங்கும் யோகம் இருக்கு. கல்லூரி வயசுப் பசங்களுக்குக் காதல் கை கூடும். காதல் கை கூடியவங்களுக்கு - கல்யாணம் கை கூடும்!

**மீனம் :** *(பூரட்டாதி 4 -ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*



பணம், புகழ், செல்வாக்கு எல்லாம் திருப்தியா இருக்கும். சிலருக்கு நீண்ட தூரப் பிரயாணம் ஒண்ணு இருக்கலாம். பெண்கள் பேச்சைக் குறைக்கறது நல்லது. வாக்குவாதங்கள் - விளைவா மனஸ்தாபங்களுக்கு வாய்ப்பு இருக்கு. கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக் துறையைச் சேர்ந்தவங்களுக்கு இது பிரகாசமான வாரம்.



விருச்சிக ராசிக்காரரான மைத்ரேயனுக்கு (பி.ஜே.பி.) பணப் பிரச்னை கிடையவே கிடையாது. பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுத்துட்டு ஹாயா இருக்கலாமாம்!

ஜூன் 10 முதல் 16 வரை

குனிந்து தாடையைப் பிடித்து ஆள்காட்டி விரலிலிருந்த மையை நெற்றியில் தீற்றினாள் கிருஷ்ணவேணி. புருவங்களுக்கு மத்தியில் இறங்கிய அந்த விரலை ஆவலுடன் பிடிக்கப் பறந்தது குழந்தை. வாய் திறந்து, விழி விரித்து, படபடவென்று சின்னக் கால்களால் உதைத்தது!

குழந்தைக்கு மேலாகக் கவிழ்ந்தபடி நெற்றிக்கிட முயன்று கொண்டிருந்த கிருஷ்ணவேணி அந்த அசைவுகளை ரசித்தாள். விரலைப் பிடிக்கும் முயற்சியில் ஒரு விளையாட்டைத் தானே உருவாக்கிக் கொண்டு மகிழ்ந்த குழந்தையை வியந்தாள்.

செக்கச் சிவந்த குட்டிப் பாதங்கள் திரும்பவும் நெஞ்சில் உதைத்தபோது செல்லமாகக் கடிந்து கொண்டாள்.

"ரொம்பத்தான் சேட்டை! இப்படியா அம்மாவை நெஞ்சிலே உதைக்கறது...?"

குரலின் சலுகையை உணர்ந்து கொண்ட குழந்தை கிளி போல் கூவிச் சிரித்து மீண்டும் வேகமாக உதைத்தது.

அகத்திக் கீரையை ஆய்ந்து கொண்டிருந்த தாயம்மாள் இந்த நாடகத்தை ஓரக் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தாள்.

உதையை வாங்கிக் கொள்வதற்காகவே கொஞ்சம் கூடுதலாகக் குனிந்து நெருங்கி கிருஷ்ணவேணி அனுசரிப்பதும், பாதங்களில் பட்ட ஸ்பரிசத்தால் ஏகமாய் குதூகலித்து, குழந்தை இன்னும் வேகமாய் உதைப்பதும்...!

துரைராஜனும் இப்படியேதான் உதைப்பான். அந்த பூப்பந்து மோதல்களை ஏந்திக் கொண்ட மார்புதான் இன்றைக்கு அவன் உதிர்க்கும் அதிர்ச்சியான வார்த்தைகளுக்கும் இடிதாங்கியாக இருக்கிறது...!

இன்னதுக்குத்தான் என்றில்லை... வானிலை மாற்றமோ, வெண்டைக்காய் முற்றலோ, மளிகை பில்லின் சுமையோ, காணாமலடித்த ஐந்நூறு ரூபாய் நோட்டோ... எல்லாவற்றுக்கும் ஒரே தீவிரத்துடன் வெளிப்பட்ட கோபம். இப்படியப்படியென்றில்லாமல், தாயம்மாள் தான் திட்டமிட்டு அந்த நாளின் சந்தோஷத்தைக் குலைத்ததுபோல் தொனிக்கும் பழி சுமத்தல், வார்த்தைகளின் கண்மூடித்தனமான



# உதை

சீதா ரவி

# அணு (குண்டு) செய்திகள்!

1. ''குழந்தைகள் நல்லவிதமாகப் பிறந்து விட்டன'' இந்த வாக்கியத்தின் பொருள் என்ன?

2. இந்தியாவுக்கு முன்னதாக ஆறு நாடுகளுக்கு மேல் வெடிகுண்டுச் சோதனைகள் நடத்தியுள்ளன! இஸ்ரேலும் நடத்தியதாக சந்தேகப்பட வேண்டி உள்ளது. எந்த நாடு இஸ்ரேலின் சோதனைக்கு இடமளித்தது?

3. ஒருவித கவர்ச்சி உடைக்கும் அணு குண்டுச் சோதனைக்கும் ஒரே பெயர். அந்தப் பெயர் என்ன?

4. பிரிட்டன் தனது அணுகுண்டுச் சோதனையை எங்கே நடத்தியது?

5. அமெரிக்கா ''ஒரு அணுகுண்டை'' இழந்தது எப்போது?

6. இஸ்ரேலியர்களுக்கு ஒரு காலகட்டத்தில் யுரேனியம் போதுமான அளவில் கிடைக்க வில்லை. அதற்கு மாற்று என்ன செய்தார் கள்?

7. ஆங்கில - அமெரிக்க அணு ஆய்வுத் திட்டத்திலிருந்த ஒரு விஞ்ஞானி ரகசியமாக ருஷ்ய நாட்டிற்கு முக்கிய தகவல்கள் கிடைக்கச் செய்தார். அவர் பெயர் என்ன?

**விடைகள் :**

1. ஜனாதிபதி ட்ருமனுக்கு - நியூமெக்சிகோ பகுதியில் முதன் முதலாக அணுகுண்டு சோதனை வெற்றிகரமாக நடந்ததென்ற செய்தியைத் தெரிவித்த சங்கேதச் சொற்கள்.

2. இஸ்ரேலியருக்கு தென் ஆப்பிரிக்கா இடமளித்தது.

3. இங்கிலாந்து நாடு நடத்திய அணுகுண்டுச் சோதனையின் பெயர் ''பிகினி''

4. ஆஸ்திரேலியா இடமளித்தது.

5. வான வீதியில் குண்டுகளை தாங்கிச் சென்ற பி 52 விமானம் உடைந்து, இதிலிருந்து ஒரு குண்டு வடக்கு கரோலினா மாநிலத்தின் நீர் சூழ்ந்த பகுதியில் விழுந்து விட்டது.

6. அமெரிக்கா நாட்டிலிருந்து களவாடினார் கள்.

7. கிளாஸ் பியூச். இங்கிலாந்து நாட்டில் தங்கியிருந்த ஜெர்மன் விஞ்ஞானி சிறை தண்டனை முடிந்ததும் கிழக்கு ஜெர்மெனிக் குச் சென்று விட்டார்.

சான்று : இந்துஸ்தான் டைம்ஸ்

தகவல் : கோ. க.

வெளிப்பாடு...

ஒவ்வொரு முறையும் சுருண்டு துவண்ட தாயம்மாள்தான் மீண்டும் நெருங்கி சகஜ பாவத்துக்கு அவனைக் கொண்டுவர வேண்டும்.

"கல்யாணத்தைப் பண்ணி வை... சரியாப்போயிடும்..." என்ற ஊர் சமாதானத்திலெல்லாம் தாயம்மாளுக்கு நம்பிக்கை இல்லை. மேலும், கல்யாணம் என்பது அதற்காகவா...?

குழந்தை பிறந்து நான்கு மாதங்கள் ஆகிவிட்டது. தாயம்மாள் போட்ட கணக்குப்படியே துரைராஜனின் கோபமும் அப்படியேதான் புதுக்கருக்கு மாறாமல் இருக்கிறது. கிருஷ்ணவேணி முன்னிலையிலும் அவன் அதை மறைப்பதில்லை. அவள்தான் இங்கிதக்காரி... அவன் சுருதியேறுகிறது என்று உணர்ந்ததுமே அகன்று போய்விடுவாள்.

தாயம்மாள் கொஞ்சம் பெருமிதத்துடன் மருமகளைப் பார்த்தாள். அதே கணத்தில் திரும்பிய கிருஷ்ணவேணியும் மாமியாரைப் பார்த்தாள்.

"உங்க பிள்ளையும் இப்படித்தான் உங்க நெஞ்சுலே உதைச்சு விளையாடிருப்பாரு... இல்லையா அத்தை?"

தாயம்மாளின் முகம் ஒரு வினாடி அந்த நினைவுகளில் மலர்ந்து மீண்டும் சிறுத்தது.

கிருஷ்ணவேணி குழந்தையைத் தூக்கி வந்து பாட்டி மடியில் போட்டு விட்டு, கைவேலையை வாங்கிக் கொண்டாள்.

"இப்படியேதான் உதைப்பான்..." மிக மிக கம்மிய குரலில் சொன்னாள் தாயம்மாள்..

கீரையைக் கீழே போட்டுவிட்டு "வருத்தப்படாதீங்க அத்தை..." என்றாள் கிருஷ்ணவேணி.

"நான் வருத்தமே படலை கிருஷ்ணவேணி... துரைராஜனோட கோபம் உன் வரையில வராம என்னோட நின்னுருக்கேன்னு சந்தோஷப்படறேன்... அது என்னைக்கும் அப்படியே இருக்கட்டும்..."

குழந்தை வேக வேகமாகக் கால்களை உதைத்துக் கொண்டது.

# மைதானத்தில் நடந்த கதறல் விழா!



மத்திய நிதியமைச்சர் யஷ்வந்த் சின்ஹா, பட்ஜெட்டில், சிகரெட் மீதான வரியை உயர்த்தியதை எதிர்த்து, ஏதோ போராட்டம் நடக்கிறதோ என்று சந்தேகமே வந்து விட்டது. சின்ன மலை போல சிகரெட் பெட்டிகளும், வத்திப் பெட்டிகளும். அப்புறம்தான் தெரிந்தது, அவையெல்லாம் சென்னை (சிகரெட்) குடிமக்களிடமிருந்து போலீஸ் பறிமுதல் செய்தவை என்று. எதற்காக இந்தப் பறிமுதல்? ஒய்.எம்.சி.ஏ. மைதானத்தில் நடந்த எம்.டி.வியின் பெப்ஸி டான்ஸ் கனெக்ஷன் நிகழ்ச்சிக்கு, மைதானத்தின் உள்ளே சிகரெட் + தீப்பெட்டிகளுக்குத் தடை என்பதால், ரசிகர்களை, போலீஸ் துப்புரவாய்ச் சோதனை செய்து, உள்ளே அனுப்பி வைத்துக் கொண்டிருந்தார்கள்.

● மைதானத்தின் உள்ளே ஆயிரம் வாட் ஸ்பீக்கர்களின் அலறல் ஒருபுறம்; அறிவிப்பாளரது உச்ச ஸ்தாயி கதறல் மறுபுறம். திமுதிமுவென ஆண்கள் + பெண்கள் கூட்டம். ஷார்ட்ஸ், கட் பனியன், குட்டை முடி இளசுகள் மட்டுமின்றிப் புடைவையில் சில நாற்பது பிளஸ்களும் வந்திருந்தது ஆச்சரியமாக இருந்தது.

● எம்.டி.வி. நிகழ்ச்சிகளில் ஆண்களும் பெண்களும் போடுகிற ஆட்டங்களைப் பார்த்தவர்களுக்கு, நம் ஊர் ஆட்களின் ஆட்டம் ஜுஜுபி. கூட்டத்தின் இடையே எட்டுப் பத்துப் பேர்களாய் ரயில் போல ஓடினார்கள். இதிலென்ன குஷியோ தெரியவில்லை! வியர்வை சொட்டச் சொட்ட, சட்டையைக் கழற்றி இடுப்பில் கட்டிக் கொண்டு, ஆட்டம் போட்டவர்களும் உண்டு. பெண்கள் ரொம்ப மென்மை என்பதை



கைத்தட்டல், நின்றபடியே லேசான இடுப் பசைவு, பாதத்தால் தரையில் தாளம் மூலம் நிருபித்தனர்.

● ஒரு ரவுண்டு அடித்ததில், கைகளை இத்தனை விதமாய் கட்டிக் கொண்டு நிற்க முடியுமா என்று ஆச்சரியப்பட்டோம்.

● ஆங்காங்கே பெப்சி வியாபாரம் படு சுறுசுறுப்பு. நோட்டுகள் கரைந்தன. பிலிம் சிடியில் உள்ள தரமணி டாக்கீஸ் ரெஸ்டாரண்ட் வியாபாரம் கொஞ்சம் டல்தான். பின்னே மூணு இட்லி இருபத்தி அஞ்சு ரூபாய்; தோசை இருபத்தி அஞ்சு ரூபாய் என்றால்!

● தவிர பீர் வியாபாரமும் ஓகோதான். (போலீஸ் கமிஷனரிடம் இதற்கும் சேர்த்துத்தான் பர்மிஷன் வாங்கியிருப்பார்களோ?) பாட்டுக்கு ஆடினார்கள் சிலர் என்றால், பீர் அடித்த 'மப்'பில் ஆடினவர்கள் இன்னும் சிலர்.

● "நம் ஊர் டீ.வி. அறிவிப்பாளர்கள் தமிழ்க் கொலை செய்து, கொஞ்சுவதை சகட்டுமேனிக்கு, கிண்டலடிக்கிறோம். ஆனால் எம்.டீ.வி.யில் புரியாத இங்கிலீஷும், காட்டுக் கத்தலும் கொஞ்சம் விரசமும் பண்ணினால் 'வீஜே' என்று இளிக்கிறோம்! என்னாங்கடா இது'' என்று கோபப்பட்டார் ஒரு செந்தமிழ் இளைஞர்.

● சுபா, அனுராதா ஸ்ரீராம், அனாமிகா, உஷா உதுப் என்று பலரும் தமிழ், இந்தி, இங்கிலீஷ் என்று கலந்து கட்டிப் பாடினார்கள். பாடினார்கள் என்பது கூட சரியில்லை பாடல்கள் சி.டியில் இசையுடன் அலற, கூடவே பாடினார்கள் என்பதுதான் சரி. பின்னணியில் ஒருசிலர் எம்.டீ.வி.யின் பிரத்யேக டிரஸ்ஸில் ஆடிக் கொண்டே இருந்தார்கள். பாடினவர்கள் தவறாமல் சொன்ன வாக்கியம் "ஐ லவ் யூ சென்னை!"

● சிகரெட் பறிமுதல் நடந்தாலும், மைதானத்தின் உள்ளே பலர் வாயில் சிகரெட்! 'பெட்டியாய் எடுத்து வந்தாத்தானே போலீஸ் புடிப்பான். நான் லூஸா கொண்டாந்திட்டேன்' என்றார் ஒரு கடத்தல் மன்னன். உஷா உதுப் கூட இவர்களுக்காகத்தான் 'தம் மாரோ தம்' பாடினாரோ என்னவோ!

● நிகழ்ச்சிக்கு வராது போனதால் ஜென்ம சாபல்யம் அடையாதோ என தவிக்கிறவர்களுக்கு ஒரு சாப விமோசனத் தகவல் : விரைவில் இந்த நிகழ்ச்சி எம்.டீ.வி.யில் ஒளிபரப்பாகும். போதும் போதும் என்று அலறினாலும் விடாது ஒளிபரப்பு நடைபெறும். கபர்தார்! ◉

— மானஸா

படங்கள் : ஸ்ரீஹரி

# வெற்றிமுகம்

முதல்படியில்
கால் வைத்தேன்; காத்திருந்ததுபோல்
கைகொடுத்து அழைத்துச் செல்ல
என்னை நோக்கிக்
குனிந்தன உயரங்கள்.

'இறங்கி விடாதே!'
என்று சொன்னதோடு அடுத்தடுத்த படிகள்
பட்டியலிட்டன தம் கைவசமுள்ள
பயன்களை.

'வெற்றியின்
ஒரு துணுக்கிலேயே எவ்வளவு சுவை பார்'
காற்று என் காதோரம் கொஞ்சியது.

'ஒரு படிக்கு
நூறு நட்சத்திரங்கள்வீதம் கணக்கு வைத்துப்
பரிசளிக்கக்
காத்திருக்கிறேன்' என்றது வானம்.

அலைகளை அழைத்து
என் நம்பிக்கைகளுக்குப்
புதிய மெட்டுகளைப் போடுமாறு
கட்டளையிட்டது கடல்.

முதல் படியிலேயே
இடறிவிட முயன்ற தயக்கங்கள், சபலங்கள்
முகவரி தப்பாய்ப் போனதாக
முணுமுணுத்தன.

என் நாள்களை
எப்படிச் செதுக்க வேண்டுமெனக்
காலம் யோசனை கேட்க,
அதை நான் பார்த்துக் கொள்வேன்
என்று என் கால்களை
எடுத்து வைத்தேன் இரண்டாவது படியில்!

— தமிழன்பன்

**காதல் டைரிக் குறிப்பு:**
**உன்னை நேசிக்கத் துவங்கிய பிறகுதான் என்னையே எனக்குப் பிடிக்கிறது**

# நான் உன்னை

பட்டுக்கோட்டை பிரபாகர்

மகேந்திரனின் வீடு பார்த்துப் போனான் அரவிந்த்.

ஒரு மினி பங்களாவாக இருந்தது. கிரானைட்டும், மார்பிளும் மனதை மயக்கின.

ஒவ்வொரு இடமாகக் காட்டி விளக்கமும் சொன்ன மகேந்திரன், பின்புறம் அமைக்கப்பட்டிருந்த சிறிய தோட்டத்தில், ஜெர்மன் புல்வெளியில் பிளாஸ்டிக் நிழல் ஊஞ்சலில் அவனை அமர வைத்துத் தானும் அமர்ந்தான்.

ஒரு வேலையாள் ஜூஸ் கொண்டு வந்து வைத்துச் சென்றான்.

"இந்த வீடு கட்டறதுக்கு எவ்வளவு ஆச்சு மகேந்திரா?" என்றான் வியப்பு விலகாமல்.

"இடம், கட்டடம், அலங்காரம் எல்லாம் சேர்த்து நாற்பத்தி ரெண்டு காஸ்ட் ஆச்சி. இதில நான் கைலேர்ந்து செலவு செஞ்சது முப்பதுதான் அரவிந்த்" என்றான் மகேந்திரன்.

"மிச்சம் பன்னிரெண்டு?"

"ரொம்ப அப்பாவியா இருக்கியே அரவிந்த். பல பேருக்கு நான் அரசாங்கத்தில காரியங்கள் முடிச்சிக் கொடுத்திருக்கேன். ஒரு எலெக்ட்ரிகல்ஸ் டீலர் ஒரு பைசாகூட வாங்க மாட்டேன்னு வீடு முழுவதுக்கும் தேவைப்பட்ட வயர்ஸ், சுவிட்சஸ் எல்லாம் சப்ளை செஞ்சாரு. இந்த மாதிரி..."

"புரியுது. சரி மகேந்திரா, எனக்கு எந்த வகையில நீ உதவி செய்யப் போறே?"

"என்ன செய்யணும் சொல்லு?"

"பிரிண்டிங் ஆர்டர்தான். வேற என்ன?"

"வெளிப்படையா சில விஷயங்கள் பேசிடலாமா?"

"சொல்லு"

"எனக்கு இதில ஒரு பைசாக்கூட கமிஷன்னு எதுவும் கொடுக்க வேணாம். ஆனா உனக்கு ஆர்டர் சேங்ஷன் பண்ற டிபார்ட்மெண்ட் அதிகாரிகள் கண்டிப்பா எதிர் பார்ப்பாங்க."

"தெரிஞ்சதுதானே."

"கொட்டேஷன்ல கொஞ்சம் நீ விளையாடிக்கலாம். ஒரு நிமிஷம்" என்று ஒலித்த செல்போனில் குறைந்த குரலில் விலகிச் சென்று பேசிவிட்டு வந்தான், டீபாய் மேலிருந்த ஒரு ஃபைலை எடுத்துக் கொடுத்தான்.

"இதோ பாரு, இந்த அப்ளிகேஷன் ஃபாரம் இருபத்தி அஞ்சி லட்சம் காப்பீஸ் அச்சடிக்கணும். இப்போ எந்த ரேட்டுக்குக் கடைசியா அடிச்சாங்கன்னு பில் காப்பி இருக்கு பாரு... இதே ரேட்டுக்கு உனக்குக் கட்டுபடியாகுமா?"

அரவிந்த் அடிக்கப்பட வேண்டிய அப்ளிகேஷன் மாதிரியை கவனித்தான். காகிதத்தைப் பார்த்தான். கால்குலேட்டர் எடுத்துக் கணக்குகள் போட்டுப் பார்த்தான். அவன் கண்கள் மலர்ந்தன.

அந்த ரேட்டிற்கு ஒப்புக் கொண்டால் எக்கச்சக்க லாபம் கிடைக்க வாய்ப்பிருப்பது தெரிந்தது.

"மகேந்திரா, இந்த ரேட்டுக்குத் தாராளமா கண்ணை மூடிக்கிட்டு அடிக்கலாம்."

"உனக்கு லாபம் வருமா?"

"நிச்சயமா வரும்."

"இந்த ஆர்டர்ல எவ்வளவு வரும்?"

"ரெண்டு லட்சத்தும் மேல கிடைக்கும்."

"பரவால்லை. நேர்மையா ஒப்புக்கறே. இந்த ஆர்டரை யார் உனக்கு சேங்ஷன் செய்யணுமோ அவர் ஒரு லட்சம் எதிர் பார்க்கறார். தர முடியுமா?"

"பாதிக்குப் பாதியா?"

"இதெல்லாம் பேரம் பேச முடியாது. இப்படித்தான் நடந்துக்கிட்டிருக்கு. ஆர்டரை எனக்குக் கொடுன்னு அவனவன் தினம் வந்து தவம் கிடக்கறான். நீ என் ஃபிரண்டுங்கறதால உன்னை வீட்டுக்கு வரச் சொல்லிப் பேசறேன்."

"ஓகே. கொடுத்துடலாம். எப்ப ஆர்டர் கிடைக்கும்?"



# சுவாசிக்கிறேன் 23

''கொடுத்ததுமே கையெழுத்துப் போட்டுடுவார்.''

''வொர்க் முடிச்சி, பில் செட்டில் ஆனதுக்கப்புறம் தந்தாப் போதாதா?''

''முந்தியெல்லாம் அப்படித்தான் நடந்துட்டிருந்திச்சு. போட்டி அதிகமாகி ஆர்டர் பிடிக்கிறப்பவே மொத்தமாப் பேசிக் கொடுக்க ஆரம்பிச்சிட்டாங்க.''

''ஒரு லட்சம் வெட்டினா இந்த ஆர்டர் எனக்குக் கிடைக்குமா?''

''கண்டிப்பா. பத்து நாள்ல இந்த வொர்க்கை முடிச்சிட மாட்டே?''

''முடியும்.''

''நீ வொர்க் முடிச்ச ஒரே வாரத்தில நான் பில்லை பாஸ் பண்ண வெச்சிடறேன்.''

''நான் ரெண்டே நாள்ல ஏற்பாடு பண்ணிடறேன் மகேந்திரா.''

''லேட் பண்ணிடாதே, இந்த வாரத்துக் குள்ளே இந்த ஆர்டரை ஃபைனலைஸ் செஞ்சாகணும்.''

''சரி'' என்று உற்சாகமாக எழுந்தான் அரவிந்த்.

கத்திரிக்கோல் கொண்டு ஓரம் வெட்டி ஒவ்வொரு கடிதமாகப் படித்துக் கொண்டிருந்தான் அரவிந்த்.

நடுவில் நிமிர்ந்து கண்ணாடித் தடுப்புக்கு அந்தப் பக்கம் ஆஃப்செட் இயந்திரம் இயங் கிக் கொண்டிருப்பதை ஒரு தரம் பார்த்துக் கொண்டான்.



''அவர் போலி டாக்டர்னு எப்படிச் சொல்றே?''

''ட்ரீட்மெண்ட் டுக்கு எவ்வளவு டாக்டர் 'பீஸ்'னு கேட்டா ஏதோ உங்களால முடிஞ்சதக் கொடுங்கங்கறாரே!''

— வி. வெங்கட்சாந்தி

அந்தக் கடிதத்தின் கையெழுத்து அவனை வெட்டி இழுத்தது.

இது... இது... பிருந்தாவின் கையெழுத்து! அவசரமாகப் பிரித்தான்.

'அன்புள்ள அரவிந்த்,

நலமா?

அன்று ரெஸ்ட்டாரெண்டில் நான் கோப மாகப் புறப்பட்டுப் போனதில் ஏற்பட்ட கோபத்திலிருந்து மீண்டு விட்டீர்களா? என் உணர்வுகள் உண்மையானவை அரவிந்த். வெளிப்படுத்தின விதம்தான் அநாகரிக மானது. அதை அப்புறம்தான் உணர முடிகிறது.

நான் ஏதோ ரொம்பப் பக்குவப்பட்ட வளாக்கும் என்று அடிக்கடி எனக்குள்ளே நினைத்துக் கொள்வேன். அது தவறு என்று என்னை நானே குட்டிக் கொள்ளத்தான் சில சமயங்களில் அப்படி நடந்து கொள்கிறேன் போலிருக்கிறது.

உங்கள் தவறான கணிப்புக் கருத்தால் என்னை நீங்கள் காயப்படுத்தி விட்டதாக குற்றம் சாட்டினேன். என் மோசமான செயலால் உங்களை நான் காயப்படுத்தி விட்டதும் உண்மை.

அரவிந்த், உங்கள் நண்பர் சந்துரு நேற்று என்னைச் சந்தித்தார். ஒரு மணி நேரம் உங்களைப் பற்றிச் சொன்னார். இதில் ஆச் சரியம் என்னவென்றால்... அவர் சொன்னது எதுவுமே புதிய செய்தி இல்லை. எல்லாமே உங்களைப் பற்றி ஏற்கெனவே நான் அனுமானித்து வைத்திருப்பவைதாம்.

உங்களை நான் சரியாகவே புரிந்து வைத்திருக்கிறேன். நீங்கள்தான் என்னை தவறாகப் புரிந்து கொண்டுள்ளீர்கள்.

நேசிப்பதற்கும் புரிந்து கொள் வதற்கும் நிறைய தொடர்புகள் உண்டு அரவிந்த்.

நீங்கள் என்னை சரியாகப் புரிந்து கொள்ளவில்லையே என்று நான் ஏன் கவலைப் பட வேண்டும்? நீங்கள் புரிந்து கொள்ளாமல் போனால்தான் என்ன? புரிந்து கொள்ள வேண்டும் என்று ஏன் துடிக்கிறேன்?

ஏனென்றால்... நீங்கள் என் மரி யாதைக்குரியவர். நான் மிகவும் மதிப் பவர். உங்கள் மனதில் என்னைப் பற்றி தவறான பதிவுகள் இருக்கக் கூடா தென்று நினைப்பவள் நான்.

எவ்வளவு சிக்கலான சூழ்நிலையில் நீங்கள் தொழில் துவங்கியுள்ளீர்கள் என்பது எனக்குத் தெரியும். சரியோ, தவறோ... புலியின் வாலைப் பிடித் திருக்கிறீர்கள். புலியை வென்றேயாக வேண் டும். இப்போது உங்கள் முழு கவனமும் அதில்தான் இருக்க வேண்டும்.

முதலில் பரஸ்பரம் நாம் முழுமையாகப் புரிந்து கொள்வோம். பிறகு நமக்குள் நிகழ்கிற நேச உணர்ச்சிகளைப் புரிந்து கொள்வோம்.

தங்கள்,
பிருந்தா.

கடிதத்தை மீண்டும் ஒருமுறை படித் தான். நாற்காலியில் சாய்ந்து அமர்ந்தான். கண்களை மூடிக் கொண்டான்.

பிருந்தா என்னை நேசிக்கிறாள். அதில் சந்தேகமே இல்லை. அதை வெளிப்படுத்து வதில் ஏதோ ஒரு சிக்கல் அல்லது தடை

இருக்கிறது.

சந்தர்ப்பம் வரும்போது அவனே அந்தத் தடையைத் தாண்டி கண்டிப்பாக வருவான். அதுவரை அவனை வற்புறுத்துவது தவறு.

அவளை நான் முழுமையாகப் புரிந்து கொள்ளவில்லை என்பது அவள் எண்ணம். எனில்...

"சார்!"

சீனிவாசனின் குரலில் கண்களைத் திறந்தான்.

"என்னப்பா? நான் சொன்ன ஏழு கம்பெனிக்கும் போய்ப் பார்த்தியா?"

"ம்...ம்... பார்த்தேன் சார்."

அவன் குரலில் சலிப்பு இருந்தது.

"ஏன் ஒரு மாதிரியா பதில் சொல்றே?"

"எல்லாரும் சிரிச்சிப் பேசினாங்க. உக்கார வெச்சி காபி எல்லாம்கூட வாங்கிக் கொடுத்தாங்க. ஆர்டர்தான் கொடுக்கலை சார்."

"ஏன்? நான் போன்ல பேசினப்போ கண்டிப்பா ஆர்டர் தர்றதா சொன்னாங்களே..."

"மரியாதைக்குச் சொல்லிருப்பாங்க சார், ரெகுலரா இப்ப அடிச்சிட்டிருக்கிற பிரஸ் லேர்ந்து திடீர்னு மாத்தறது சிரமம்னு சொல்றாங்க."

"நம்ம பிரிண்ட்டிங் குவாலிடி, நாம யூஸ் பண்ற இங்க் இதைப் பத்தி எல்லாம் சொல்லச் சொன்னேனே..."

"எல்லாம் சொன்னேன் சார், சில பேர் நம்ம ரேட் அதிகம்னு வெளிப்படையா சொல்லிட்டாங்க."

"ரொம்ப நியாயமான ரேட்தானே வொர்க்-அவுட் பண்றோம்..."

"சில பேருதான் குவாலிடியா கேக்கறாங்க. பல பேரு ரேட்டுக்கு கம்மியா இருந்தா சரின்னு சொல்றாங்க. ஜே.எஸ்.ஆர் கம்பெனில ஏற்கெனவே நீங்க போய் கன்ஃபர்ம் செஞ்ச அந்த ஒரே ஒரு ஆர்டர்தான் என்னால வாங்கிட்டு வர முடிஞ்சது சார்."

"சரி சரி, நம்பிக்கையை விட்டுடாதீங்க. தொடர்ந்து கேன்வாஸ் பண்ணுங்க. அதே சமயம் நானும் இந்த பிரைவேட் ஆர்டர்சை அதிகமா நம்பலை. இங்கே ஏகப்பட்ட போட்டின்னு எனக்கு நல்லாத் தெரியும்."

"அப்புறம் எப்படி சார் தொடர்ந்து மெஷினுக்கு வேலை கொடுக்கப் போறோம்?"

"கவர்ன்மெண்ட் ஆர்டர் ஒண்ணைப் பிடிக்கிறதுக்கு ஏற்பாடு செஞ்சிருக்கேன். அதை கரெக்ட்டா டயத்துக்கு செஞ்சிட்டா அடுத்தடுத்து அதே மாதிரி நிறைய பிடிச்சிடலாம்" என்ற அரவிந்த் போனை எடுத்து மகேந்திரனை தொடர்பு கொண்டான்.

"ஹலோ! மகேந்திரன் ஹியர்."

"மகேந்திரா, நான் அரவிந்த்."

"ஹலோ அரவிந்த், சொல்லு! எப்படி இருக்கே?"

"ஃபைன்."

"என்ன விஷயம், சொல்லு!"

"அந்த அப்ளிகேஷன் ஆர்டர் இன்னும் கிடைக்கலையே மகேந்திரா."

"அதான் சொன்னனே, அதில கொஞ்சம் சேஞ்ச் பண்றாங்களாம். மேட்டர் ஃபைனலைஸ் ஆனதும் ஆர்டர் கிடைச்சிரும்."

"நாம கொடுத்து ஒரு வாரம் ஆச்சு."

"வந்துடும். வந்துடும்."

"எப்போ கிடைக்கும்னு தெரிஞ்சா..."

"அவனவன் பெரிய டீலிங்கில அலைஞ்சிட்டிருக்கான். நீ ரொம்ப தொணப்பறியே... கவர்ன்மெண்ட் விஷயம்... மெதுவாத்தான் ஆகும். வெச்சிடவா?"

சட்டென்று மகேந்திரன் போனை வைத்துவிட பகீரென்றது அரவிந்திற்கு.

மெஷின்மேன் பரபரப்பாக ஓடி வந்தான்.

"சார்! சார்! இம்ப்ரஷன் சிலிண்டர் டேமேஜ் ஆயிடுச்சி சார்!"

"என்னது?" என்று அதிர்ந்து எழுந்தான் அரவிந்த்.

இம்ப்ரஷன் சிலிண்டர் என்பது அச்சு இயந்திரத்தில் இதயம்!

(தொடரும்)



**"உங்க பையன் எதிர்காலத்திலே பெரிய அரசியல்வாதியா வருவான்னு தோணுது!"**

**"என் அப்படி?"**

**"'பிறர் நலம் நாடு'ன்னு எழுதச் சொன்னா 'பிறர் நிலம் நாடு'ன்னு எழுதறான்!"**

**— சுந்தரி சுந்தரம்**

# கால்பந்து

பத்தடி நீளமும், முக்கால் அடி பருமனுமாக இருந்த அந்த மலைப் பாம்புக்கு, தான் வழி தவறி எங்கோ வந்து விட்டோம் என்பது புரிந்தது. சற்று தூரத்தில் நிறைய இரைச்சல். மலைப் பாம்புகளுக்கே கண் கொஞ்சம் மந்தம் என்பதால் அந்த விளையாட்டு மைதானத்தில் ஆடிக் கொண்டிருந்த உருவங்கள் பார்வையில் பதியவில்லை. அசைவு மட்டும் விளங்கியது. 'எதிரியா? இரையா?' எப்படியிருந்தாலும் பார்த்து விடுவது என்று அந்தப் பக்கமாக மெள்ள நகரத் தொடங்கியது.

பாதி ஆட்டத்தில் விடப்பட்ட பத்து நிமிட இடைவேளை. கூனிக்குறுகி உட்கார்ந்திருந்தான் முத்துகிருஷ்ணன். 'ஏன் அப்படிச் செய்தோம்?'!

யாரோ ஒருவர் கெட்டிலில் தண்ணீர் கொண்டு வந்து விளையாட்டு வீரர்களுக்கு தம்ளரில் சப்ளை செய்து கொண்டிருந்தார். "அதோ உட்கார்ந்துக்கிட்டிருக்காரே முத்துகிருஷ்ணன், அவருக்குக் கொடுங்க. பாவம் கோல் போட்ட களைப்பு இருக்கும் அவருக்கு" என்றான் ஒருவன். நக்கல்!

தன்னருகே நீட்டப்பட்ட தண்ணீர் தம்ளரை ஒருகணம் உற்றுப் பார்த்து விட்டு, வேண்டாம் என்று தலையசைத்தான். பிறகு தன் உலர்ந்த உதடுகளை நாக்கால் தடவிக் கொண்டான்.

தனது அணியின் கோச், டீமில் உள்ள மற்ற விளையாட்டு வீரர்களைக் கூப்பிட்டு ஆலோசனைகள் சொல்லத் தொடங்கினார். தயக்கத்தோடு முத்துகிருஷ்ணனும் அந்தப் பக்கம் போனபோது அவனை சுட்டெரிப்பது போல் பார்த்தார். "நீ ஏம்ப்பா இங்கே வரே? நீதான் அவங்க சைடாச்சே". தலையைக் குனிந்து கொண்ட போது டக்கென்று ஒரு கண்ணீர்த் துளி கீழே விழுந்து மணலின் சூடு காரணமாக ஆவியானது.

"மன்னிச்சுடுங்க சார்" என்றான்.

"வேணாம்ப்பா. உன்னாலே என் மானமே போச்சு. அவனவனும் பீலே, மாரடோனா, பாகியோ இந்த மாதிரி சாதனையாளர்கள் ஆகணும்னு ஆசைப்படுவாங்க. நீ எஸ்கோபாரை உதாரண புருஷனா நினைச்சிருக்கேன்னு இப்ப இல்லே தெரியுது."

எஸ்கோபார்! கொலம்பியா நாட்டு கால்பந்து வீரர். உலகக் கோப்பைக்காக அமெரிக்க அணியுடன் மோதிய போது ஸேம்-சைட் கோல் ஒன்றை அவர் போட்டு விட, அமெரிக்கா ஜெயித்து விட்டது. நாடு திரும்பிய எஸ்கோபாரை வரவேற்றது துப்பாக்கிக் குண்டு.

"ஏன் அப்படிச் செய்தேன்? ஆளுக்கு இரண்டு கோல்கள் எனும் வகையில் இரு அணிகளும் சமமாக இருக்கும் போது, எதிரணியின் கோலுக்குள் செல்லவிருந்த கால்பந்தைத் தடுத்து எதிர்ப்புறம் உதைத்துத் தள்ளியிருக்க வேண்டிய நான் எதற்காக புத்தி கெட்டுப் போய் அதை கோல் போஸ்டுக்குள் தள்ளினேன்!"

எதிரணி கோல்கீப்பர் உட்பட அனைவரும் ஒரு நிமிடம் ஸ்தம்பித்துப் போய் நிற்க, பிறகு எதிரணியின் தலைவன் தன் முதுகைத் தட்டி விட்டுக் கிண்டல் புன்னகையுடன் நகர்ந்த அந்த நிமிடம்... போச்சு,

மாவட்ட அளவில் நடைபெறும் இந்தக் கால்பந்துப் போட்டியைப் பற்றி அடுத்த நாள் நாளிதழ்களில் இடம்பெறப் போகும் விமர்சனங்கள் தலைப்புச் செய்தியாக முத்துகிருஷ்ணன்தான் இருக்கப் போகிறான்! போட்டியின் ஹீரோ யாராக இருந்தாலும், வில்லனென்னவோ அவன்தான்.

மறுபடியும் விளையாட்டு தொடங்கி ஒரு



## அருண் சரண்யா

நிமிடம் கூட ஆகியிருக்காது. பார்வையாளர்களிடையே பெரும் சலசலப்பு. தொடர்ந்து லைன்ஸ்மேன் விசிலை ஊத, குழப்பத்தோடு தங்கள் இயக்கத்தை நிறுத்திக் கொண்ட விளையாட்டு வீரர்கள் சற்றுத் தாமதமாகத்தான் மைதானத்தின் நடுவே புகுந்து விட்டிருந்த அந்த விருந்தாளியை கவனித்தனர்.

புஷ்டியாக இருந்த மலைப்பாம்பு என்னவோ அங்குலம் அங்குலமாகத்தான் நகர்ந்தது. விளையாட்டு வீரர்கள்தான் வெகுவேகமாகப் பின்னடைந்தனர். ஏற்கெனவே அவர்கள் உடலில் தோன்றிய வியர்வை அரும்புகள் இப்போது வெள்ளமாகப் பொங்கி வழிந்தது.

கடமையுணர்வு பொங்க "விளையாட்டுப் பரப்பு எல்லையை பாம்பு தாண்டிய பிறகுதான் மாட்ச் தொடரும்" என்றார் ரெப்ரீ.

"அது போதுமா? அப்போ எல்லைக் கோடுகளுக்கு வெளியே நிற்கும் எங்க கதி?" என்று 'டெக்னிகலாகக்' கொதித்த லைன்ஸ்மேன், "முழு மைதானத்தையும் பாம்பு கடந்து வெளியே போன பிறகுதான் ஆட்டம் தொடரணும்" என்றார்.

"இப்போதைக்கு இது நடக்காது. ஏதோ இரையை விழுங்கியிருக்கு இந்தப் பாம்பு. இது இப்போ நகருவதே சந்தேகம்."

அப்போதுதான் அனைவரும் பாம்பின் வயிற்றைப் பார்த்தனர். வீங்கியிருந்தது.

"போன வாரம் கூட மைசூர் காட்டிலே ஒரு சிறுமியை மலைப்பாம்பு ஒண்ணு விழுங்கியதாக நியூஸ் வந்ததே" என்று ஒருவர் கூறிய அடுத்தகணம் ஒரு பெண்மணி வீறிட்டார்.

"என்னங்க நம்ம குழந்தை பாரதியைக் காணோமே. நேரே வீட்டுக்கே போயிடலாம்னு சொன்னேன். நீங்கதான் கொஞ்ச நேரம் பராக்கு பார்த்துட்டுப் போகலாம்னு மைதானத்துக்கு வந்தீங்க. இப்ப நம்ம பொண்ணு..."

"சீ வாயை மூடு. இதோ அவ என் கையைப் பிடிச்சுக்கிட்டு சமர்த்தா நிக்கிறா" என்று அவள் கணவர் சீறினார்.

யாரோ ஒருவர் அங்கிருந்த கல்



**பட்டுப் புடைவை பரிசுப் போட்டி முடிவு – 7**

**அபுல் கலாம் ஆசாத்தின் சிஷ்யர், சிக்கந்தர் பக்த் என்கிற சரியான விடையை எழுதி பட்டுப் புடைவை பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி வாசகர்:**

**ஒய். தண்டபாணி,**
**14 சந்திரபாக் அவின்யு,**
**மைலாப்பூர், சென்னை – 4.**

ஒன்றை எடுத்து பாம்பின் மீது வீச, யாருமே எதிர்பாராத வகையில் அது வேகமாக நகரத் தொடங்கியது. மைதானத்திற்குக் குறுக்கே போய்க் கொண்டிருந்த தன் திசையை மாற்றிக் கொண்டு நெடுக்கு வாக்கில், ஒரு கோல் போஸ்ட்டை நோக்கி நகரத் தொடங்கியது.

பலரும் கூக்குரலிட்டனர். பிறகு பாது காப்பான தூரத்தில் நின்றபடி பேச்சுக்கள் தொடர்ந்தன.

"பக்கத்திலேயே ஜூ இருக்கில்ல, அங்கி ருந்துதான் தப்பி வந்திருக்கணும்."

"எப்படித் தப்பிச்சிருக்க முடியும்? கூண் டுக்குள்ளே இல்ல வச்சிருப்பாங்க!"

"ஆடு, மொசல்னு தின்னப் போடுவாங்க இல்ல, அப்போ திறந்து விடும் கதவை மூடாம விட்ருப்பாங்க."

"இருக்காதுங்க. கூண்டிலே வளர்ந்த பாம்புன்னா உடலிலே மினுமினுப்பு இருக் காது. இந்தப் பாம்பு நல்ல பருமனா, உடம்பெல்லாம் எண்ணெய் தேய்ச்சு பாலிஷ் செய்த மாதிரி பளபளன்னு இருக் குது. இது காட்டிலே வளர்ந்த சுகவாசி தான்."

"ஏம்பா பக்கத்திலே மலையே இல்லியே. அப்போ எப்படி மலைப்பாம்பு வந்தது?"

"மூடுடா வாயை. அப்போ புத்தூரிலே தான் கட்டு விரியன் இருக்குமா?"

"மலைப்பாம்புக்குக் கால்பந்து ஆட் டம்னா ரொம்ப இஷ்டமா, பார்க்க வந் துடுச்சே."

"ரொம்ப இஷ்டம்தான். பார்க்க மட் டுமா, விளையாட கிரவுண்டுக்குள்ளேயே நுழைஞ்சிடுச்சே."

முத்துகிருஷ்ணனின் மனத்தில் இவை எதுவுமே பதியவில்லை.

'எவ்வளவு உழைப்புக்குப் பிறகு கிடைத் தது இந்தக் குழுவில் சேரும் அங்கீகாரம்! குழுவுக்காகப் பல கோல்களைப் போட்ட தன் எதிர்காலம் இந்த ஒரே 'எதிர்'கோலால் மாறிவிடுமா? 'அவனுக்கென்னடி, படிப் பிலே சுமார்னாலும் ஸ்போர்ட்ஸ் கோட் டாவிலே நல்ல வேலை கிடைச்சிடும்' என்ற அப்பா, 'எனக்கெதுக்குங்க புதுப் புடவை? நம்ம முத்து பாவம் விளையாடிக் களைச்சுப் போறான். அவனுக்கு தினமும் முட்டை வாங்கிக் கொடுக்கலாம்' என்ற அம்மா, எல் லோருடைய கனவுகளும் இப்போது சோப்பு நீர்க் குமிழிகள்தானா?'

உட்கார்ந்த நிலையிலேயே தனக்குள் ஒடுங்கத் தொடங்கினான்.

பாம்பு மெதுவாக நகர்ந்தவாறே இருந் தது. அது வரும் வழியில் சைக்கிளை வைத் தால் அது தனது திசையை மாற்றிக் கொள்ளும் என்று ஒருவர் சொல்ல, அங்கிருந்த ஒரு சைக்கிள் அப்படியே வைக்கப்பட்டது. "ஐயையோ என் சைக்கிளை வக்கிறீங்களே, அதை மலைப் பாம்பு அப்பளமாக நொறுக்கிட்டா?" என்ற ஓர் இளைஞனின் குரல் எடுபடவில்லை.

எதிர்பார்த்த மாதிரி பாம்பு ஒன்றும் தன் பாதையை மாற்றிக் கொள்வதாயில்லை. சைக்கிளின் மீது தன்னைச் சுற்றிக் கொண் டது.

"அட, சைக்கிளையும் கீழே தள்ளாம தன்னையும் பாலன்ஸ் செய்துக்கிட்டு நிக்குதே" என்று ஒருவர் சிலாகித்தார்.

"யாராவது ஒரு கோணியை எடுத்துக் கிட்டுப் போய் அதிலே அந்தப் பாம்பைக் கட்டிடுங்களேன்."

"என்னய்யா கிண்டலா? ஏன் நீயே போய்க் கட்டேன். கோணி வேணா தரச் சொல்றேன்."

---

***"நானும் அக்கவுண்டண்ட் அருணாசலமும் பக்கத்து பக்கத்து சீட்தான்! ஆனா பேசி ரெண்டு மாசமாயிடுச்சி!"***

***"ஏன்? சண்டையா?"***

***"இல்லே! நான் முழிச்சிகிட்டிருக்கிறப்போ அவன் தூங்கிடறான்! அவன் முழிச்சிகிட்டிருக்கிறப்போ நான் தூங்கிடறேன்! அதான்."***

***– தாரை ஆ. அருண்ராஜ்***



"அதுக்கில்லே. மலைப் பாம்புக்கு விஷம் இல்லையே தவிர பல் உண்டு, கடிச்சிடும்."

"தெரியுதில்லே, வாயை மூடிக்க."

இதற்குள் 'அனகோண்டா' படத்தில் மலைப் பாம்பு செய்த வீரதீர சாகசங்களை எடுத்துக் கூறி மற்றவர்களை நடுங்க வைத்துக் கொண்டிருந்தார் ஒருவர். "வனத்துறை ஆளுங்களுக்குச் சொன்னா வந்து எடுத்துக்கிட்டுப் போயிடுவாங்க" என்று மற்றொருவர் கூற, அவர்களுக்குத் தொலைபேசியில் தகவல் தெரிவிக்க சைக்கிளில் (மற்றொரு சைக்கிள்தான்!) பறந்தார் இன்னொருவர்.

சைக்கிள் சவாரி பாம்புக்கு அலுத்து விட்டதோ என்னவோ, பாம்பு மீண்டும் மணலில் இறங்கி விடத் தொடங்கியிருந்தது.

எல்லோரும் பதற்றத்திலும், பேச்சு சுவாரசியத்திலும் மைதானத்தில் இருந்த கால் பந்தை எடுக்க மறந்து விட்டிருந்தனர். அதை நோக்கி ஊர்ந்தது பாம்பு.

"அட, பாம்பு 'கோல்' போடப் போகுதுடா" என்ற ஒருவனின் கமெண்ட்டுக்கு, "என்ன கோல், நம்ம முத்துகிருஷ்ணன் மாதிரி ஸேம்-சைடு கோலா?" என்று சீண்டினான் அவனது சகா.

இத்தனை களேபரத்திலும் எங்கோ வெறித்துப் பார்த்தபடி நின்று கொண்டிருந்த முத்துகிருஷ்ணன் திடீரென்று உணர்வுபெற்றவனைப் போல, "கூடாது. ஸேம் சைடு கோல் போடக் கூடாது" என்று கத்தியபடி வேகமாக ஓடினான். பாம்பு பந்தை வெகுவாக நெருங்கி விட்டிருக்க, பலரது பதற்றக் குரல்களையும் லட்சியம் செய்யாமல் அதை நெருங்கினான். பாம்பின் வாய்க்கு வெகு அருகில் இருந்த பந்தை எதிர்ப்புறமாக உதைத்தான். அதே வேகத்தில் திரும்பினான். உட்கார்ந்தபடி மீண்டும் வெற்றுப் பார்வை பார்த்தான்.

அத்தனை பேரும் பிரமித்து நிற்க, பத்திரிகையாளர்களின் புகைப்படக் கருவிகள் அவனை 'க்ளிக்'கித் தள்ள, கோச் அவனை நெருங்கினார். "சாரி முத்துகிருஷ்ணா" என்றார். அணியின் சக விளையாட்டு வீரர்களும் அவனைக் கொஞ்சம் குற்ற உணர்வுடன் நெருங்கினார்கள். "கவலையை விடு முத்து, செகண்ட் ஹாஃபிலே நாம பூந்து விளையாடிடலாம்" என்றான் கேப்டன் உற்சாகமாக.

பாம்பைப் பிடித்துக் கொண்டு போக வனத் துறையினர் வலையுடன் ஜீப்பில் வந்து கொண்டிருந்தனர். ◉

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

# குறையொன்றுமில்லை

ஆச்ருத வாத்ஸல்யம்! பகவானுடைய இந்த குணத்தைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தால் நிறுத்தவே மனம் வராது... ஒரு கதைதான் இப்போது ஞாபகத்துக்கு வருகிறது:

ஸ்ரீரங்கத்திலே வேத பாடசாலையிலே ஒரு பையன் அத்யயனம் பண்ணிக் கொண்டிருக்கிறான். பாடசாலையிலே மாசத்துக்கு நான்கு நாள் 'லீவ்' வரும்! எப்படி லௌகிகத்தில் நான்கு நாள் 'லீவ்' வருகிறதோ, அதே போல வைதிகத்திலும் நான்கு நாள் 'லீவ்'! கிருஷ்ண பக்ஷத்திலே அமாவாசை, பிரதமை இரண்டு நாள் 'லீவ்'. சுக்ல பக்ஷத்திலே பௌர்ணமி, பிரதமை-இரண்டு நாள் லீவ்! அந்த சமயத்திலே நான்கு நாட்கள் அத்யயனம் இல்லை. வித்யார்த்திகளை வீட்டுக்கு அனுப்பி விடுவார்கள்.

நான் சொன்ன இந்தப் பையன், அம்மாவைப் பார்க்க வேண்டும் என்று வருகிறான்... வருகிறபோது அந்தக் காவேரி அம்மா மண்டபக் கரையிலே நிறைய கீரை விற்கிறது. கீரையும் கீரைத் தண்டும்... இவனுக்குக் கீரையென்றால் ரொம்ப இஷ்டம். அந்தக் கீரையை நிறைய வாங்கிக் கொண்டு போய் அம்மாவிடம் கொடுத்து, "அம்மா கீரை புளிப்பு பண்ணு, கீரையைச் சுண்டி வை... நான் போய் க்ஷவரம் பண்ணிக் கொண்டு, குளித்துவிட்டுச் சாப்பிட வருகிறேன்..." என்றான்.

நன்றாகக் கவனிக்க வேண்டும்... அது சுக்ல பக்ஷத்து லீவு! பௌர்ணமி- அதனாலேதான் க்ஷவரத்துக்குப் போனான்.

அம்மாவும் சரி என்றாள். அவளுக்கு ரொம்ப சந்தோஷம். பத்துப் பதினைந்து நாட்களுக்கு ஒரு தடவைதான் வருகிறான் இல்லையா...? அதனால் ரொம்ப சந்தோஷம் அவளுக்கு.

என்ன பண்ணினான், அந்தப் பையன் புறப்பட்டுப் போய்விட்டான். ஜீயர்புரத்திலே அவன் அம்மா அழகாக கீரையைச் சுண்டி வைத்தாள். பத்து மணி ஆயிற்று, பதினோரு மணி ஆயிற்று, மத்தியானம் ஒரு மணி ஆயிற்று... போன பையன் திரும்பி வரவேயில்லை!

க்ஷவரம் பண்ணிக் கொள்ளப் போன பையன் வரவே இல்லையே என்று மாத்ரு ஹ்ருதயம் பரிதவிக்கிறது!

வாசலில் வந்து நின்று கொண்டு "ரங்கா! ரங்கா! ரங்கா" என்று அம்மா, பிள்ளையைக் கூப்பிடுகிறாள். அந்தப் பையன் காதிலே அது விழவே இல்லை.

அவன் காவேரியிலே நீச்சலடித்துக் கொண்டிருக்கிறான். எவ்வளவு நேரம் பாருங்கள்! காலையில் போனவன், மத்தியானம் ஒரு மணி வரைக்கும் நீச்சல்! மாத்ரு ஹ்ருதயம் பரிதவிக்க, சப்தம் எழுகிறது... "ரங்கா! ரங்கா!"

இந்த சப்தம்- பையன் காதில் விழாத சப்தம் அம்மா மண்டபக் கரையைத் தாண்டி, கோபுரத்தைத் தாண்டி, கருடாழ்வார் இருக்கிற அந்தத் தூணைத் தாண்டி, உள்ளே கோவில் கர்ப்பகிரஹத்தில் படுத்திருக்கிறானே ரங்கநாதன்... அவன் திருச்செவியிலே போய் 'ரங்கா! ரங்கா!' என்று விழுந்ததாம்.

அந்த ரங்கநாதன் நினைத்தானாம்- 'அடாடா! எனக்கொரு அம்மா இல்லையே!' என்று! அந்த மாத்ரு ஹ்ருதயம்- ஒரு தாயினுடைய கூப்பிடுதல் என்பது எவ்வளவு சுவாரஸ்யமாக இருக்கிறது! இப்படி ஒரு அம்மா இல்லாமல் நான் இருக்கிறேனே...' என்று பரமாத்மாவுக்கு ரொம்ப வியசனமாம்.

'அவன் பிள்ளைக்குத்தானா ரங்கா என்று பெயர்...? எனக்கும்தானே ரங்கா என்று பெயர்... நானே போகிறேன்...' என்று கிளம்பிவிட்டானாம்.

கிளம்பி, பளபள பளபளவென்று அந்த அம்மா எதிரிலே வந்து நின்றான். அவன் எங்கே போய் க்ஷவரம் பண்ணிக் கொண்டானோ தெரியவில்லை! அந்தப் பையன் க்ஷவரம் பண்ணிக் கொண்டு வந்தால்



எப்படி இருப்பானோ அப்படியேயிருக்கிறான்.

உள்ளே வந்து, "அம்மா பசிக்கிறதே..." என்கிறான்.

"வாடாப்பா... இத்தனை நாழி எங்கே போயிருந்தே..." என்று இலையை எடுத்துப் போட்டு பிரசாதத்தைப் பரிமாறி, கீரையைப் போட்டால்... இந்தக் குழந்தை சாப்பிட மாட்டேனென்கிறது! அந்தப் பிள்ளையாய் இருந்தால் எப்போதே சாப்பிட்டிருக்கும்!

"நீ பிசைந்து ஊட்டினால்தான் சாப்பிடுவேன்" என்கிறது இந்தப் பிள்ளை.

அந்த மாதா ஆச்சர்யப்

62

பட்டு, இந்தக் குழந்தை இப்படிக் கேட்கிறானே என்று எடுத்து, ஒரு கையால் விசிறிக் கொண்டே ஒரு கையால் கவளம் கவளமாக சாதத்தை வாயிலே ஊட்டுகிறாள்.

உலகம் உண்ட பெருவாயன், கவளம் கவளமாக விழுங்குகிறான்.

அந்த அம்மா, குழந்தை இப்படிச் சாப்பிடுகிறதே என்று ஆச்சர்யப்பட்டுப் போய் விட்டாள். உலகத்திலே அம்மாவுடைய கண்தான் படாது என்று சொல்லுவார்கள். ஆனால் அந்த அம்மாவின் கண்ணே பட்டு விட்டது! ஏனென்றால், பாத்திரத்திலே ஒரு அரைக் கரண்டிதான் மிச்சமிருக்கிறது! மீதி மொத்தத்தையும் குழந்தை சாப்பிட்டு விட்டது.

உடனே அவள் பார்த்தாள்... அந்த அரைக் கரண்டியையும் அது சாப்பிட்டிருக்கக் கூடாதோ என்று ஒரு நிமிஷம் நினைக்கிறாள்...

அதற்குள்ளே இந்தக் குழந்தை, "அம்மா, நான் போய் வருகிறேன்... மீதி வித்யார்த்திகளெல்லாம் காத்துக் கொண்டிருப்பார்கள்..." என்று கிளம்பி விட்டது.

இவள் என்ன பண்ணினாள்... கதவைச் சாத்திக் கொண்டு மிச்சமிருக்கிற பிரசாதத்தைப் போட்டுக் கொண்டு அந்த அரைக் கரண்டி கீரையைக் குத்திக் கொண்டாள்... அப்படிக் குத்திக் கொள்கிறபோது, தபதப வென்று கதவிடிக்கிற ஓசை!

"அம்மா! ரொம்ப பசிக்கிறது! கீரைப் புளிப்பு பண்ணிட்டியா...?"- கேட்டபடி வந்தான் மகன்!

"இப்பத்தானேடா சாப்பிட்டே...? நிறைய போட்டேனே... ஊட்டச் சொன்னாயே, ஊட்டினேனே...?"

"நானா? நான் எங்கே வந்தேன்...? நான் எங்கே சாப்பிட்டேன்? காலையில் எட்டு மணிக்குப் போனவன் இப்பத்தானே வரேன்... கேசவனைக் கேளு, கோவிந்தனைக் கேளு, மாதவனை வேணுமானாலும் கேளு...."

"பின்னே, வந்தது யார்? சாப்பிட்டது யார்..." என்று நடுங்குகிறாள் அவள்.

அப்போது... பரமாத்மா சேஷசாயியாக அவளுக்கெதிரில் ஒரு க்ஷணம் தோன்றினான். ஒரு க்ஷணம் ரங்கனாகவும் ஒரு க்ஷணம் புத்திரனாகவும் காட்சி கொடுத்தான். அவன் மாறி மாறி காட்சி கொடுப்பதைப் பார்த்து, நடுங்கிப் போய்விட்டாள் அவள்!

"இடக்கை வலக்கை தெரியாத அஞ்ஞானியான என் பேரில் இவ்வளவு காருண்யமா?... உன் பெயரை என் பிள்ளைக்கு வைத்ததனாலேதானே இந்த லாபம்! 'ரங்கா ரங்கா' என்று கூப்பிட்டதனாலேதானே இந்தப் பலன்... வேறு பெயர் வைத்திருந்தால் இந்த லாபம் கிடைத்திருக்குமா...? பிரபோ! என்னிடத்தில் இவ்வளவு கருணை வைத்திருக்கிறாயே!" என்று கதறி அழுகிறாள்...

இந்தச் சம்பவத்தை ஞாபகப்படுத்த, இன்றைக்கும் ரங்கநாதன் ஜீயபுரத்திலே எழுந்தருள்கிறான். சுண்டிய கீரையை நைவேத்தியம் கொள்கிறான். எல்லோருக்கும் அது விநியோகமும் ஆகிறது.

கோயிலில் பள்ளி கொண்டிருக்கிற, அர்ச்சாவதாரத்துப் பரமாத்மா எவ்வளவு நிஜம்! எவ்வளவு உண்மை! நம் வார்த்தைகளை அவன் கேட்கிறானே! நாம் சொல்லும் நாமாவைக் கேட்கிறானே... அவனுக்கு, நம்மிடத்திலே எவ்வளவு காருண்யம்? எவ்வளவு வாத்ஸல்யம்!

– இது ரங்கநாதனுடைய பெருமை!

முக்குறும்பறுத்த நம்பி என்று பெயர் திருவேங்கடமுடையானுக்கு. கியாதி, லாப, பூஜையை அறுப்பவன்!

கியாதிக்காக-புகழுக்காக- ஒரு காரியத்தைப் பண்ணுவதோ, பூஜைக்காக- மற்றவர்கள் கொண்டாடுவார்கள்- என்பதற்காகவோ அதனால் தனக்கு லாபம் என்ப



"சீசனுக்கு தகுந்தாற்போல் அவர் புத்தகம் எழுதுவார்."

"இப்போ என்ன புத்தகம் எழுதியிருக்கிறார்?"

"ஆட்சியைக் கவிழ்க்க ஆயிரம் வழிகள்."

– எஸ்.மோகன்

தற்காகவோ காரியத்தைப் பண்ணினால் அதை அவன் ஒப்புக் கொள்ள மாட்டான்.

தொண்டைமான் சக்ரவர்த்தி நித்தியம் ஆயிரம் சுவர்ண புஷ்பங்களைக் கொண்டு அவனை அர்ச்சனை செய்தார். ஒவ்வொரு புஷ்பமும் ஒரு சவரன்! அந்தத் திருவேங்கட முடையானுடைய திருவடியிலே நித்யம் சஹஸ்ரநாமத்தைச் சொல்லி அர்ச்சனை நடக்கும்.

ராத்திரி கதவைச் சாத்திவிட்டுப் போய், பிரதாஹ் காலத் திலே 'கௌசல்யா சுப்ரஜா' என்று சுப்ரபாதம் சொல்லிக் கதவைத் திறந்தால், சுவர்ண புஷ்பம் மொத்தமும் கீழே தள்ளப்பட்டிருக்கும்–பகவானுடைய திருவடியிலே மண்ணா லான ஒரு புஷ்பம் வைக்கப்பட்டிருக்கும்!

எல்லோரும் நடுங்கினார்கள்! ராஜாவே நடுங்கினான். மண்ணாலான புஷ்பத்தைக் கொண்டு பகவானுக்கு அர்ச் சனை பண்ணலாமா? யார் அப்படிப் பண்ணியது?... என்று கேள்வி. இரண்டு மூன்று நாட்கள் பார்த்தார்கள். அப்புறம் ராஜாவே சீல் வைத்துச் சாவியை எடுத்துக் கொண்டு போனான்... அதற்கடுத்த நாள் வந்து பார்த்தபோதும் அதே போல் மண்ணாலான புஷ்பம் காணப்பட்டது!

ஆஸ்தான ஜோசியர்களைக் கூப்பிட்டுக் கேட்டபோது, 'யாரோ ஒருத்தர் எங்கேயோ சமர்ப்பிப்பதை பரமாத்மா இங்கே ஏற்கிறான்' என்று சொன்னார்கள்.

எல்லோரும் அந்த ஆளைத் தேட ஆரம்பித்தார்கள். பார்த்தால், மலையடிவாரத்திலே பானை பண்ணி விற்கும் படியான ஒரு ஏழைக் குயவன், அவன் தள்ளாத வயதான 'வன். கதறி அழுகிறான்.

அவன் வீட்டிலே மண்ணாலேயே பகவான் திருவுருவம் பண்ணி வைத்திருக்கிறான்.

பானை பண்ணிவிட்டு, கையிலே மிச்சம் மீதி இருக்கிற மண்ணைச் சேர்த்து ஒரு புஷ்பம் மாதிரி பண்ணி, தான் வைத்திருக்கிற அந்த மண்ணாலான பிம்பம் முன்பு சமர்ப்பிக்கிறான்!

"ஹே பிரபோ! நீ உத்தம ஸ்தானத்தில் இருக்கிறாய்... நான் எங்கேயோ இருக்கிறேன்... உன்னுடைய திருவடியை வந்து சேவிக்கும்படியான பாக்கியம் எனக்கு உண்டா? வேறு கதி யார் எனக்கு? நோற்ற நோன்பில்லாதவன் நான்..." என்று கதறி அழுகிறான்.

"இந்த புஷ்பத்தை நீ சுவீகரித்து அனுக்கிரஹம் பண்ண வேண்டும்..." என்கிறான்.

எங்கேயோ தன்னுடைய குடிசையிலே கதறியழுது மண் ணாலான புஷ்பத்தை சமர்ப்பித்தால், தன்னுடைய ஸ்தா னத்திலே உத்தம ஸ்தானத்திலே–திருவடியிலே அதை ஏற்று, சுவர்ண புஷ்பங்கள் ஆயிரத்தெட்டையும் கீழே தள்ளி விட்டானே பரமாத்மா...! அப்போது பரமாத்மா எதைப் பார்க் கிறான்?...

உத்தமமான பக்தியைத்தான் அவன் பார்க்கிறானே யொழிய கியாதி, லாப, பூஜைக்காக ஒரு காரியத்தைப் பண்ணினால் பரமாத்மா ஏற்பானா...?

அப்படிப்பட்ட உத்தமமான பக்தி உடையவர்களுக்கே அவன் வத்ஸலனாய் இருக்கிறான்.

(தொடரும்)



"நேத்து நடந்த பாராட்டு விழாவிலே எங்க தலைவருக்குக் கொடுத்த டாக்டர் பட்டத்தை எவ்வளவு பெருந்தன்மையா திருப்பிக் கொடுத்துட்டாரு பார்த்தியா...!"

"நீ வேற... நாளைக்கே 'போலி டாக்டர்'னு சொல்லி எங்கே ஜெயிலுக்கு அனுப்பிடுவாங்களோன்ற பயம்தான்....!"

– நரேந்திரன்



# அமெரிக்காவின் கன்னியர் கிளப்கள்!

'பெண்ணுக்குத் திருமண வயது 21' என்பதை 'தேசிய கொள்கை'யாக்க நாம் முயன்று வந்த காலத்தில் அமெரிக்க பெண்கள் டீன் ஏஜ் பருவத்திலேயே அம்மாக்களாகிக் கொண்டிருந்தார்கள் – பெரும்பாலும் கல்யாணமாகாத அம்மாக்கள்!

இந்த அம்மாக்களுக்கு நோஞ்சான் குழந்தைகளே பிறந்தன. அம்மாக்கள் பள்ளிப் படிப்பை பாதியில் விட்டு விட்டு, குடும்பத்தால் கைவிடப்பட்டு அரசு ஆதரவை நம்பி வாழ வேண்டியிருந்தது. நோஞ்சான் குழந்தைகளோ தாங்களும் அம்மா வழியில் சென்று அடுத்த தலைமுறை டீன் ஏஜ் அம்மாக்களாயினர்; அல்லது வேறு தப்புத் தண்டா செய்து சிறைக்குப் போயினர்!

இந்த டீன் ஏஜ் சினிமாக்களுக்கும் அவர்களின் குழந்தைகளுக்குமாக அரசு ஆண்டுதோறும் ஏழு பில்லியன் டாலர் செலவு செய்ய வேண்டியிருந்தது.

கவலை கொண்ட அமெரிக்க அரசு, டீன் ஏஜ் கர்ப்பத்தைக் கட்டுப்படுத்தியே ஆக வேண்டும் என்று முடிவு செய்தது.

'டீன் ஏஜ் பருவத்தினருக்கு குக முறைகளை எடுத்துச் சொல்ல வேண்டும்' என்று ஒரு கோஷ்டியும் 'இல்லையில்லை; டீன் ஏஜில் தப்புத் தண்டாவுக்கெல்லாம் போகக் கூடாது என்பதைத்தான் வலியுறுத்த வேண்டும்' என்று இன்னொரு கோஷ்டியும் மோதின.

ஆனால் இரு பிரிவினரின் முயற்சியும் பலன் அளித்திருக்கிறது. 1991 தொடங்கி 1996 வரையிலான கால கட்டத்தில் டீன் ஏஜ் கர்ப்பம் பன்னிரண்டு சதவிகிதம் குறைந்திருக்கிறது! இரு பிரிவினருமே, 'இந்த நல்விளைவுக்கு நாங்கள் தான் காரணம்' என்று மார் தட்டிக் கொள்கின்றனர்.

கு.க. சாதனங்களின் உபயோகம் அதிகரித்திருப்பதற்கான சான்றுகள் உள்ளன. அதேசமயம், பல சிற்றூர்களில் 'கன்னியர் கிளப்' என்று ஆரம்பித்து 'வரதட்சிணை வாங்க மாட்டோம்' சபதம் போல 'திருமணத்துக்கு முன் உறவு கொள்ள மாட்டோம்' என்று உறுதிமொழி எடுத்துக் கொள்ளும் மினி இயக்கங்கள் நடந்துள்ளன!

எய்ட்ஸ் அச்சம் வேறு டீன் ஏஜ் பருவத்தினரை எச்சரிக்கையுடன் செயல்பட வைத்திருக்கிறது. ●

நன்றி: நியூஸ்வீக்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623;
Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)


கம்ப்யூட்டர்
கல்வி
கையேடு
கல்கி
KALKI
14.6.98
கல்கி + NIIT LIMITED
இணைந்து வழங்கும் இலவச இணைப்பு

# கம்ப்யூட்டர் கல்வி கையேடு

**எஸ்.**டி.டி. பூத்தில் பில் போடுவது முதல், பொக்ரானில் அணுகுண்டுப் பரிசோதனை நடத்துவது வரையில் அனைத்து விஷயங்களிலும் இன்று கம்ப்யூட்டர் நுழைந்து விட்டது. கம்ப்யூட்டர் பற்றிய அறிவு இல்லையெனில், தாழ்வுமனப்பான்மையே வந்துவிடுகிற நிலைமை! எல்லோருக்குமே, அது என்ன கம்ப்யூட்டர்? என்று தெரிந்து கொள்ளுகிற ஆர்வம் அதிகரித்துக் கொண்டே வருகிறது. டாக்டர்கள், இன்ஜினீயர்கள், சார்டர்டு அகௌண்டென்ட்கள் போல, கம்ப்யூட்டர் ஸ்பெஷலிஸ்ட்டுகளுக்கும் உள்நாட்டிலும் சரி, அயல்நாடுகளிலும் சரி ஏக கிராக்கி. அது மட்டுமில்லை; டாக்டர்களும், இன்ஜினீயர்களுமே கூட, கம்ப்யூட்டர் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டியது காலத்தின் கட்டாயம் ஆகிவிட்டது.

வெறும் பி.ஏ.,பி.எஸ்ஸி. பட்டதாரிகள் கூட, கம்ப்யூட்டர் மையங்களில் சேர்ந்து படித்து, வேலை வாய்ப்பு மார்க்கெட்டில் தங்கள் மதிப்பைக் கூட்டிக் கொள்ளுகிறார்கள். இதை உணர்ந்து,

இன்று நாடு முழுக்க, ஏகப்பட்ட கம்ப்யூட்டர் கல்வி நிறுவனங்கள் தொடங்கப்படுகின்றன. நாளிதழ்களில் வெளியாகிற விளம்பரங்களோ, வியாபாரப் போட்டியின் கடுமை காரணமாக, 'இலவசம்', 'தள்ளுபடி', 'வேலை வாய்ப்பு கியாரண்டி' என்று கவர்ச்சிகரமான வாக்குறுதிகளை அள்ளி வழங்கி, மக்களை – குறிப்பாக இளையதலைமுறையினரை எளிதில் முடிவெடுக்க முடியாதபடி திணற அடிக்கின்றன. இத்தகைய குழப்பமான சூழ்நிலையில், இளையதலைமுறையினருக்கு கம்ப்யூட்டர் துறையில் என்னென்ன விதமான கோர்ஸ்கள்



நடத்தப்படுகின்றன? அவற்றில் என்ன விதமான விஷயங்கள் சொல்லித் தரப்படுகின்றன? அவற்றைப் படித்தால், வேலை வாய்ப்புகள் எப்படி? போன்ற உபயோகமான தகவல்களைத் திரட்டித் தருவதுதான் இந்த சிறு கையேட்டின் நோக்கம். படியுங்கள்; பலன் பெறுங்கள். ஆல் தி பெஸ்ட்!

## நுழைவுத் தேர்வு என்கிற பூட்டு

இன்று, முன்னணி கம்ப்யூட்டர் நிறுவனங்கள், தம் பயிற்சி மையங்களுக்கு வந்து, அப்ளிகேஷனைப் பூர்த்தி செய்து, கொடுப்பவர்களையெல்லாம் உடனே வகுப்பில் சேர்த்துக் கொள்வதில்லை. நுழைவுத் தேர்வு வைத்துத்தான் எடுக்கிறார்கள்!

"நுழைவுத் தேர்வு என்றதும், ஏதோ ஐ.ஏ.எஸ். பரீட்சை போல நினைத்துக் கொண்டு விட வேண்டாம். ரொம்ப சிம்பிளாகத்தான் இத் தேர்வு வடிவமைக்கப்பட்டிருக்கும். கணிதம், மற்றும் தர்க்க ரீதியில் அணுகும் போக்கு – இவைதான் இந்த நுழைவுத் தேர்வுகளில் பரிசோதிக்கப்படும். 'Spoken English' எனப்படும் சுலபமான ஆங்கிலத்தில் பேசினால் புரிந்து கொள்ளும் தகுதி வேண்டும். ஆங்கிலத்தில் பெரிய




புலமையெல்லாம் தேவையில்லை. ஆங்கில அறிவு இருந்தால் கூட போதும் என்று தமிழ் போதனா மொழியிலேயே சில மையங்களில் கம்ப்யூட்டர் பயிற்சி அளிக்கிறார்கள்.

## ஆறு வருடத்தை வீணாக்குவானேன்?

மூன்று வருட பட்டப் படிப்பு; அதன்பின் மூன்று வருட எம்.சி.ஏ. என்று ஆறு வருடங்கள் படிப்பது வேஸ்ட் என்று ஒரு சித்தாந்தம்!

கம்ப்யூட்டர் துறையில் நுழைந்து, பணிபுரியும் இலக்கு ஒருவருக்கு




இருக்குமானால், அது சம்பந்தமான படிப்பைத் துவங்குவதற்குச் சரியான கால கட்டம் பிளஸ் 2 ஸ்டேஜ்தான். பிளஸ் 2 முடித்த பிறகு ஆறு செமஸ்டர்கள் அல்லது மூன்று வருடங்களில் கம்ப்யூட்டர் பற்றிச் சொல்லிக் கொடுத்து, உங்களை முழு நேர கம்ப்யூட்டர் நபராய் உருவாக்க முடியும் என்கிறார்கள் கம்ப்யூட்டர் துறை வல்லுனர்கள்.

என்.ஐ.ஐ.டி. முதலிய நாட்டின் முன்னணி கம்ப்யூட்டர் பயிற்சி நிறுவனங்கள், இத்தகைய கோர்ஸ்களுக்கே முக்கியத்துவம் கொடுத்து வருகின்றன. இத்தகைய முன்னணி நிறுவனங்களிலிருந்து, ஆண்டுதோறும் சுமார் ஒரு லட்சம்

இளைஞர்கள் படிப்பை முடித்து விட்டு வெளியேறுகிறார்கள். இவர்களுக்கு வெகு சுலபமாக வேலை வாய்ப்புகள் கிடைக் கின்றன என்று புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன.

இப்போது நிறைய மாணவர்கள், பிளஸ் 2வுக்குப் பிறகு, ஏதாவது ஒரு டிகிரி படித்துக் கொண்டே பகுதி நேரமாய் மூன்றாண்டு கம்ப்யூட்டர் கல்வியும் கற்கிறார்கள். மூன்றாண்டு முடியும் போது, பட்டதாரியாக மட்டுமில்லாமல், கூடுதலான மூன்றாண்டு கம்ப்யூட்டர் கல்வி என்ற இறகும் அவர்கள் தொப்பியில்.

## கம்ப்யூட்டர் அறிவு ப்ளஸ்....

இதுபோன்ற நீண்ட கால கோர்ஸ்களில் சி++, விண்டோஸ், எம்.எஸ். ஆபீஸ், விஷுவல் பேசிக்... என்று, அத்தனைவிதமான விஷயங் களும் சொல்லித் தரப்படுகின்றன. அதாவது கம்ப்யூட்டர் இயக்கத்துடன் கம்ப்யூட்டர் மொழியும் கற்றுத் தரப்படுகிறது. அதோடு கூடவே பர்சனாலிடி டெவலப்மெண்ட் போன்ற இதர பயிற்சிகளும் தரப்படுகின்றன என்பதும் கவனிக்கத்தக்கது.

கம்ப்யூட்டர் சம்பந்தமான

பாடங்களைச் சொல்லித் தருவதுடன், கம்ப்யூட்டர் சம்பந்தமாக தலைப்புகள் கொடுத்து, கட்டுரைகள் தயார் செய்யச் சொல்லுவார்கள். இதற்காக அந்தந்த கல்வி மையத்தில் உள்ள லைப்ரரிகளில் உட்கார்ந்து, கட்டுரைக்கான தகவல்களைச் சேகரிக்க வேண்டும். சேகரித்த தகவல்களை வைத்து, கட்டுரையாக்கி, அதைக் குறிப்பிட்ட வகுப்பில் உள்ள மற்ற மாணவர்கள் முன்னிலையில், 'பிரசன்ட்' செய்ய வேண்டும். அந்தக் கட்டுரைகளில் கூறப்பட்ட விஷயங்கள் குறித்து சக மாணவர்களுக்கு எழும் சந்தேகங்களை, தக்கபடி விளக்கம் கூறித் தீர்த்து வைக்க வேண்டும்.



இந்த 'பிரசன்டேஷன்' கூட, ஏனோதானோ என்று, மாணவர்கள் கூடியிருந்து ஜாலியாக பேசிப் பிரிகிற அரட்டை அரங்கமாக இல்லாமல், 'புரொஃபெஷனலாக' இருக்கும் என்பது முக்கியம். மாணவர்கள் நேர்த்தியாக உடையணிந்து, டை கட்டிக் கொண்டு, தயக்கமின்றிச் சரளமாய், கேட்பவருக்கு நன்கு புரியும்படி விஷயத்தை எடுத்துச் சொல்ல வேண்டும்! வெறும் ஏட்டுக் கல்வியைக் கடந்து, நடைமுறைக்கு, பணிக்காலத்தில் உதவவே இந்த வகையான பயிற்சி.

நீண்ட கால கோர்ஸ்களில் சேர்ந்து படிக்கிற மாணவர்களுக்கு, 'ஓவர் ஆல் டெவலப்மென்ட்' என்று கூறப்படும் இந்த ஒட்டுமொத்த மேம்பாடு, வேலை வாய்ப்புக்கான 'விஸா' என்றே சொல்லலாம்.

## காஸ்ட்லியா? இல்லையா...?

கட்டணம் என்று பார்க்கிற போது, இத்தகைய நீண்ட கால கோர்ஸ்கள் 'காஸ்ட்லி' என்கிற எண்ணம் தோன்றுவது இயற்கை. ஐம்பதாயிரம் வரை செலவாகும் என்றால் சும்மாவா? ஆனால், "நல்ல சரக்கு என்றால் மலிவு விலையில் கிடைக்குமா? இல்லை மலிவு விலையில் கிடைப்பது தரம்

உயர்வானதாக இருப்பது சாத்தியமா?'' என்று கேட்கிறார் ஒரு முன்னணி கம்ப்யூட்டர் பயிற்சி மையத்தின் நிர்வாக அதிகாரி.

ஒருசில கம்ப்யூட்டர் பயிற்சி மையங்கள் போதிய அடிப்படை வசதி இல்லாமல், இயங்கி வருகின்றன. மாணவர்களுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி அளிப்பதற்குப் போதிய அனுபவம் வாய்ந்த ஆசிரியர்கள் (இவர்களை ஃபாகல்டி என்று குறிப்பிடுவார்கள்) தட்டுப்பாடு நிலவும் மையங்கள் உண்டு. இன்னும் சிலவற்றிலோ, தியரியாக பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டே போவார்களே தவிர, கம்ப்யூட்டரில் ஒவ்வொரு மாணவருக்கும் பிரத்யேகமாக நேரம் ஒதுக்கி, பிராக்டிகல் பயிற்சி தர மாட்டார்கள். சித்திரமும் கைப்பழக்கம் என்பது போல, கம்ப்யூட்டரின் முன் அமர்ந்து, கற்றவற்றை மாணவர்கள் பயன்படுத்துகிறபோதுதான், பயிற்சி பலனளிக்கும்.

கிளச், கியர், பிரேக், ஆக்ஸலரேட்டர் என்று பாகங்களைத் தெரிந்து வைத்துக் கொண்டு வாகனத்தை ஓட்டாமலே இருந்தால் பழகுமா...? அதுபோல்தான் கம்ப்யூட்டரும். என்னதான் படித்தாலும் திரைமுன் அமர்ந்து கீ



கம்ப்யூட்டர் கிளாஸ்
எத்தனை மணிக்குன்னு
கேட்டா, கம்ப்யூட்டரைப்
பார்த்துத்தான் சொல்ல
ணும்கிறியே...

போர்டைக் கையாள
கையாளத்தான் தேர்ச்சி!

எனவே, கூடுதலான கட்டணம் என்கிற ஒரே காரணத்துக்காக, தரமான கம்ப்யூட்டர் கல்வியை இழந்து விடாதீர்கள். குடும்பச் சூழ்நிலை காரணமாக உங்களால், அத்தகைய கோர்ஸ்களில் சேர முடியாத நிலைமையெனில் சம்பந்தப்பட்ட கம்ப்யூட்டர்

பயிற்சி மைய ஆலோசகர்கள் அல்லது நிர்வாகிகளை நேரில் சந்தித்து, உங்கள் வசதியின்மை பற்றி எடுத்துச் சொன்னால், கட்டணத்தில் தள்ளுபடி அல்லது ஸ்காலர்ஷிப் போன்ற உதவி கிடைக்கக்கூடும்.

## படிப்பை முடித்தபின் கம்பெனிகளில் வேலை + பயிற்சி

**க**ம்ப்யூட்டர் தொடர்பான தியரி, நடைமுறைப் பயிற்சி. பெர்ஸனாலிடி டெவலப்மெண்ட் என்ற மூன்று அம்சங்களையும் வழங்குகிற பயிற்சித் திட்டத்தைத் தேர்வு செய்து படிப்பது நல்லது. இந்தப் படிப்பு முடிந்த பிறகு, சம்பந்தப்பட்ட கம்ப்யூட்டர் சென்டரே மாணவர்கள் ஏதேனுமொரு அலுவலகத்தில் சென்று பணியாற்றும் அனுபவம் பெறுவதற்கும் ஏற்பாடு செய்வார்கள்; செய்ய வேண்டும்! இந்தப் பணிப் பயிற்சி ஆறு மாதம் அல்லது ஒரு வருடம் நீடிக்கும். டாக்டர்களுக்கு ஹவுஸ் சர்ஜன் பயிற்சி, அட்வகேட்களுக்கு ஜூனியர் போலத்தான் இந்தப் பயிற்சி எனலாம்.

வகுப்பறையில் கற்றுக் கொண்டதை, அந்தக் கம்பெனிகளில் பிராக்டிகலாய்ப் பயன்படுத்த வாய்ப்பு கிடைக்கும். அந்தக்

கம்பெனியின் முழு நேர ஊழியர் இல்லையென்றாலும் கூட, அங்கே சம்பளம் தரப்படும்! இந்தக் காலகட்டத்தில், நமது வேலைத்திறன் எப்படி இருக்கிறது என்பதை பயிற்சி அளித்த கம்ப்யூட்டர் நிறுவனமும், நாம் பணிபுரியும் நிறுவனமும் கூர்ந்து கவனிக்கும். அறிவுத்திறன், திறமை, செய் நேர்த்தி, சகாக்களுடன் பணியாற்றும் பாங்கு, ஒழுக்கம் இவை நுணுக்கமாய் கண்காணிக்கப்படும். பயிற்சிப் பணிக்காலம் முடிகிறபோது, அதே கம்பெனியில் வேலை கிடைக்க நல்ல வாய்ப்பு இருக்கிறது. அவ்வாறு கிடைக்காது போனாலும் திறமை பிளஸ் பணி அனுபவம் இவற்றின் அடிப்படையில், வேறு இடத்தில் பணி கிடைக்க வாய்ப்புகள் அதிகரிக்கின்றன.

இன்றைய உலகில் நல்ல வேலை கிடைப்பது என்பது அத்தனை சுலபமான விஷயமில்லை. தவிர கடுமையான போட்டி வேறு. அதனால், நமது திறமையைச் சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபித்தால் ஒழிய, வாழ்க்கைப் படகு சுமுகமாய் ஓடாது.

**இனி, குறுகிய கால பயிற்சிகளாக அளிக்கப்படுகிற பலவிதமான கம்ப்யூட்டர் சம்பந்தப்பட்ட படிப்புகள் பற்றி**

## எம்.எஸ். டாஸ் :

இது மைக்ரோ சாஃப்ட் டிஸ்க் ஆபரேடிங் சிஸ்டம் என்பதன் சுருக்கம். கம்ப்யூட்டரை உயிரூட்டு கிற சிஸ்டம் இது. கம்ப்யூட்டரில் நாம் பதிவுசெய்து வைத்திருக்கும் டேட்டாக்களை தேவைப்பட்ட போது, வெகு சகஜமாய் கையாளு வதற்கு இந்த சிஸ்டம் மிகவும் உப யோகமாக உள்ளது. தனியாக இது சொல்லித் தரப்படுகிறது என்றா லும், எந்த ஒரு அடிப்படை கம்ப் யூட்டர் கோர்ஸில் சேர்ந்தாலும் இது அதில் ஒரு அங்கமாய் இருக்கும்.

## வோர்டு ஸ்டார் :

இதைக் கடிதம் எழுதுவதற்குப் பயன்படும் ஒரு பேக்கேஜ் என்று கூறலாம். இதனை ஆங்கிலத்தில் மட்டுமே பயன்படுத்த முடியும். டைப்பிங் அனுபவம் அவசியம். சின்னச் சின்ன இன்ஸ்டிடியூட் களில் கூட வோர்டு ஸ்டார் சொல்லித் தருகிறார்கள். ஐந்நூறு ரூபாய் செலவில் ஒரே வாரத்தில் கூடக் கற்றுக் கொண்டு விடலாம். ஆனால், இதை மட்டுமே கற்றுக் கொண்டால் நிச்சயமாக வேலை கிடைத்து விடாது! காரணம் வோர்டு ஸ்டார் இன்று பழைய சமாசாரம் ஆகி விட்டது.

# லோட்டஸ் 1–2–3 :

இதை ஒரு மெகா கால்குலேட்டருக்கு இணையாகச் சொல்லலாம். பலவிதமான புள்ளி விவரங்கள் சேகரித்து வைக்கப் பட்டுள்ளபோது, தேவையானவற்றை மட்டும், விரும்பியவிதமாய்ப் பிரித்து எடுத்து, அட்டவணைகளாய்த் தயாரிக்க உதவுகிறது. அட்ட வணையை வரை படங்களாய் மாற்றுவதும் சாத்தியம். அலுவலகங் களில் இதன் பயன்பாடு அதிகரித்து வருகிறது. இன்று லோட்டஸ் 1–2–3 கற்றுக் கொள்ள வேண்டும்தான். ஆயிரம் ரூபாய்க்குக் கூட கற்றுக் கொள்ளலாம். ஆனால் அது மட்டுமே போதுமானதல்ல.



எல் கே ஜி யில நல்ல மார்க் வாங்கி பாஸ் பண்ணிட்டேன்! நீ பிராமிஸ் பண்ணின படி கம்ப்யூட்டர் வந்தாகணும்!

வோர்டு ஸ்டாரைப் போல அவுட்டேட்டட் விஷயம்தான் இதுவும்.

## விண்டோஸ் – 95 :

இது கம்ப்யூட்டரில் மிக முக்கியமான ஆபரேடிங் சிஸ்டம். ரிமோட் கண்ட்ரோலுடன் இணைந்த கலர் டெலிவிஷன் இருக்கிறது. டெலிவிஷனும், ரிமோட்டும் எப்படி இயங்குகின்றன என்கிற தொழில்நுட்ப அறிவு நமக்கு இல்லைதான். ஆனாலும் கூட, ரிமோட்டை வைத்துக் கொண்டு, எப்படி டெலிவிஷனை இயக்குவது என்று தெரிந்திருக்க வேண்டியது எவ்வளவு அவசியமோ அத்தனை அவசியம் விண்டோஸ் 95 பற்றி தெரிந்திருக்க வேண்டியது! விண்டோஸ் 95யின் மேம்படுத்தப்பட்ட வடிவம்தான் விண்டோஸ் 98. ஆங்கிலத்தில் மட்டுமின்றி தமிழ் உட்பட சுமார்



40 மொழிகளில் விண்டோஸ் 98ஐ பயன்படுத்த முடியும் சாத்தியம் இருக்கிறது என்கிறார்கள். ஒரே வாரம் போதும் விண்டோஸ் கற்றுக் கொள்ள. கட்டணம் ரூபாய் ஆயிரம்தான்.

## எம். எஸ். ஆபீஸ் :

**மை**க்ரோ சாஃப்ட் ஆபீஸ் என்பதன் சுருக்கம்தான் எம்.எஸ். ஆபீஸ். இதுவும் ஒரு வகை பிரபலமான பாக்கேஜ். கம்ப்யூட்டர் மயமாக்கப்பட்ட எந்த ஆபீஸ் என்றாலும் அங்கே எம்.எஸ். ஆபீசுக்கு இடம் உண்டு. டைப்பிஸ்ட்கள், பர்சனல் செகரட்டரிகளுக்கு மிகவும் உபயோகமானது. வெகு எளிமையானது இது. கம்பெனிகளில் மேலதிகாரிகளின் எங்கேஜ்மெண்ட்கள் தொடங்கி, அனைத்து விவரங்களையும் சேமித்து வைத்து நொடியில் தெரிந்து கொள்ள இது உதவும். டைப்பிங் அனுபவம் உள்ளவர்கள் வெகு எளிதாக இதனைக் கற்றுக் கொண்டு விடலாம்.

எம். எஸ். ஆபீஸ் உதவியுடன் ஸ்லைடுகள் தயாரிப்பது ரொம்ப சுலபம். உதாரணமாய் உங்கள் கம்பெனியில் சேல்ஸ் கான்பிரன்ஸ் நடக்கிறது. அதில் விற்பனை சம்பந்தமான அத்தனை புள்ளி விவரங்கள், திட்டங்களை,

கவர்ச்சிகரமான ஸ்லைடுகளாக உருவாக்கி, திரையிட்டு, சொல்ல வேண்டிய விஷயங்களை எளிமையாய் அதே நேரம் அழுத்தமாய்ச் சொல்ல முடியும். இரண்டாயிரம் ரூபாய்க்குக் கூட கற்றுத் தருகிறார்கள். முறைப்படி பயிற்சி மையத்துக்குப் போய்த்தான் கற்றுக் கொள்ள வேண்டும் என்று இல்லை. கம்ப்யூட்டரில் கொஞ்சம் பழக்கமிருந்தால் போதும். எம். எஸ். ஆபீஸை ஏற்கெனவே அறிந்த ஒருவரின் உதவியுடன் இதைக் கற்றுக் கொண்டு விடலாம்!

## ஆரக்கிள்

**ஆ**ரக்கிள் கார்ப்பரேஷன் என்பது கம்ப்யூட்டர் உலகில் முக்கியமான அமெரிக்கக் கம்பெனி. அது உருவாக்கிய கம்ப்யூட்டர் மொழிதான் ஆரக்கிள். இதில் லேட்டஸ்ட், ஆரக்கிள் 8.0 வெர்ஷன் என்பது. (ஒரே மொழி அல்லது ஸாஃப்ட்வேரின் அடுத்தடுத்த மேம்பட்ட நிலைகளுக்குத்தான் 'வெர்ஷன்' என்று பெயர். வெர்ஷன் ஒன், டூ, த்ரீ. 3.1, 3.2 என்று எண் உயர்ந்து கொண்டே போகும்).

இன்றைக்கு இந்தியாவிலும், அமெரிக்காவிலும் ஏகப்பட்ட டிமாண்டு இதற்குத்தான் என்று கம்ப்யூட்டர் நிபுணர்கள்

கூறுகிறார்கள். ஆரக்கிளுடன் இணைந்தது 'டெவலப்பர் 2000'. இரண்டையும் சேர்த்துப் படித்தால் தான் பலனுண்டு. பதினைந்து நாள் முழு நேரப் பயிற்சியாக இவை அளிக்கப்படுகின்றன. கட்டணம் பத்து முதல் பதினைந்தாயிரம் வரை ஆகலாம்.

எடுத்த எடுப்பிலேயே ஆரக்கிள் படித்தால் பயனில்லை.
கம்ப்யூட்டரில் வேலை அனுபவம் தேவை.

## விஷுவல் பேஸிக் :

பிரபல அமெரிக்கக்




கம்பெனியான மைக்ரோ சாஃப்ட்டின் தயாரிப்பான விஷுவல் பேசிக், ஒரு புரோகிராமிங் லாங்குவேஜ்.

அதாவது கம்ப்யூட்டர் ஆணைத் தொடர்களை எழுதுகிற மொழி. கம்ப்யூட்டர்கள் முன்னேற முன்னேற ஆணைத் தொடர்களும் முன்னேறும். அதை எழுதும் மொழியும் முன்னேறும். லேட்டஸ்ட் மொழிகளுள் ஒன்று விஷுவல் பேசிக். இன்றைக்கு மிக அதிக டிமாண்டு இதற்கு! காரணம் இதனைப் பயன்படுத்துவதற்கு குறைந்த நேரமே போதுமானது. மேலும் விண்டோஸ் என்ற கம்ப்யூட்டர் இயக்க அமைப்புக்கு இது இன்றியமையாதது. கம்ப்யூட்டர் துறையில் இது விண்டோஸ் யுகம்!

விஷுவல் பேசிக்கை மட்டுமே படித்தால் போதாது. பேசிக், சி, பாஸ்கல் போன்ற கம்ப்யூட்டர் மொழியறிவுடன் இணைந்தே இதனைப் படிக்க முடியும். ஆரம்ப கட்டம், புரோகிராமிங், அட்வான்ஸ்டு என்று மூன்று கட்டங்கள் கொண்டது. பதினைந்து நாள் முழு நேரப் படிப்பாகச் சொல்லித் தரப்படுகிறது. பார்ட் டைம் கோர்ஸ் என்றால் முப்பது நாட்கள். ஐந்திலிருந்து பத்தாயிரம் வரை செலவு பிடிக்கும். பட்டப் படிப்பு முடித்தபின்தான் இந்தக் கோர்ஸ் சேர முடியும். எதையும் அலசி ஆராய்கிற அறிவு இந்தக்

கோர்ஸில் சேர அடிப்படைத் தகுதி.

## சி, சி++...

இதை "ஹை லெவல் கம்ப்யூட்டர் மொழி" என்கிறார்கள். அடுத்த தலைமுறைகளின் மொழி இதுதான் என்று குறிப்பிடப்படுகிறது. 'சி'யின் மேம்படுத்தப்பட்ட வடிவம் சி++. இவற்றைக் கற்றுக் கொள்ள டிகிரியாவது படித்திருக்க வேண்டும். இவற்றை நாலு வார கோர்ஸ்களில் சொல்லித் தந்து விடுகிறார்கள். கட்டணம் எவ்வளவு? பத்தாயிரம் ரூபாய். இம்மொழிகள் படித்த திறமைசாலியான புரோகிராமர்கள் இந்தியாவில் மட்டுமின்றி சிங்கப்பூரிலும், அமெரிக்காவிலும் கூட அதிக அளவில் தேவைப்படுகிறார்கள்.

## யூனிக்ஸ் :

இதுவும் ஒரு ஆபரேடிங் சிஸ்டம். 68-ல் பிள்ளையார் சுழி போடப்பட்டு, 71-ம் வருஷம் அறிமுகமாகி, இன்று வரை ரொம்ப பாபுலராய் புழங்கி வருகிறது யூனிக்ஸ். வளைகுடாப் போரின் போது ஸ்கட் போன்ற ஏவுகணைகளில் இந்த யூனிக்ஸ் சிஸ்டம்தான் பயன்படுத்தப்பட்டது என்பது ஒரு உபரித் தகவல்.

இன்டர்நெட் அறிமுகமானதையடுத்து, யூனிக்ஸின் பயன்பாடு அதிகரித்துள்ளது. எவரும் எளிதில் யூனிக்ஸ் கற்றுக் கொள்ளலாம். ஒரே மாதம் – ஐந்து முதல் எட்டாயிரம் செலவு! ஃபடாபட்!

## டிடிபி (DTP) :

டெஸ்க் டாப் பப்ளிஷிங் என்பதுதான் சுருக்கமாய் இப்படிக் குறிப்பிடப்படுகிறது. ஈய எழுத்துக்களை அச்சுக்கோத்து நடத்திக் கொண்டிருந்த அச்சகங்களைப் புறமுதுகிட்டு ஓட வைத்து, பதிப்பக உலகில் பெரும் புரட்சியே செய்த பெருமை இந்த டி.டி.பிக்கு உண்டு. விளம்பர உலகிலும் டி.டி.பி.க்கு நல்ல வரவேற்பு. ஆங்கிலத்தில் மட்டும் என்று இல்லாமல், இந்திய மொழிகளில் தமிழ் உள்ளிட்ட பதினாலும் சேர்த்து மொத்தம் நூற்றுப் பத்து உலக மொழிகளில் டி.டி.பி. சாத்தியமாகியுள்ளது. பதிப்பக உலகிற்கு வரப்பிரசாதம். துண்டுப் பிரசுரம் முதல், கம்பெனிகளின் ஆண்டறிக்கை வரை அனைத்தும் இன்று டி.டி.பி. மயம் என்பதால் வேலை வாய்ப்புகள் கணிசம். சுமார் நாலாயிரம் செலவு செய்து ஒரே மாதத்தில் கற்றுக் கொண்டு விட்டால் வேலை கிடைப்பது

எளிது. டைப்பிங் அனுபவம் அடிப்படைத் தேவை என்பதை மறக்க வேண்டாம்.

## மல்டி மீடியா :

அன்று முக்காலா... முக்காபுலா பாட்டிலும் சரி. இன்று ஜீன்ஸ் படத்திலும் சரி, 'மல்டி மீடியா'வின் அபார சக்திகளை தமிழ்கூறும் நல்லுலகம் மட்டுமின்றி அகில இந்தியாவும் ஆச்சரியமாய்ப் பார்த்தது. மல்டி மீடியா என்பது என்ன? குரல், இசை, டேட்டா, கிராஃபிக்ஸ், அனிமேஷன், வீடியோ இத்தனை சமாசாரங்களையும் கம்ப்யூட்டர் உதவியுடன் ஒருங்கிணைக்கப்பட்ட வடிவமே



மல்டி மீடியா. நிழலை, ஏறத்தாழ நிஜமாக்கும் முயற்சியில் இது ஒரு மைல் கல்.

மல்டி மீடியா என்பது மேலே சொன்னது போல சினிமாவுடன் நின்று விடவில்லை. இதன் பயன்கள் ஏராளம். சி.டி. ராம்கள் தயாரிப்பில் மல்டி மீடியா உதவுகிறது. தவிர, ஏதேனும் புதிய நிறுவனம் குறித்த அறிமுகம், புதிய புராஜக்ட் ரிப்போர்ட் என்று எதைத் தயாரித்தாலும் அதை ஒரு நவீன ஹோட்டலின் ஏ.ஸி. அறையில் அட்டகாசமான கிராஃபிக்ஸ், குரல் இசை கலவையில் அறிமுகம் செய்து கஸ்டமர்களை மயக்க மல்டி மீடியா இன்று தேவை. விளம்பர யுகத்தின்



"மெடிகல் சீட் கேட்டா, கம்ப்யூட்டரைத் தட்றாரே தலைவர்..."
"ரேட்டெல்லாம் பதிவு பண்ணி வெச்சிருக்காரே!"

புரட்சிகரமான ஆயுதம் இந்த மல்டி மீடியா! ஆகவே, இன்று மல்டி மீடியா கோர்ஸ்களுக்கு நல்ல கிராக்கி.

இதைப் படிக்க அடிப்படைத் தேவை ஏதாவது ஒரு டிகிரி. தவிர மல்டி மீடியா கோர்ஸ் சேர விரும்புகிறவர்கள், கிரியேடிவ்வாக யோசிக்கக்கூடியவர்களாக இருக்க வேண்டும் என்பது கட்டாயம். காரணம் மல்டி மீடியா என்பது ஏதோ படித்து விட்டு, படித்தவற்றை அப்படியே மெஷின் போல பயன்படுத்தக்கூடிய விஷயம் கிடையாது.

பயிற்சிக் காலம் சுமார் ஒரு மாதம்தான்! ஆனால் கட்டணம் சுமார் இருபத்தி ஐயாயிரம் வரை ஆகிறது! அப்படியானால் இதன் மகிமையைக் கணக்குப் போட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள்!

மல்டி மீடியாவின் அட்வான்ஸ் லெவல் என்று சிலிகான் கிராபிக்ஸ் கோர்ஸைக் குறிப்பிடுகிறார்கள். மூன்று மாதம் பயிற்சிக் காலம். கட்டணம் சுமார் எழுபத்தையாயிரம் முதல் 95 ஆயிரம் ரூபாய் வரை ஆகிறதாம்.

## இன்டர்நெட் பயிற்சி :

கம்ப்யூட்டர் வைத்திருந்து, இன்டர்நெட் கனெக்ஷன் வாங்கி விட்டால், உலகம் நம் விரல் நுனியில் என்கிற இன்றைய




சூழ்நிலையில், இன்டர்நெட்டில், தகவல் மேய்வது எப்படி என்பதல்ல பிரச்னை. தமக்கென ஒரு தகவல் இல்லம் உருவாக்கும் ஆர்வம் இன்று பெருகி வருகிறது. அவ்வப்போது, அந்தத் தகவல்கள் 'அப்டேட்' ஆக்கப்பட வேண்டியதும் அவசியம். இது தவிர இன்டர்நெட் மூலம் வியாபாரம் பெருகவும் வழி உண்டு. நம் ஊர் டெலிவிஷன்களில் டெலிஷாப்பிங் என்று கண்ட பொருள்களையும் விற்றுத் தள்ளுகிறாற்போல, இன்டர்நெட் மூலமும் வியாபாரத்தைப் பெருக்க முடியும். (இதை ஈ-காமர்ஸ் என்கிறார்கள்!) இதற்கெல்லாம் பயிற்சி பெற்ற ஆசாமிகள்

அவசியம்தானே! ஒரு மாதப் பயிற்சிக்கு ஐயாயிரம் முதல் ஏழெட்டு வரை ஆகும்.

## எம்.சி.ஏ. கதவு திறந்தது!

கம்ப்யூட்டர் அறிவு பெற்றவர்கள் தேவை நாளுக்கு நாள் கூடிக் கொண்டே போகிறது. பி.ஈ. (கம். சயின்ஸ்) சீட்களின் எண்ணிக்கையோ தேவையோடு ஒப்பிடுகிற போது மிக சொற்பம். இப்படிப்பட்ட சூழ்நிலையில், வரப்பிரசாதமாய் வந்து சேர்ந்ததுதான் எம்.சி.ஏ. என்கிற மாஸ்டர் ஆஃப் கம்ப்யூட்டர் அப்ளிகேஷன்ஸ் படிப்பு. யூனிவர்சிடி கிரான்ட் கமிஷன்

### ஆலோசகரை அணுகவும :

கம்ப்யூட்டர் வகுப்பில் சேர வேண்டும் என்ற ஆசை இருக்கும். வசதியும் இருக்கும். ஆனால், எந்தக் கோர்ஸில் சேருவது, அதை முடித்த பிறகு வேலை வாய்ப்புகள் எப்படி என்ற ஐடியா இருக்காது பலருக்கு. இவர்களுக்கு ஆலோசனை தர யாராவது இருக்கிறார்களா? முன்னணி கம்ப்யூட்டர் பயிற்சி நிலையங்களில், மாணவர்களின் தேவையறிந்து, ஆலோசனை கூறுவதற்கென்றே பிரத்யேகமான 'கவுன்சிலர்' என்கிற ஆலோசகர் இருப்பார். இவர், ஒவ்வொருவருடைய குடும்பப் பின்னணி, கல்விப் பின்னணி உட்பட பல்வேறு விஷயங்களையும் கேட்டறிந்து, அந்த மாணவர் அல்லது மாணவியின் தேவைக்கு ஏற்ப எந்த கோர்ஸ் படிக்கலாம் என்று ஆலோசனை கூறுவார்.

### உஷாராய் இருக்கணும்!

**ஒரு கம்ப்யூட்டர் பயிற்சி நிலையத்தில் எப்படிப்பட்ட வசதிகள் உள்ளன? எப்படிச் சொல்லிக் கொடுக்கிறார்கள் என்பதைத் தெரிந்து கொண்டுதான் அங்கே சேர வேண்டும். இல்லையெனில் பணம் வீண்; படித்தும் பயனிருக்காது! எனவே, அந்த பயிற்சி மையத்தில் ஏற்கெனவே படித்த மாணவர்களை விசாரித்து விவரங்களைத் தெரிந்து கொள்ளலாம். தற்போது பயிலும் மாணவர்களிடமும் பேசி விவரம் அறியலாம். விளம்பரங்கள், வண்ண புரோஷர்கள் இவற்றை மட்டுமே பார்த்து ஏமாந்து போகக் கூடாது.**

புண்ணியம் கட்டிக் கொண்டது இந்த விஷயத்தில். இன்று நாடெங்கும் உள்ள அரசு மற்றும் தனியார் கலை, அறிவியல் கல்லூரிகளில், எம்.சி.ஏ. படிப்புத் தொடங்க அனுமதி வழங்கப்பட்டு, ஜாம் ஜாம் என நடக்கிறது. மூன்று வருடப் படிப்புக்கு இன்று ஏகப்பட்ட கிராக்கி. சீட் வாங்குவது பகீரதப் பிரயத்தனமாக இருக்கிறது. சில தனியார் கல்லூரிகளில் சுயநிதித் திட்டத்தின் கீழ், கணிசமான ஃபீஸ் வாங்கிக் கொண்டு இந்த படிப்பைச் சொல்லித் தருகிறார்கள்!

கம்ப்யூட்டர் பற்றிய அடிப்படை அறிவு தொடங்கி, கம்ப்யூட்டரைக்

கையாளும் பாண்டித்தியம் வரை எம்.சி.ஏ. முடித்தவர்களுக்குக் கிடைக்கிறது. கம்பெனிகளில் எம்.சி.ஏ. பட்டதாரிகளுக்கு, நல்ல வரவேற்பு. முழு நேரப் படிப்பாக மட்டுமின்றி, பகுதி நேரப் படிப்பாகவும் எம்.சி.ஏ. படிக்க முடிகிறது.

மூன்றாண்டு கால எம்.சி.ஏ. படிக்க மொத்தம் முப்பதாயிரம் வரை கூட செலவாகும் என்கிறார் ஒரு தனியார் கல்லூரி எம்.சி.ஏ. மாணவர்.

## 2000 வருடத்துப் பிரச்னை!

இப்போதுள்ள வழிமுறைகளின்படி கி.பி. 2000-ம் ஆண்டை, கம்ப்யூட்டர்கள் "00" என்று குறிப்பிடும் என்பதால் ஏற்படப் போகிற பிரச்னை பற்றி உலகமே சிண்டைப் பிய்த்துக் கொண்டிருப்பது அனைவரும் அறிந்ததே. அந்தப் பிரச்னை, பற்றிக் கூட வகுப்புகள் நடத்தப்படுகின்றன. ஆனால் அவை இன்னும் பிக்-அப் ஆகவில்லை என்கிறார்கள்.

மேற்குறிப்பிட்டவை தவிர சைபேஸ், ஜாவா, என்று இன்னும் சிலவும் உண்டு.

இவை இன்றைய உலகில் மிக

முக்கியமானவை என்பதால், இவை பற்றிய அறிவு கட்டாயம் தேவை. இன்னொரு விஷயம். கம்ப்யூட்டர் பற்றிய பயிற்சிகளில், ஏதோ குறிப்பிட்ட ஒன்றிரண்டை மட்டும் குறுகிய காலப் பயிற்சியாகப் படித்து விட்டு, கம்ப்யூட்டரை எளிதில் கையாண்டு விடலாம் என்பதோ, வேலைக்குப் போய் விடலாம் என்பதோ சாத்தியமில்லை. வேகமாக வளர்ந்து வரும் கம்ப்யூட்டர் துறையில், இன்றைய நிலவரம் என்ன என்பதை அறிந்து அதற்கேற்ப பயிற்சி பெறுவதுதான் உசிதம்.

கம்ப்யூட்டர்கள் பற்றிய பொதுவான மற்றும் கம்ப்யூட்டர் கல்வி பற்றிக் குறிப்பாக உங்களுடைய சந்தேகங்கள், தேவைப்படும் விவரங்களை இந்தியாவின் முன்னணி கம்ப்யூட்டர் பயிற்சி நிறுவனமான என்.ஐ.ஐ.டி. தீர்த்து வைக்க முன்வந்துள்ளது. எனவே, கீழே கொடுக்கப்பட்டுள்ள கூப்பனைப் பயன்படுத்தி பயன்பெற அழைக்கிறோம்.

தொகுப்பு : **கௌதம்**

அட்டையில் : **செல்வி மேத்தா**

வண்ணப்படம் : **பிரவீண் குமார்**

பெயர் :..............................................................................................

கல்வித் தகுதி :..............................................................................

உங்கள் சந்தேகம்/தேவைப்படும் விளக்கம் :

கையெழுத்து :..................................................................................

கூப்பன் அனுப்ப வேண்டிய முகவரி :

NIIT,

33/1, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை,

சென்னை – 600 034. போன் : 8277317/8277517

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS(S)M4392/98 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN/MS/(S) 161 * Registered as a Newspaper in Srilanka * Supplement to Kalki 14.6.98

இந்த இலவச இணைப்பை
அன்பளிப்பாக வழங்குபவர்கள் :

NIIT
LIMITED

